# தென்னிந்திய
# செங்குந்த மகாஜன சங்கம்

## சிறப்பு மலர்

Aykan

16 ஆவது மாநில மாநாடு. தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்



செங்குந்தர்களின்
குலத்தொழில் நெசவு
சிறந்த நெசவாளர்களின்
சீரிய படைப்பு








பளயகாட்ஸ்

# சங்கு மார்க்

## லுங்கிகள்
## கைக்குட்டைகள்



தயாரிப்பாளர்கள்:

## மதறாஸ் பளயகாட் கம்பெனி(பி)லிட்.

88, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-600 001.
போன்: 52 3040, 524221



கிளை: 96, ரபிந்திர சாரணி,
கல்கத்தா-700 073.
போன்: 25-9487



உ

# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

**சமூக, நெசவாளர், மகளிர், இளைஞர்**

**16-ஆவது**






# சிறப்பு மலர்

**ஜூலை 27, 28 - 1991**



வெளியிடுவோர் :

## தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்

கூறைநாடு, மயிலாடுதுறை - 609 002.



பதிப்பு:

தஞ்சை ஜில்லா
செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்
கூறைநாடு, மயிலாடுதுறை – 609 002.

இறைவணக்கம்

திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர விண்மணி யாவுரை
விகட சக்கரன் மெய்பதம் போற்றுவாம்

— கந்தபுராணம்.

வெளியிட்ட நாள்:
பிரஜோற்பத்தி ஆண்டு
ஆடி மாதம் 11, 12ஆம் நாட்கள்
ஜுலைத்திங்கள் 27, 28 - 1991

அச்சிட்டோர்:
லெட்சுமி பிரிண்டர்ஸ்,
மயிலாடுதுறை.

# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்




## சிறப்பு மலர்

மூலமாக எங்களின் இதய வாழ்த்துக்கள்

துவக்கம்:
1948




போன்:
512573

## அய்க்கன்-வர்த்தக ஓவியர்

203, லிங்கி செட்டி தெரு, சென்னை-600 001.

## மலரின் உள்ளே . . .

## சிறப்புச் செங்குந்தர்கள் வரலாறு



## தொண்டாற்றும் தொண்டர்கள்

## கட்டுரைகள்



## பொதுக் குறிப்புகள்



## மாவட்ட சங்க அறிக்கைகள்

**நிறைவுரை**

# இவ்வழகு மலர்

**தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின்**

**சமூக, நெசவாளர், மகளிர், இளைஞர் 16-ஆவது மாநில மாநாட்டை**

பிரஜோற்பத்தி ஆண்டு ஆடித்திங்கள் 11, 12ஆம் நாட்களில்
(ஜூலைத் திங்கள் 27, 28 - 1991இல்)

கும்பகோணம் நகர மேல்நிலைப் பள்ளி விளையாட்டுத் திடலில்

செங்குந்தர்குல தளபதி
**திருவாரூர் தெ. சேதுராமன் வளாகத்தில்**
தியாகி ஆக்கூர் **சு. இராமலிங்கனார்** அரங்கில்

நெசவாளர் நேசன்
**ஜெ. சுத்தானந்தன்,** B.Sc. அவர்கள்
தலைமையில்

திருப்பணிச் செம்மல்
மன்னார்குடி **டி. எஸ். சுவாமிநாத உடையார்** அவர்கள்
தொடங்கி வைத்தபொழுது

**மலர்த்தப் பெற்றது.**



மலரை மலர்த்தியவர்:
சென்னை **திரு. சி. கே. குமாரசாமி செங்குந்தர்,** M.A.

முதற்படியைப் பெறுபவர்:
கோவை **திரு. V. V. C. RM. கந்தசாமி செங்குந்தர்,** B.Sc.







# மலர்க்குழு

—o—

1. திரு. ஜெ. சுத்தானந்த செங்குந்தர், B.Sc., மாநில தலைவர், ஈரோடு
2. ,, டாக்டர். தி.ரா. செல்வராஜன், M.A., M.Lit., Ph.D மாநில பொதுச்செயலர், சென்னை
3. ,, ஆர்.என். சந்தானராஜகோபால செங்குந்தர், மாவட்ட தலைவர், மன்னார்குடி
4. ,, தெ. சம்பந்த செங்குந்தர், மாவட்ட பொருளாளர், சீர்காழி
5. ,, ச.கு.பா. பழநிவேல் செங்குந்தர், மாவட்ட பொதுச்செயலர், கூறைநாடு
6. ,, க. திருஞானசம்பந்த செங்குந்தர், மாவட்ட செயலர், செம்பனார்கோயில்
7. ,, ந. விநாயகமூர்த்தி செங்குந்தர், B.A., B.Ed., மாவட்ட செயலர், குடவாசல்
8. ,, கவிஞர் தெட்சணாமூர்த்தி செங்குந்தர், M.A., B.Ed., செம்பனார்கோயில்
9. ,, செக. தியாகராஜ செங்குந்தர், B.Lit., B.Ed., செம்பனார்கோயில்
10. ,, ஆர். மாசிலாமணி செங்குந்தர், M.A., (M.Phil) கூறைநாடு
11. ,, தெ. இராமலிங்க செங்குந்தர், M.A., M.Ed., கூறைநாடு
12. ,, நா. திருநாவுக்கரசு செங்குந்தர், M.A., M.Ed., சீர்காழி
13. ,, புலவர் சு. சுவாமிநாத செங்குந்தர், B.Lit., B.Ed., குடவாசல்
14. ,, மாணிக்க கணபதி செங்குந்தர் M.A., M.O.L., B.Ed., மன்னார்குடி
15. ,, வீ. தங்கராசு செங்குந்தர், கும்பகோணம்
16. ,, கு. இராஜமாணிக்க செங்குந்தர், கூறைநாடு

உ

# காணிக்கை

இராவினிருள் போலும் பராவுகுழ லாலும்
இராமசர மாகும் விழியாலும்

இராகமொழி யாலும் பொறாதமுலை யாலும்
இராதஇடை யாலும் இளையோர்நெஞ்

சராவியிரு போதும் பராவிவிழ வேவந்
தடாதவிலை கூறும் மடவாரன்

படாமலடி யேனுஞ் சுவாமியடி தேடும்
அநாதிமொழி ஞானந் தருவாயே

குராவினிழல் மேவும் குமாரனென நாளும்
குலாவியினி தோதன் பினர்வாழ்வே

குணாலமிடு சூரன் பணாமுடிக டோறும்
குடாவியிட வேலங் கெறிவோனே

துராலுமிகு தீமுன் பிராதவகை போலும்
தொடாமல்வினை யோடும் படிநாறுஞ்

சுபானுமுறு ஞானந் தபோதனர்கள் சேருஞ்
சுவாமிமலை வாழும் பெருமாளே.

— திருப்புகழ்



சுவாமிமலை வீற்றிருக்கும் சுவமி நாதா — நின்
திருவடிகள் போற்றிநிதம் வணங்கு வோமே.

– தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்,
தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்.



அருள்மிகு சுவாமிநாத சுவாமி
சுவாமிமலை

ஜெ. சுந்தானந்தன்,
தலைவர்,
தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்.

சென்னை,
11—7—91.

# வாழ்த்துரை

செங்குந்தர்களின் வரலாற்றுடன் இணைந்த சோழநாட்டில் அமைந்துள்ள வரலாற்றுப் புகழ் மிக்க குடந்தை மாநகரில் செங்குந்தர்களின் 16-ஆவது மாநில மாநாடு நடைபெறுகிறது.

நம்மினத்தின் எதிர்காலம் கேள்விக் குறியாக இருக்கும் இந்த நேரத்தில் நடைபெறும் இந்த மாநாடு நமக்கு ஒரு திருப்பு முனையாக அமையும் என்று நம்புகிறேன்.

கல்வி, வேலைவாய்ப்பு, பொருளாதாரம், தொழில், அரசியல் என்று எல்லா நிலையிலும் பின்தங்கி இருக்கும் நம்மினம் முன்னேற நாம் சில ஆக்கபூர்வமான முடிவுகளை எடுக்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கின்றோம்.

எனவே, அறிவிலும் அனுபவத்திலும் சிறந்த நம் குலப் பெரியவர்கள் தக்க முடிவுகளை மேற்கொள்ள உற்ற துணையாக இருந்து மாநாட்டின் வெற்றிக்கு உதவ வேண்டுகிறேன்.

செங்குந்தர்களின் வளமான வாழ்வுக்கு வழி வகுத்திடும் மாநாடும், மலரும் சிறக்க எல்லாம் வல்ல செந்தில் கந்தப் பெருமானை வேண்டி என்னுடைய நல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்களன்புள்ள,
ஜெ. சுத்தானந்தன்

உ

சிவமயம்

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

திருக்கயிலாய பரம்பரைத் திருக்கோவலூராதினம், திருப்பாதிரிப்புலியூர்
ஸ்ரீமத் ஞானியார் மடாலயம்

**ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள்**

செங்குந்தர் பதினாறாவது மாநில மாநாட்டுக்கு வழங்கிய

# அருளுரை

"செய்யும் தொழிலனைத்தும் சீர்தூக்கிப் பார்க்குங்கால்
நெய்யும் தொழிலுக்கு நிகரில்லை — வையகத்தில்
தெள்ளு தமிழ்வேதம் செப்பிஅந்நாள் சீர்படுத்தும்
வள்ளுவனார் கொண்டதல்ல வா?"

என்ற வண்ணச் சரபத்தின் புகழ் மொழிக்கேற்ப, அத்தொழிலைக் குலத் தொழிலாக உடைய செங்குந்தர், தன்னலமொன்றையே நாடியும், உழைப் போர் உயர்வுக்கு உதவாமலும் கெட்டுக் கிடக்கும் சமுதாயச் சூழலில் அல்லற்பட்டு ஆற்றாது அலமராமல் வாழ்வினுக்கு இன்றியமையாதன வற்றையேனும் அரசியலாரிடமிருந்து பெற ஒன்றுகூடி வாதிட்டுப் பிறர் போலவேனும் பெறுதலை இன்றியமையாத கடமையாக ஏற்று வாதாட உரிமையுண்டு.

'அழுத பிள்ளை தான் பால் குடிக்கும்' என்று உள்ள சமுதாயத்திலே, அரசே எல்லாப் பொறுப்புகளையும் ஏற்றுள்ள சமுதாயத்திலே ஆக்கம்பெற அனைவரும் கூடிக்கேட்பதே ஏற்புடையதாகிறது.

நானில வாழ்வில் தெய்வ — முருகப் பற்று நீங்காமல் வாழ்வாங்கு வாழ்ந்து செம்மை நலம் பெற்று, வானுறையும் தெய்வத்துள் வைக்கப்பெற முயற்சி ஒவ்வொருவருக்கும் அமைதல் பிறவிப் பயன்.

அந்தத்துறை நிற்கவும் இறையன்புக்கு ஆளாகவும் யாவர்க்கும் திருவருள் சுரக்குமாறு எம் மடாலய முதற் குருநாதர் திருவடிகளையும், வழிபடு கடவுள் செவ்வேட்பரமன் சேவடிகளையும் வழுத்தி வாழ்த்து கூறுகிறோம்.

சிவ சிவ சிவ     உ     சிவ சிவ சிவ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

மௌன தேசிகர் திருவடி வாழ்க

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகர் திருவடி வாழ்க.


ஸ்ரீ மௌன தேசிகர் ஆதீன
அதீன கர்த்தர்
**ஸ்ரீலஸ்ரீ மௌன சுந்தரமூர்த்தி சுவாமிகள்**

ஸ்ரீ மௌன சுவாமி மடம்,
சபாநாயகர் வீதி,
சிதம்பரம் - 608 001.


சிற்சபை பொலியத் திருநடம் புரியும்
அற்புதக் கூத்த னடியினை மறவாத

ச. கு. பா. பழநிவேல் செங்குந்தர் அவர்கட்குச் சிவஞானப் பெருஞ்செல்வம் முதலியன மேன்மேலாகுக.

தென்னிந்திய செங்குந்தர் 16ஆவது மாநில சமூக, கைத்தறி, மகளிர், இளைஞர் மாநாடுகள் நடைபெறவிருப்பது அறிந்து மகிழ்கிறோம்.

மாநாடு பல்லாற்றானும் பொலிவுடனும், சிறப்புடனும் அமையவும், அதையொட்டி வெளியிட உள்ள மாநாட்டு மலர் ஏற்றமிகு கருத்துக்களை இனிது வழங்கும் நிலையில் அமையவும், எல்லாம் வல்ல ஸ்ரீமத் ஆனந்த நடராஜப் பெருமான் துணை நிற்க ஸ்ரீமௌன தேசிகர் தாண் மலர்களைச் சிந்திக்கின்றோம்.

அன்புடன்,

**மௌன சுந்தரமூர்த்தி சுவாமிகள்**

உ
முருகா

குடியாத்தம்,
15—3—91



# வாழ்த்து

### நேரிசை வெண்பா

வாழிய செங்குந்தர் மாண்புமிகு மாநாடு
ஆழிநிகர் அன்புடையார் ஆண்மையார் — காழியுறை
கந்தன் கருணையினால் காசினியில் ஓங்கியே
செந்தமிழ்போல வாழ்க செழித்து.

அன்பன்
**கிருபானந்தவாரி**

சி. காந்திதாஸ், M.A., B.L.,
தலைவர்.

மதுரை மாவட்ட செங்குந்தர்
மகாசன சங்கம், மதுரை.
18—3—91

## வாழ்த்துரை

தஞ்சை மாவட்டம் கும்பகோணத்தில் நடைபெறும் 16-ஆவது செங்குந்தர் மாநில மாநாடு நடைபெறுவதை ஒட்டி, சிறப்பு மலர் வெளியிடுவது அறிந்து மட்டிலா மகிழ்ச்சி.

மாநில மாநாடு சிறக்கவும், மலர் மணம் பரப்பவும் மதுரை மாவட்ட சங்கத்தின் சார்பில் இதயம் கனிந்த பாராட்டுகளையும் வாழ்த்துகளையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

மலர் செங்குந்தர் சமுதாயத்தின் சாதனைகளையும், புகழையும் அளவிடற்கரிய சிறப்புக்களையும் பரப்பும் விதத்தில் சிறப்புற அமைய நல் வாழ்த்துக்கள்.

தமிழ் அறிஞர்களின் இலக்கியச் செறிவுடன் கூடிய கட்டுரைகள் மலரில் இடம் பெறுவது சிறப்பாக இருக்கும்.

'வாழ்க செங்குந்தர்'.

**சி. காந்திதாஸ்,**
தலைவர்.

Justice T. N. SINGARAVELU

"RASI KANYA"
55, Fifth Street, Padmanaba Nagar,
Adyar, MADRAS - 600 020.
Phone: 414439, 410256

*Date:* 12—3—91

# வாழ்த்துரை

தென்னிந்திய செங்குந்தர் மாநில 16-ஆவது மகாநாடு திருக்குடந்தையில் நடக்கவிருப்பது மிகவும் வரவேற்கத்தக்கது செங்குந்தர் இனம் நீண்ட நித்திரையிலிருந்து சமீபகாலமாக விழித்தெழுந்து, நம் சமுதாயத்தை மேம்படுத்த சங்கல்பம் செய்து கொண்டு தீவிரமாகப் பணியாற்றி வருகிறார்கள் என்பது வெளிப்படை. தம்மை அர்ப்பணித்துக் கொண்டு செங்குந்தர் குலத்துக்குச் சேவை செய்யும் நம் தலைவர், தேசபக்தர், பரம்பரை வழியாக வாழ்வாங்கு வாழும் நேர்மையாளர், உயர்திரு ஜெ. சுத்தானந்தன் அவர்களும், உழைப்பால் திறத்தால் உயர்ந்த உத்தமர், பேராசிரியர், தமிழ் முனைவர், ஆடம்பரமின்றி அமைதியாகப் பணியாற்றும் நம் சங்கப் பொதுச் செயலர் டாக்டர். செல்வராசன் அவர்களும், கடமை கண்ணியம் கட்டுப்பாடு தவறாது நாளும் பொது நலம் நாடும் தஞ்சைச் செம்மல் என் நீண்டகால குடும்ப நண்பர் உயர்திரு. R.N. சந்தான ராஜகோபாலன் அவர்களும் நம் இனவளர்ச்சிக்கு பெரிதும் பாடுபடும் முன்னணி வீரர்கள், அவர்கள் அரவணைப்பில் நடைபெறும் 16-ஆவது மகாநாடு மங்களகரமான சுப நிகழ்ச்சியாகவும், ஒரு எடுத்துக்காட்டாகவும் இருக்கும் என்று உறுதியாக நம்பலாம்.

நம் இனத்தவர் கல்வியிலும், தொழிலிலும், தனிப்பட்ட முறையில் முன்னேறிவரினும், இன ஒற்றுமை, கூட்டு உழைப்பு, திருந்திய முற்போக்கு, சாஸ்திரீய சுபாவம் (Scientific temper), முதலிய உயர்ந்த பண்புகள், மற்ற சமூகத்தினரை விட நம்மிடம் அதிகமாகக் காணவில்லை என்ற குறை இருந்து வருகிறது. அந்தக் குறையை நிறையாக்கும் பணியை இந்த 16-ஆவது மாநாடு மேற்கொள்ள வேண்டும். இந்த வெகு வேகமான கலாச்சாரத்தில் நம் சமூகம் பிழைத்திருப்பதற்கு (Survival) இச்சீர்த்திருத்தம் முன்பைவிட தற்போது மிக மிக அவசியம் என்பதை உணர்த்த வேண்டும் என்பது என் வேண்டுகோள். "இனி ஒரு விதி செய்வோம், அதை எந்நாளும் காப்போம்" என்று நாம் பிரமாணம் எடுத்துக் கொள்வோம்.

பணிவுடன்,
T. N. சிங்காரவேலு.

13—3—91

புலவர் கா. கோவிந்தன்,
திருவத்திபுரம்.

# வாழ்த்துரை

தென்னிந்திய செங்குந்தர் 16-ஆவது மாநில சமூக, கைத்தறி, மகளிர், இளைஞர்கள் மாநாடுகள் நடைபெறுவது அறிந்தும் அது தொடர்பாக மலர் ஒன்று வெளியிட இருப்பது அறிந்தும் மகிழ்ச்சி.

ஐந்தாவது மாநில மாநாடு 1935-இல் நடை பெற்ற செய்யாற்றில் பிறந்தவன் என்ற பெருமையோடு, என் கருத்துக்கள் சிலவற்றை எடுத்து வைக்கக் கடமைப் பட்டுள்ளேன்.

செங்குந்த மகாஜன சங்கம் தொடங்கி இத்தனை ஆண்டுகள் ஆகியும் நடைபெறுவது 16-ஆவது மாநாடுதான் என அறிந்து வருந்துகின்றேன். பாண்டி நாட்டுச் செங்குந்தர் தனி, சோழ நாட்டுச் செங்குந்தர் தனி, சேர நாட்டுச் செங்குந்தர் தனி, தொண்டை நாட்டுச் செங்குந்தர் தனி என்ற நிலையில் எவ்விதப் பெரு மாற்றமும் இல்லை. இது தவிர்க்கப்பட வேண்டும்.

தொடங்கி இத்தனை ஆண்டுகள் ஆகியும் தலைமையிடம் அரண்மனைக் காரன் தெரு பழைய கட்டிடத்தை விட்டு அகலவில்லை. புதிய தலைமையிடமும், நம் குல மாணவர் விடுதியும் கட்டப்பட வேண்டும்.

உயர் பதவி பெற்றுள்ள நம் குலத்தைச் சார்ந்தவர்கள், பதவிக்கு வந்ததும் நம்மவர்களை மறந்துவிடும் நிலை மாற்றப்பட வேண்டும். நாடாளு மன்றம், மற்றும் சட்டமன்றத் தேர்தல்கள் வந்தால், நம்குல வேட்பாளர் எக்கட்சியினராயினும், அவர்கள் வெற்றிபெறத் துணை புரியாமல், எப்படியோ வெற்றி பெற்று வந்துவிட்டால் அழைத்துப் பாராட்டு மட்டும் நடத்துகின்ற முறை மாற்றப்பட வேண்டும்.

நடைபெற இருக்கும் மாநாடு இவற்றிற்கெல்லாம் வழிவகை காண வேண்டும் என்ற வேண்டுகோளோடு என் வாழ்த்தை வழங்குகின்றேன்.

அன்பன்,
கா. கோவிந்தன்.

ஆ. ராஜவேலு,
துணைப் பொதுச்செயலர்,
தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம், சென்னை.

பெண்ணாடம்
23—3—91

# வெல்லட்டும் செங்குந்தம்

உறவினர்களே வணக்கம்.

தென்னிந்திய செங்குந்தர் 16-ஆவது மாநில சமூக, கைத்தறி, மகளிர், இளைஞர், மாநாடு தஞ்சை மாவட்ட செங்குந்தர் கல்வி சங்க சார்பாக கும்பகோணத்தில் நடக்க உள்ளது கண்டு பெருமகிழ்ச்சி அடைகிறேன். மாநாடு சிறப்பாக நடைபெற வாழ்த்துகிறேன்.

எந்த சமுதாயத்திற்கும் சங்கம் இல்லா காலத்தில் சங்கத்தை நிறுவி, சொத்துக்களையும் வாங்கி வைத்த வள்ளல் சபாபதி செங்குந்தர் அவதரித்த தஞ்சை மாவட்டத்தில் மாநிலத்திலேயே முதலில் தோன்றிய மாவட்ட சங்கமும், முதன்மையான மாவட்ட சங்கத்தின் சார்பில் மாநாடு நடை பெறுவதும் வரலாற்று சிறப்பு மிக்கதாகும்.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தோடு 53 ஆண்டுகாலம் தொடர்புடைய செம்மல், எங்களது வழிகாட்டி, செங்குந்தர்களின் நெஞ்சில் நீங்கா இடம் பெற்றுள்ள திரு. ச.கு.பா. பழநிவேல் அவர்கள் அமைதியே உருவான செயல் ஆற்றல் மிக்க தலைவர் திரு. ஆர்.என். சந்தான ராஜ கோபாலன் அவர்கள் சிரிய தலைமையில் வெளிவரும் மாநாட்டு மலர் செங்குந்தர்களின் பொக்கிஷமாகவும் உயிர் துடிப்பாகவும் அமைய வாழ்த்தி வணங்குகிறேன்.

வெல்லட்டும் செங்குந்தம்! வளரட்டும் செங்குந்தர் ஒற்றுமை!

உ

வாழ்க வையகம்!  வாழ்க வளமுடன்!

# வாழும் வகையறிந்து வாழ்ந்து நலம் பெறுவீர்!

**திருக்கோயிலூர் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஞானானந்த குருஜி காட்டும் நல்வழி**

| | | |
|---|---|---|
| சுறுசுறுப்பாயிரு | ஆனால் | படபடப்பாயிராதே |
| பொறுமையாயிரு | ஆனால் | சோம்பலாயிராதே |
| சிக்கனமாயிரு | ஆனால் | கருமியாயிராதே |
| அன்பாயிரு | ஆனால் | அடிமையாயிராதே |
| இரக்கங்காட்டு | ஆனால் | ஏமாந்துபோகாதே |
| கொடையாளியாயிரு | ஆனால் | ஓட்டாண்டியாய்விடாதே |
| வீரனாயிரு | ஆனால் | போக்கிரியாயிராதே |
| இல்லறத்தை நடத்து | ஆனால் | காமவெறியனாயிராதே |
| பற்றற்றிரு | ஆனால் | காட்டுக்குப்போய்விடாதே |
| நல்லவரை நாடு | ஆனால் | அல்லோரை வெறுக்காதே |

உண்மையாய் ஒழுகினால் உயர்வடைவாய்
உள்ளத்திற்கு நீ அடிமையானால், உலகத்திற்கு நீ அடிமையாவாய்
உன் மனம் உனக்கு அடங்கினால் உலகம் உனக்கு அடங்கும்
உன்னைப் பிறர் நேசிக்கவேண்டுமா? நீ பிறரை நேசி.
உன்னிடத்தில் பிறர் எப்படி நடந்துகொள்ள விரும்புகிறாயோ
அப்படியே நீ பிறரிடத்தில் நடந்துகொள்

மறத்தை விடு, அறத்தை நாடு — பயனடைவாய்
நீ கடவுளை உணரவேண்டுமா? அன்பாயிரு, உண்மையே சொல்,
அறிவாளியாயிரு, ஆண்மையோடிரு.

**யோகீஸ்வரர் மா மகரிஷி அருள் வாக்கு:**

அறிய வேண்டிய எண்ணம் கொண்டிரு
அறிந்து விட்டதாக எண்ணுவதை விடு
புகழ் கண்டு மயங்காதே புகழ் தேடிச் செல்லாதே
இன்னல் கண்டு கலங்காதே இகழ்ச்சி கண்டு பதறாதே
இகழ்ந்துரைக்க எண்ணாதே

அன்புடன்,

**தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்.**

உ

வெல்க செங்குந்தம்!



வாழ்க வளமுடன்!

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

# 16-ஆவது

# சமூக, நெசவாளர், மகளிர், இளைஞர், மாநில மாநாடு

# அழைப்பிதழ்

அன்புடையீர், வணக்கம்.

நாளது 1991ஆம் ஆண்டு ஜுலைத் திங்கள் 27, 28 சனி, ஞாயிறு ஆகிய நாட்களில் தஞ்சை மாவட்டம் கும்பகோணம் நகர மேல்நிலைப் பள்ளி விளையாட்டுத் திடலில் அமைந்துள்ள செங்குந்தர்குல தளபதி திரு ஆரூர் தெ. சேதுராமன் வளாகத்தில், ஆக்கூர் தியாகி இராமலிங்கனார் அரங்கில் 16ஆவது சமூக, நெசவாளர், மகளிர், இளைஞர், மாநில மாநாடு நடைபெறும். அனைவரும் குடும்பத்துடன் வருகை தந்து சிறப்பிக்க வேண்டுகிறோம்.

அன்புள்ள,

**ஜெ. சுத்தானந்தன்,** B.Sc.,
*மாநில சங்கத் தலைவர்.*

**ஆர்.என். சந்தானராஜகோபாலன்,**
*மாநாட்டு வரவேற்புக்குழுத் தலைவர்.*

**டாக்டர் தி. ரா. செல்வராசன்,**
M.A., M.Lit., Ph.D.
*மாநில சங்க பொதுச்செயலர்.*

**ச. கு. பா. பழநிவேல்,**
*மாநில மாநாட்டு*
*நிர்வாக பொதுச்செயலர்.*

**மற்றும் மாநாட்டு வரவேற்புக் குழுவினர்**

## நிகழ்ச்சி நிரல்

27—7—91 சனிக்கிழமை காலை 8-45 மணி

**பேரணி:**

தொடங்குமிடம்: கும்பேஸ்வரர் மேலவீதி

பேரணியை தொடக்கி வைப்பவர்: திரு. வை. ஆனந்த செங்குந்தர், தலைவர், தென்னாற்காடு (தெற்கு) மாவட்டம், கடலூர்.

ஊர்வல தளபதி: திரு. மேஜர். என். ஆறுமுகம், வலங்கைமான்.

தொண்டர் படைத் தலைவர்: திரு. வ. தண்டபாணி, M.Sc., M.Ed., கதிராமங்கலம்.

**சமூக மாநாடு - கொடியேற்றுதல் - காலை 11-00 மணி**

குலக்கொடியேற்றுதல்: திரு. கே.எம். கோவிந்தராசன் செங்குந்தர், தலைவர், வடாற்காடு அம்பேத்கார் மாவட்டம், குடியாத்தம்.

கொடி வணக்கம்: புலவர் தென்னவன், M.A., B.Ed, செம்பனார்கோயில்.

இறை வணக்கம்: திரு. பா. இராசமாணிக்க ஓதுவார், திருநாகேஸ்வரம்.

தலைவர்: நெசவாளர் நேசன் திரு. ஜெ. சுத்தானந்தன், B.Sc., தலைவர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்.

திறப்பாளர்: திருப்பணிச் செம்மல் திருமிகு டி.எஸ். சுவாமிநாத உடையார், மன்னார்குடி.

முன்னிலை: திரு. சி. காந்திதாஸ் செங்குந்தர், M.A., B.L., தலைவர், மதுரை மாவட்டம்
திரு. பி. இராமசாமி செங்குந்தர், B.A., B.L., தலைவர், சேலம் மாவட்டம்
திரு. என். திருவேங்கடசாமி செங்குந்தர், தலைவர், கோவை மாவட்டம்

வரவேற்புரை: திரு. ஆர். என். சந்தானராஜகோபால செங்குந்தர், தலைவர், தஞ்சை மாவட்டம்.

செயல்பாட்டு அறிக்கை: திரு. எம். பி. பாண்டுரெங்கன் செங்குந்தர், B.Com., மாநில துணைப் பொதுச்செயலர்.

(பிற்பகல் மணி 1 முதல் 3 வரை இயக்கப் பாடல்கள்)

**பிற்பகல் நிகழ்ச்சி:** படத்திறப்பு - 3-00 மணி

1. **பாவேந்தர் பாரதிதாசன்**
   பல்கலைச் செல்வர் திரு. நா. கோவிந்தசாமி செங்குந்தர், தலைவர், புதுவை நிலவறை ஒன்றியம், புதுச்சேரி.
2. **திருப்பூர் குமரன்**
   இலக்கியச் செல்வர் திரு. த. விஸ்வநாதன் செங்குந்தர், ஈரோடு.

3. கைத்தறிக் காவலர் பத்மஸ்ரீ எம்.பி. நாச்சிமுத்து
திரு. எம்.எம். தணிகைமலை செங்குந்தர், மாநில துணைத் தலைவர்.

4. தில்லையாடி வள்ளியம்மை
திருமதி. திலகவதி சண்முகசுந்தரம், M.A., B.Ed.,
கோவை மாவட்ட செயற்குழு உறுப்பினர்.

5. செங்குந்தர்குல தளபதி அரிமா தெ. சேதுராமன்
டாக்டர் தி.ரா. செல்வராசன், M.A., M.Lit. Ph.D., மாநில பொதுச்செயலர்.

மலர் வெளியிடுபவர்:

திரு. சி. கே. குமாரசுவாமி செங்குந்தர், M.A., சென்னை.

மலர் பெற்றுக்கொள்பவர்:

திரு. V.V.C.RM. கந்தசாமி செங்குந்தர், சிறப்புத் தலைவர், கோவை மாவட்டம்.

விருது பெற்றோர் மற்றும் சமுதாய தொண்டர்களுக்குப் பாராட்டு.

பாராட்டுபவர்:

மாண்புமிகு டி.என். சிங்காரவேலு செங்குந்தர், B.A., B.L.,
சென்னை உயர்நீதி மன்ற முன்னாள் நீதி அரசர்.

பாராட்டுப் பெறுவோர்கள்:

விருது பெற்றோர்கள்:

1. திரு. சுந்தர சண்முகனார் — திருவள்ளுவர் விருது
2. கவிஞர் திரு. தமிழன்பன் — பாரதிதாசனார் விருது
3. கவிஞர் திரு. முருகுசுந்தரம் — பாரதிதாசனார் விருது

சமுதாய தொண்டர்கள்:

1. திரு. எம்.எஸ். அய்யம்பெருமாள் செங்குந்தர், தருமபுரி.
2. ,, அ. அருணாசல செங்குந்தர், மேலப்பாதி.
3. ,, என். திருநாவுக்கரசு செங்குந்தர், நெய்வேலி.
4. ,, அ.நா. சண்முக செங்குந்தர், சேலம்.
5. ,, டாக்டர் மா. அருள்மணி செங்குந்தர், பரமத்தி.
6. ,, ப. சொக்கநாத செங்குந்தர், மதுரை.

வாழ்த்துரை வழங்குவோர்:

1. திரு. ஏ.வி.ஆர்.எம்.வி. சங்கரநாராயண செங்குந்தர்,
மாநில புரவலர், அம்பாசமுத்திரம்.
2. ,, சி. கே. குமாரசாமி செங்குந்தர், M.A , மாநில புரவலர், சென்னை.

3. திரு. எம். எஸ். ரெங்கையா செங்குந்தர், B.A., மாநில பொருளாளர், சென்னை.
4. ,, சரவணபழநிவேல் செங்குந்தர், B.Com.,
மாநில துணைப் பொதுச்செயலர், சென்னை.
5. ,, கே.எஸ். மணியம் செங்குந்தர், சிங்கப்பூர்.
6. ,, ஆ.சு. செல்வரெத்தின செங்குந்தர், இலங்கை.
7. ,, கே.எஸ். கல்யாணசுந்தரம் செங்குந்தர், மண்டல செயலர், திருவத்திபுரம்
8. ,, புலவர் ப. தங்கவேல் செங்குந்தர், மண்டல செயலர், கள்ளக்குறிச்சி.
9. ,, ஏ. நடராச செங்குந்தர், மண்டல செயலர், நீலமலைக்கோட்டை.
10. ,, எஸ்.டி. பொன்னுசாமி செங்குந்தர், தலைவர், சென்னைப் பெருநகர்.
11. ,, ஜி.எஸ். துரைசாமி செங்குந்தர், தலைவர், செங்கை அண்ணா.
12. ,, ஆர்.என். சாமி செங்குந்தர், தலைவர், திருவண்ணாமலை சம்புவராயர்.
13. ,, சி. பழநிவேல் செங்குந்தர், தலைவர், தென்னாற்காடு (வடக்கு).
14. ,, எம்.ஆர். பழநியாண்டி செங்குந்தர், தலைவர், திருச்சி.
15. ,, இ. தனசீலன் செங்குந்தர், தலைவர், இராமநாதபுரம்.
16. ,, அ. செல்லையா செங்குந்தர், தலைவர், காமராசர்.
17. ,, எஸ்.வி.ஆர்எம்.ஏ. நடராச செங்குந்தர், தலைவர், நெல்லை கட்டபொம்மன்.
18. ,, வே. பழநியாண்டி செங்குந்தர், தலைவர், கன்னியாகுமரி.
19. ,, சி. குப்புசாமி செங்குந்தர், தலைவர், திண்டுக்கல்.
20. ,, ஆர்.ஏ.என். முத்துச்சாமி செங்குந்தர், தலைவர், பெரியார்.
21. ,, எம். சங்கரபாண்டியன் செங்குந்தர், தலைவர், தேவர் திருமகனார்.
22. ,, எம்.கே.எஸ். உத்தண்டி செங்குந்தர், தலைவர், தருமபுரி.
23. ,, கே. நாராயண செங்குந்தர், தலைவர், சிதம்பரனார்.
24. ,, ஆர்.எம். ரெங்கசாமி செங்குந்தர், தலைவர், கர்நாடகம்.
25. ,, பி.கே. சாமிநாத செங்குந்தர் B.Com.,
பொதுச் செயலர், சென்னைப் பெருநகர்.
26. ,, ஏ. சம்பந்தம் செங்குந்தர், பொதுச்செயலர், செங்கை-அண்ணா.
27. ,, எஸ்.ஆர். நடராஜ செங்குந்தர், M.A , M.Com.,
பொதுச்செயலர், வடாற்காடு அம்பேத்கார்.
28. ,, ஏ. குப்புசாமி செங்குந்தர், பொதுச்செயலர், திருவண்ணாமலை சம்புவராயர்
29. ,, சி. அருணாசல செங்குந்தர், B.A.,L.T , பொதுச்செயலர்,
நெல்லை கட்டபொம்மன்.
30. ,, என். கிருஷ்ணசாமி செங்குந்தர், பொதுச்செயலர், கன்னியாகுமரி.
31. ,, எம்.எஸ். பழநியப்பன் செங்குந்தர், பொதுச்செயலர், பெரியார்.
32. ,, ப. துரைராஜ் செங்குந்தர், பொதுச்செயலர், சிதம்பரனார்.
33. ,, பி. சச்சிதானந்நம் செங்குந்தர், பொதுச்செயலர், தருமபுரி.

34. திரு. என்.கே. சிகாமணி செங்குந்தர், பொதுச்செயலர், கர்நாடகம்.
35. ,, கே.வி. ஞானசம்பந்தன் செங்குந்தர், ஐ.பி.எஸ். (ஓய்வு) சென்னை.
36. ,, ஆர். திருநாவுக்கரசு செங்குந்தர் B.A.,
மாநில செயற்குழு உறுப்பினர், மஞ்சக்கொல்லை.
37. ,, என். நடராச செங்குந்தர், மாநில செயற்குழு உறுப்பினர்,
ஆவராணிபுதுச்சேரி.
38. ,, செ. முருகேச செங்குந்தர், மாநில செயற்குழு உறுப்பினர், நாங்கூர்.
39. ,, தெ. சம்பந்தம் செங்குந்தர், சீர்காழி, பொருளாளர், தஞ்சை.
40. ,, அ. கந்தசாமி செங்குந்தர், கும்பகோணம்.
41. ,, கே. ராக்குமுத்து செங்குந்தர், கும்பகோணம்.

நன்றியுரை:

திரு. ச.கு.பா. பழநிவேல் செங்குந்தர், மாநாட்டு நிர்வாக பொதுச் செயலர்.

## நெசவாளர் மாநாடு

28—7—91 ஞாயிறு காலை 9-00 மணி

இறை வணக்கம் : திரு. சொ. சண்முக ஓதுவார், திருநாகேஸ்வரம்.

தலைமை: திரு. இ.எஸ். தியாகராஜ செங்குந்தர், (Ex. M.L.A., பொதட்டூர் பேட்டை.)

முன்னிலை: திரு. வேலவர் டி.எஸ். சுப்ரமணிய செங்குந்தர், சென்னை.
திரு. பா.கா. ஆறுமுக செங்குந்தர், தலைவர், ஆந்திர மாநிலம்.
திரு. பி.எஸ். சுந்தரேச செங்குந்தர், திருநாகேஸ்வரம்.

திறப்பாளர்: மாண்புமிகு இ. மதுசூதனன் அவர்கள்,
தமிழக கைத்தறித் துறை அமைச்சர்.

வரவேற்புரை: நெசவாளர் நேசன்
திரு. ஜெ. சுத்தானந்தன் B.Sc., மாநிலத்தலைவர், ஈரோடு.

சிறப்புரை: திரு. மணிசங்கர் அய்யர், M.P., மயிலாடுதுறை.
திரு. ராம. ராமநாதன், M.L.A., கும்பகோணம்.
திரு. ஏ. தேவராஜன், M.L.A., செய்யாறு.
திரு. ஏ.கே.சி. சுந்தரவேல், M.L.A., திருப்பத்தூர்.
திரு. எம். பாலசுப்ரமணியம், M.A., M.L.A., பாண்டிச்சேரி.

வாழ்த்துரை: திரு. எம்.பி.என். ஜெகந்நாத செங்குந்தர், B.E., தலைவர்,
சென்டெக்ஸ், சென்னிமலை.
திரு. இராஜகோபால் நாயுடு, B.A., B.L.,
உறுப்பினர், அகில இந்திய கைத்தறி போர்டு, திருபுவனம்.

திரு. எம். மாணிக்கம் செங்குந்தர், செயலர், மதுரை மாவட்டம்.

திரு. ஏ.பி. ராஜேந்திரன் செங்குந்தர், தலைவர், தமிழ்நாடு கைத்தறி உற்பத்தியாளர் சம்மேளனம், மதுரை.

திரு. டி. நாகப்பன் செங்குந்தர், குன்றத்தூர்.

நன்றியுரை: க. திருஞானசம்பந்த செங்குந்தர், செம்பனார்கோயில்.

## மகளிர் மாநாடு

28—7—91 ஞாயிற்றுக்கிழமை மாலை 1-00 மணி கவியரங்கம்

தலைமை: கவிமாமணி மழைமகன், பவானி.

பொருள்: 'சீலமிகு செங்குந்தர் வாழ்வில்...

தறி : புலவர் அ. பழநியப்பன், ஜம்பை.

நூல் : தேன்கவித் தென்றல் காஞ்சி நடராசன், கோவை.

பாவு : கவிமாமணி சேலம் பாலன், ஈரோடு.

ஊடை : சிந்தனைச்செம்மல் மல்லை மு. இராமநாதன், குமாரபாளையம்.

ஆடை : அருட்கவி திலகவதி சண்முகசுந்தரம், கோவை.

மாலை 2-30 மணி இறை வணக்கம்

தலைமை: டாக்டர் சரோஜினி சேதுராமன், M.B.B.S., D.G.O., திருவாரூர்.

முன்னிலை: திருமதி செல்லம் சுந்தரம், ஈரோடு.
டாக்டர் மகாலெட்சுமி லெட்சுமி நாராயணன், M.B.B.S., D.G.O., திருவாரூர்.

வரவேற்புரை: திருமதி முத்துலெட்சுமி இராமலிங்கம், ஆக்கூர், புரவலர், தஞ்சை.

திறப்பாளர்: திருமதி யசோதா சண்முகம், சென்னை.

வாழ்த்துரை: திருமதி சரஸ்வதி குருநாதன், மாநில செயற்குழு உறுப்பினர், புஞ்சை புளியம்பட்டி.
திருமதி வசந்தா சுத்தானந்தன், ஈரோடு.
திருமதி சரஸ்வதி செல்வராசன், கிழக்கு தாம்பரம்.
திருமதி மீனாட்சி தென்னவன், செம்பனார்கோயில்.
திருமதி அமிர்தலெட்சுமி, கரூர்.
திருமதி ஐராணி ராமநாதன், சென்னை.

நன்றியுரை: டாக்டர் வசந்தகுமாரி கல்யாணசுந்தரம், M.B.B.S., சீர்காழி.

## இளைஞர் மாநாடு

28—7—91 ஞாயிறு மாலை 4-00 மணி

தலைமை: திரு. ஆ. ராஜவேல் செங்குந்தர், மாநிலத் துணை பொதுச்செயலர், பெண்ணாடம்.

முன்னிலை: திரு. ஆர். திருநாவுக்கரசு செங்குந்தர், மாநில செயற்குழு உறுப்பினர், பாபநாசம்.

திரு. மு. சிவசண்முகம் செங்குந்தர், மாநில துணைப் பொதுச்செயலர், உடுமலைப்பேட்டை.

வரவேற்புரை: திரு. S. சோலைமுத்து, M.A.M.Ed., கும்பகோணம்.

மாநாட்டு திறப்பாளர்: டாக்டர் மு. கருணாநிதி, M.B.B.S., திருச்சி மாவட்ட பொதுச்செயலர், ஜெயங்கொண்டம்.

படத் திறப்பு: குறிஞ்சிப்பாடி அமரர் சுப்ரமணியன், தென்னாற்காடு (தெற்கு) இளைஞரணி முன்னாள் அமைப்பாளர்.

படத் திறப்பாளர்: திரு. து. பழநியாண்டி செங்குந்தர், மாநில சங்க அமைப்புச்செயலர்.

சிறப்புரை:

1. திரு. கே.கே. ராமசாமி செங்குந்தர் B.E., கோவை.
2. திரு. எஸ். தியாகராஜ செங்குந்தர் B.E., சென்னை.
3. திரு. T. ஜெகதீச செங்குந்தர் B.Sc., ஈரோடு.
4. திரு. டாக்டர் டி.கே. தேவராஜன், M.B.B.S., திருமழிசை.

வாழ்த்துரை:

1. திரு. ப. குமரகுருபரன் செங்குந்தர், தென்னாற்காடு (வடக்கு) பொதுச்செயலர்.
2. ,, மு. முனியசாமி செங்குந்தர், M.A., இராமநாதபுரம், பொதுச்செயலர்.
3. ,, என். விநாயகமூர்த்தி செங்குந்தர், B.A.B.T., தஞ்சை செயலர், குடவாசல்.
4. ,, பி.எஸ்.பி. சண்முகம் செங்குந்தர், தஞ்சை செயலர், திருநாகேஸ்வரம்.
5. ,, கோ. சிங்கார செங்குந்தர், தஞ்சை செயலர், பாமணி.
6. ,, வீ. கணபதி செங்குந்தர், தஞ்சை துணைச்செயலர், கூறைநாடு.
7. ,, சி. பக்கிரிசாமி செங்குந்தர், சிங்கப்பூர்.

8. திரு. K.R. ஆராவமுத செங்குந்தர், சென்னை.
9. ,, அ. சுப்ரமணிய செங்குந்தர், பொதுச்செயலர், காமராஜர்.
10. ,, சிங்கார ஆடியபாதம் செங்குந்தர், பொதுச்செயலர், பாண்டி.
11. ,, கரு. மலையரசன் செங்குந்தர், பொதுச்செயலர், தேவர் திருமகனார்.
12. ,, கோ.சி. கணேசன் செங்குந்தர், பொதுச் செயலர், ஆந்திரா.
13. ,, கா. தில்லைவிநாயக செங்குந்தர், மாநில செயற்குழு உறுப்பினர் திருவாரூர்.
14. ,, டி. சம்பத் செங்குந்தர், செயலர், தருமபுரி.
15. ,, இளமுருகு, கரூர்.
16. ,, கு.ப. கண்ணன், காஞ்சிபுரம்.
17. ,, கே. ஏகாம்பரம், தி.ச. மாவட்டம்.
18. ,, மணி சோமசுந்தரம் மதுரை மாவட்டம்.
19. ,, தனசேகரன் வ.ஆ(வ) மாவட்டம்.
20. ,, குமார் செங்குந்தர், காஞ்சிபுரம்.
21. ,, வி. சிவசண்முகம், ஈரோடு.
22. ,, எஸ்.எஸ். சம்பத், சென்னை.
23. ,, இராதாகிருஷ்ணன், தாரமங்கலம்.
24. ,, எம்.ஏ.டி. சேகர், மேலணிகுழி.
25. ,, இ.மா. ராமச்சந்திரன், நெல்லை கட்டபொம்மன்.
26. ,, பா. பொன்னுராசன், கோட்டாறு.
27. ,, ஏ.ஜி.வி. செல்வராஜு, காமராஜர் மாவட்டம்.
28. ,, கொடைவள்ளல் P. நடராச செங்குந்தர், திருப்பூர்.

நன்றியுரை:

திரு. சிங்கார பிரகாசம், தஞ்சை மாவட்ட இளைஞர் அணி அமைப்பாளர்.



# தென்னிந்திய செங்குந்தர் 16-ஆவது சமூக, நெசவாளர், மகளிர், இளைஞர் மாநில மாநாடு

## வரவேற்புக் குழு:

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

புரவலர்கள்:

| | | |
|---|---|---|
| 1. | அருண்மொழி அரசு டாக்டர் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள், | சென்னை |
| 2. | திரு. AV.RM.V. சங்கரநாராயண செங்குந்தர், | அம்பாசமுத்திரம் |
| 3. | ,, ஆர்.என். சந்தானராஜகோபால செங்குந்தர், | மன்னார்குடி |
| 4. | ,, சி.கே. குமாரசாமி செங்குந்தர் M.A., | சென்னை |
| 5. | ,, டி.எஸ். சுப்பிரமணிய செங்குந்தர், | சென்னை |
| 6. | ,, சி. கனகரெத்தினம் செங்குந்தர், | இலங்கை |

தலைவர்:

| | | |
|---|---|---|
| 1. | திரு. ஜெ. சுத்தானந்த செங்குந்தர் B.Sc., | ஈரோடு |

துணைத் தலைவர்கள்:

| | | |
|---|---|---|
| 2. | திரு. சி. காந்திதாஸ் செங்குந்தர் M.A.,B.L., | மதுரை |
| 3. | ,, எம்.எம். தணிகைமலை செங்குந்தர், | சென்னை |
| 4. | ,, ச.கு.பா. பழநிவேல் செங்குந்தர், | கூறைநாடு |
| 5. | ,, என். திருவேங்கடசாமி செங்குந்தர், | கோயம்புத்தூர் |

பொருளாளர்:

| | | |
|---|---|---|
| 6. | திரு. எம்.எஸ். ரெங்கையா செங்குந்தர் B.A., | சென்னை |

பொதுச்செயலர்:

| | | |
|---|---|---|
| 7. | திரு. டாக்டர் தி.ரா. செல்வராஜன் M.A., M.Lit., Ph.D., | சென்னை |

துணைப் பொதுச்செயலர்கள்:

| | | |
|---|---|---|
| 8. | திரு. சரவண பழநிவேல் செங்குந்தர் B.Com., | சென்னை |
| 9. | ,, எம்.பி. பாண்டுரங்கன் செங்குந்தர் B.Com., | சென்னை |
| 10. | ,, ஆ. இராஜவேல் செங்குந்தர், | பெண்ணாடம் |
| 11. | ,, மு. சிவசண்முக செங்குந்தர், | உடுமலைப்பேட்டை |

மண்டல செயலர்கள்:

12. திரு. எஸ். பி. சம்மந்த செங்குந்தர், சேலம்
13. ,, கே.எஸ். கல்யாணசுந்தர செங்குந்தர், திருவத்திபுரம்
14. ,, புலவர் ப. தங்கவேல் செங்குந்தர், கள்ளக்குறிச்சி
15. ,, ஏ. நடராச செங்குந்தர், நீலமலைக்கோட்டை

சங்க அமைப்புச் செயலர்:

16. திரு. து. பழநியாண்டி செங்குந்தர், செங்குந்தபுரம்

தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்

புரவலர்கள்:

1. திரு. சித.ராம. கந்தசாமி செங்குந்தர், சிக்கல்
2. ,, டி.எஸ். கார்த்திகேய செங்குந்தர், திருவாரூர்
3. ,, இராம. திருநாவுக்கரசு செங்குந்தர் B.A., மஞ்சக்கொல்லை
4. திருமதி. முத்துலெட்சுமி ராமலிங்கம், ஆக்கூர்

தலைவர்:

5. திரு. ஆர்.என். சந்தானராஜகோபால செங்குந்தர், மன்னார்குடி

துணைத் தலைவர்கள்:

6. திரு. பி.எஸ். சுந்தரேச செங்குந்தர், திருநாகேஸ்வரம்
7. ,, என். நடராச செங்குந்தர், ஆவராணிபுதுச்சேரி
8. ,, செ. முருகேச செங்குந்தர், நாங்கூர்
9. ,, ஆர். திருநாவுக்கரசு செங்குந்தர், பாபநாசம்

பொருளாளர்:

10. திரு. தெ. சம்பந்த செங்குந்தர், சீர்காழி

மாநாட்டு நிர்வாக பொதுச்செயலர்:

11. திரு. ச.கு.பா. பழநிவேல் செங்குந்தர், கூறைநாடு

கோட்ட செயலர்கள்:

12. திரு. க. திருஞானசம்பந்த செங்குந்தர், செம்பனார்கோயில்
13. ,, ந. விநாயகமூர்த்தி செங்குந்தர், B.A.,B.Ed., குடவாசல்
14. ,, பி.எஸ்.பி. சண்முக செங்குந்தர், திருநாகேஸ்வரம்
15. ,, கோ. சிங்காரம் செங்குந்தர், பாமணி

துணைச் செயலர்:

16. திரு. வீ. கணபதி செங்குந்தர், கூறைநாடு

செயற்குழு உறுப்பினர்கள்:

17. திரு. எஸ். ராஜா சண்முகவடிவேல் செங்குந்தர், காரைக்கால்
18. ,, சீ. நாகராஜ செங்குந்தர், திருமருகல்
19. ,, ப. சாமிநாத செங்குந்தர், கணபதிபுரம்
20. ,, ஆர். எம். எஸ். தாசரதி செங்குந்தர், M.A., நாகப்பட்டினம்
21. ,, அ. அருணாசல செங்குந்தர், மேலப்பாதி
22. ,, பெ. ராசகோபால் செங்குந்தர், மன்னார்குடி
23. ,, செ. மு. பிச்சையய்ய செங்குந்தர், கூறைநாடு
24. ,, என். சண்முக செங்குந்தர், கும்பகோணம்
25. ,, அ. கந்தசாமி செங்குந்தர், கும்பகோணம்
26. ,, கா. இராக்குமுத்து செங்குந்தர், கும்பகோணம்
27. ,, எஸ்.ஏ. கருப்பண்ண செங்குந்தர், கும்பகோணம்
28. ,, எஸ். சோலைமுத்து செங்குந்தர், M.A.,M.Ed., கும்பகோணம்
29. ,, சி. பக்கிரிசாமி செங்குந்தர், (சிங்கப்பூர்) மணக்கால் அய்யம்பேட்டை

## உணவு உபசரிப்பு குழு

1. திரு. ஆர். திருநாவுக்கரசு செங்குந்தர், லெட்சுமி கார்டன் கும்பகோணம்
2. ,, பெ. இராசகோபால் செங்குந்தர், மன்னார்குடி
3. ,, சா. செல்வசந்திர செங்குந்தர், அம்மாசத்திரம்
4. ,, சீ. ஆறுமுக செங்குந்தர், நாங்கூர்
5. ,, கலிய-நடேச செங்குந்தர், செம்பனார்கோயில்
6. ,, சுந்தர-பாலகுமரன் செங்குந்தர், B.Com., சீர்காழி
7. ,, சு. கலியபெருமாள் செங்குந்தர், பாபநாசம்
8. ,, சுவாமி இராமலிங்க செங்குந்தர், பட்டீஸ்வரம்
9. ,, வா. மருதவாண செங்குந்தர், குடவாசல்
10. ,, கா. தில்லைவிநாயக செங்குந்தர், திருவாரூர்
11. ,, கோ. சிங்கார செங்குந்தர், பாமணி
12. ,, தி. வை. நடனசபாபதி செங்குந்தர், கூறைநாடு
13. ,, வயி. கைலாச செங்குந்தர், காரைக்கால்
14. ,, ஆர். பிச்சை செங்குந்தர், B.A.,B.L., மஞ்சக்கொல்லை
15. ,, ஆர். சுந்தரம் செங்குந்தர், தாராசுரம்
16. ,, எம். சிகாமணி செங்குந்தர், கும்பகோணம்
17. ,, ஏ. குருநாதன் செங்குந்தர், கும்பகோணம்
18. ,, எஸ். மகாலிங்க செங்குந்தர், கும்பகோணம்

மாநாட்டு அரங்கம் — அலங்காரம் மைக் இடவசதி மின்சாரம் அமைப்புக்குழு:

1. திரு. அ. கந்தசாமி செங்குந்தர், கும்பகோணம்
2. ,, கா. இராக்குமுத்து செங்குந்தர், கும்பகோணம்
3. ,, ச. சோலைமுத்து செங்குந்தர், M.A.,M.Ed., கும்பகோணம்
4. ,, க. இரத்தின செங்குந்தர், பாபநாசம்
5. ,, எஸ்.வி. தில்லைவன செங்குந்தர், சுவாமிமலை
6. ,, ஆர். பாலகிருஷ்ண செங்குந்தர், கும்பகோணம்
7. ,, கோ. இராமலிங்க செங்குந்தர், கும்பகோணம்
8. ,, பி. கலியபெருமாள் செங்குந்தர், கும்பகோணம்
9. ,, எம். நடராஜன் செங்குந்தர், கும்பகோணம்
10. ,, டி. பாஸ்கரன் செங்குந்தர், கும்பகோணம்
11. ,, என். இராமதாஸ் செங்குந்தர், கும்பகோணம்

## ஊர்வலக்குழு

1. திரு. பி.எஸ். சுந்தரேச செங்குந்தர், திருநாகேஸ்வரம்
2. ,, பி.எஸ்.பி. சண்முக செங்குந்தர், திருநாகேஸ்வரம்
3. ,, அ. கோவிந்தசாமி செங்குந்தர், திருநாகேஸ்வரம்
4. ,, ஏ.எம். கணபதி செங்குந்தர், சுந்தரபெருமாள் கோயில்
5. ,, எம். பன்னீர்செல்வம் செங்குந்தர், மன்னார்குடி
6. ,, ஆர். விஸ்வநாத செங்குந்தர், மணக்குடி
7. ,, என். சுப்பிரமணிய செங்குந்தர், மணக்கால் அய்யம்பேட்டை
8. ,, எஸ். ஆறுமுகம் செங்குந்தர், கும்பகோணம்
9. ,, ஏ. பச்சைமுத்து செங்குந்தர். கும்பகோணம்
10. ,, டி. முத்துசாமி செங்குந்தர், கும்பகோணம்
11. ,, பி. நாராயண செங்குந்தர், கும்பகோணம்
12. ,, எஸ். நாகேந்திரன் செங்குந்தர், கும்பகோணம்
13. ,, எஸ். சுப்பிரமணிய செங்குந்தர், கும்பகோணம்
14. ,, ஏ. வெங்கடேசன் செங்குந்தர், கும்பகோணம்
15. ,, கே. கதிரேசன் செங்குந்தர், கும்பகோணம்
16. ,, ஆர். இராதாராமன் செங்குந்தர், கும்பகோணம்
17. ,, கே.பி. அழகன் செங்குந்தர், கும்பகோணம்
18. ,, வி. சுப்பிரமணியன் செங்குந்தர், கும்பகோணம்

## தொண்டர் படை

1. திரு. மேஜர் என். ஆறுமுக செங்குந்தர், வலங்கைமான்
2. ,, வ. தண்டபாணி செங்குந்தர், M.Sc., M.Ed., கதிராமங்கலம்
3. ,, சி. பிரகாச செங்குந்தர், மாவட்ட இளைஞரணி அமைப்பாளர், செம்பை
4. மற்றும் இளைஞர் அணி அமைப்பாளர்கள்.

வெல்க செங்குந்தம் !



வாழ்க வளமுடன் !

# 16-ஆவது தென்னிந்திய செங்குந்தர் சமூக, மகளிர், இளைஞர், நெசவாளர் மாநில மாநாடு

1991-ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 25-ஆம் நாள் மாலையிலிருந்து (மறுநாள் பொது பந்த் காரணமாக) தலைவர்களும், உறவினர்களும், மகளிரும், மாணவர்களும் ஆர்வத்துடன் குடந்தை நகருக்கு வரத்தொடங்கினர்.

குடந்தை நகரம் திருநாகேஸ்வரம் பாதையிலிருந்து மேம்பாலம் புகைவண்டி நிலையம் மற்றும் முக்கிய வீதிகள் எல்லாம் தோரணங்களாலும் நமது குலக் கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. விழாக்கோலம் கண்ட பெருமக்கள் செங்குந்தர்களின் கூட்டம் இவ்வளவு பெரியதா? என்று வியப்பு அடையும் வண்ணம் மாநாட்டு வரவேற்பு குழுவினர் முன்னதாக ஏற்பாடு செய்திருந்த குடந்தை நகரில் பல திருமண மண்டபங்களிலும் திருபுவனம், அம்மாசத்திரம், வலங்கைமான், சுவாமிமலை போன்ற நமது உறவினர்கள் பெரும்பான்மையாக வதியும் ஊர்களில் உள்ள திருமண மண்டபங்களிலும் தங்கி இருந்தனர்.

26—7—91 வெள்ளிக்கிழமை காலையிலிருந்து வருகை தந்த உறவினர்கள் உபசரிக்கப் பட்டனர். அன்று பகல் வருகை தந்திருந்த இருநூறு தொண்டர்கள் தங்களுக்கு உரிய சின்னங்களை பெற்றுக்கொண்டு கொடுக்கப்பட்ட பணிகளை மேற்கொண்டனர். கும்பகோணம் நகர மேல்நிலைப்பள்ளியில் சிறப்பாக பந்தலும் மாநாட்டு மேடையும், நுழைவு வாயில்களும் மின்சார விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

26—7—91 வெள்ளி இரவு எஸ்.ஆர்.ஜி. திருமண மண்டபத்தில் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் நிர்வாக குழு மற்றும் மாநாட்டு வரவேற்புக்குழு கூட்டம் மாநிலத் தலைவர் திரு. ஜெ. சுத்தானந்த செங்குந்தர், B.Sc. அவர்கள் தலைமையில் தொடங்கியது. மாநில சங்க பொதுச்செயலாளர் டாக்டர். தி. ரா. செல்வராசன் அவர்கள் வரவேற்புரைக்கு பின் மாநாட்டில் தீர்மானிக்க விரும்புகிற தீர்மானங்களை ஒவ்வொன்றாக பரிசீலனை செய்து நிறைவு செய்யப்பட்டன. மாநில சங்கத் துணைத்தலைவரும், மாநாட்டு நிர்வாக பொதுச்செயலாளருமாகிய திரு. ச.கு பா. பழநிவேல் அவர்கள் மாநாட்டிற்கு வருகை தந்துள்ள உறவினர்கள் அனைவரும் தங்கள் இல்லத் திருமணமாக பாவித்து மாநாட்டை சிறப்பாக நடத்திக் கொடுக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். அங்கீகாரம் செய்யப்பட்ட தீர்மானங்களை மாநில பொதுச்செயலாளர் திரு. டாக்டர். தி. ரா. செல்வராசன் அவர்கள் படித்தார்கள். அனைவரும் ஏக மனதாக ஒப்புக் கொண்டனர்.

## மாநாட்டு பேரணி

27—7—91 சனிக்கிழமை காலை 8.45 மணி அளவில் கும்பகோணம் கும்பேஸ்வரர் மேலவீதியிலிருந்து மாநாடு தொடங்கும் முன் பல்லாயிரக்கணக்கான உறவினர்கள் கூடி இருந்தனர். தென்னாற்காடு தெற்கு மாவட்ட தலைவர் கடலூர் திரு. வை. ஆனந்த செங்குந்தர் அவர்கள் பேரணியை தொடக்கி வைத்தார்கள். ஊர்வலத் தளபதி வலங்கைமான் திரு. மேஜர். என். ஆறுமுக செங்குந்தர் அவர்கள் மற்றும் தொண்டர் படைத் தலைவர் கதிராமங்கலம் திரு. வ. தண்டபாணி செங்குந்தர் M.Sc., M.Ed., அவர்கள் ஊர்வலத்தை நடத்திச்செல்ல குடந்தை முக்கிய வீதிகள் வழியே சென்று பகல் 1 மணி அளவில் மாநாட்டு அரங்கை அடைந்தது. ஊர்வலத்தில் பழங்காலத் தாரை, வாத்தியங்களும், நாதஸ்வர கச்சேரி, பேண்டுவாத்தியம், கரகாட்டம், நவவீரர் வேடம், சிலம்பாட்டம், முதலிய சிறப்பு அம்சங்களுடன் ஒட்டக்கூத்தர் வேடம் தரித்த ஒருவர் வாகனத்தில் பவனி வர அதற்கு முன்னால் பாலமுருகனே நேரில் வந்தார்போல வேடம் தரித்த மாணவர் ரதத்தில் பவனிவர மாநிலத்தலைவர் திரு. ஜெ. சுத்தானந்த செங்குந்தர் திறந்த காரில் பவனி வந்தார்கள். குடந்தை நகரம் முழுவதும் செங்குந்தர்களின் கூட்டமே சிறப்பாக இருந்தது.

## சமூக மாநாடு தொடக்கம்

மாநாட்டு பந்தலில் முன்புறம் ஏற்பாடு செய்திருந்த ஓங்கி வளர்ந்த கொடிக்கம்பத்தில் வடாற்காடு அம்பேத்கார் மாவட்ட தலைவர் குடியாத்தம் திரு. கே.எம். கோவிந்தராஜ செங்குந்தர் அவர்கள் நமது குலக்கொடியை ஏற்றுவித்தார்கள். செம்பனார்கோயில் கவிஞர் தென்னவன் M.A., B.Ed., அவர்கள் கொடி வணக்கம் செய்தார்கள். திருநாகேஸ்வரம் திரு. ப. ராஜமாணிக்க ஓதுவார் அவர்கள் இறைவணக்கத்துடன் மாநிலத் தலைவர் நெசவாளர் நேசன் திரு. ஜெ. சுத்தானந்த செங்குந்தர் B.Sc., அவர்கள் தலைமையில் சமூக மாநாடு தொடங்கியது. தலைவர்கள் பகல் உணவை பொருட்படுத்தாமல் சேலம் மாவட்ட தலைவர் திரு. பி இராமசாமி செங்குந்தர் B.A., B.L., மற்றும் கோவை மாவட்ட தலைவர் திரு. என். திருவேங்கடசாமி செங்குந்தர் முன்னிலையில் தஞ்சை மாவட்ட தலைவர் மன்னார்குடி திரு. ஆர்.என். சந்தானராஜகோபால செங்குந்தர் வரவேற்புரைக்கு பின் மாநில சங்க துணைப் பொதுச்செயலாளர் திரு. எம்.பி. பாண்டுரெங்கன் செங்குந்தர் B.Com., அவர்கள் செயல்பாட்டு அறிக்கை படித்ததும் பாவேந்தர் பாரதிதாசன் படத்தை புதுவை நிலவரை ஒன்றியத் தலைவர் திரு நா. கோவிந்தசாமி செங்குந்தர் அவர்களும், திருப்பூர் குமரன் படத்தை ஈரோடு இலக்கியச் செல்வர் திரு. த. விஸ்வநாத செங்குந்தர் அவர்களும், கைத்தறிக்காவலர் பத்மஸ்ரீ எம்.பி. நாச்சிமுத்து செங்குந்தர் படத்தை மாநில துணைத் தலைவர் திரு. எம். எம். தணிகைமலை செங்குந்தர் அவர்களும், தில்லையாடி வள்ளியம்மை படத்தை கோவை மாவட்ட செயற்குழு உறுப்பினர் திருமதி. திலகவதி சண்முகசுந்தரம் M.A., B.Ed., அவர்களும், செங்குந்தர் குலத்தளபதி அரிமா. திருவாரூர் தெ. சேதுராமன் செங்குந்தர் படத்தை மாநில பொதுச்செயலாளர் டாக்டர். தி ரா. செல்வராசன் M.A., M.Lit..Ph D., அவர்களும் திறந்து வைத்தார்கள்.

சென்னை வள்ளல் சபாபதி மெட்ரிகுலேஷன் பள்ளி தாளாளர் திரு. சி.கே. குமரசாமி செங்குந்தர் M.A., அவர்கள் மாநாட்டு மலரை வெளியிட்டு கோவை மாவட்ட சிறப்புத் தலைவர் திரு. வி.வி.சி.ஆர்.எம். கந்தசாமி செங்குந்தர் அவர்கள் பெற்றுக் கொண்டார்கள்.

இலங்கையிலிருந்து வருகை தந்திருந்த திரு. ஆ.சு. செல்வரத்தின செங்குந்தர் அவர்கள் சேலம் பி. இராமசாமி செங்குந்தர் B.A.,B.L., தர்மபுரி எம். எஸ். அய்யம் பெருமாள் செங்குந்தர், தஞ்சை மேலப்பாதி அ. அருணாசல செங்குந்தர், நெய்வேலி திரு. என். திருநாவுக்கரசு செங்குந்தர், செங்குந்தர் முரசு ஆசிரியர் டாக்டர் மா. அருள்மணி செங்குந்தர், செங்குந்தமணி ஆசிரியர் ப. சொக்கநாத செங்குந்தர், உடுமலைப்பேட்டை திரு. மு. சிவசண்முக செங்குந்தர் மற்றும் சமுதாய தொண்டர்களுக்கு கதராடை அணிவித்து பாராட்டினார்கள்.

தொடர்ந்து மாநாட்டு நிகழ்ச்சி நிரலில் கண்டுள்ளபடி மாநில மாவட்ட புரவலர்களும், மாநில மாவட்ட ஆட்சிக்குழுவினர்களும், மாவட்ட தலைவர்களும், மாவட்ட பொதுச் செயலாளர்களும் சிறப்புரை வழங்கினார்கள். இரவு 8 மணி அளவில் சமூக மாநாட்டு தீர்மானங்களை தஞ்சை மாவட்ட செயலர் திருநாகேஸ்வரம் திரு. பி.எஸ்.பி. சண்முகம் அவர்கள் படித்தார்கள். ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

தஞ்சை மாவட்ட செயலர் திரு. க. திருஞானசம்பந்தம் நன்றி கூறினார்கள். தொடர்ந்து பவானி கவிமணி மழைமகன் குழுவினர் சீலமிகு செங்குந்தர் வாழ்வில் தறி, நூல், பாவு, ஊடை, ஆடை பொருள்பற்றி கவியரங்கம் நடைபெற்றது.

## மகளிர் மாநாடு

28—7—91 காலை 9 மணி அளவில் ஈரோடு திருமதி. செல்லம் சுந்தரம் அவர்கள் தலைமையில் ஆக்கூர் திருமதி. முத்துலெட்சுமி இராமலிங்கம் அவர்கள் வரவேற்புரை ஆற்றினார்கள். பின் புஞ்சை புளியம்பட்டி திருமதி. சரஸ்வதி குருநாதன், ஈரோடு திருமதி. வசந்தா சுத்தானந்தன், கிழக்குத்தாம்பரம் திருமதி. சரஸ்வதி செல்வராசன், செம்பனார்கோயில் திருமதி. மீனாட்சி தென்னவன், கரூர் திருமதி. அமிர்தலெட்சுமி, சென்னை திருமதி. ஐராணி ராமநாதன் முதலியவர்கள் கருத்துரை வழங்கினார்கள். கூறைநாடு திருமதி. ஜெயலெட்சுமி பழநிவேல் அவர்களுக்கு கதராடை அணிவித்து ஈரோடு திருமதி. செல்லம் சுந்தரம் அவர்கள் சிறப்பித்தார்கள். மாநாட்டு தலைவி ஈரோடு திருமதி. செல்லம் சுந்தரம் அவர்கள் மகளிர் மாநாட்டு தீர்மானங்களை படித்தார்கள். ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன. சீர்காழி டாக்டர் வசந்தகுமாரி கல்யாணசுந்தரம் அவர்கள் நன்றி கூற மகளிர் மாநாடு நிறைவுபெற்றது.

## இளைஞர் மாநாடு

28—7—91 பிற்பகல் 3 மணி அளவில் மாநில துணைப் பொதுச்செயலாளர் பெண்ணாடம் திரு. ஆ. இராஜவேல் செங்குந்தர் அவர்கள் தலைமையில் மாநில துணைப்பொதுச் செயலாளர் உடுமலைப்பேட்டை திரு. மு. சிவசண்முக செங்குந்தர் முன்னிலையில் கும்பகோணம் திரு. எஸ். சோலைமுத்து செங்குந்தர் M.A., M.Ed., அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்கள்.

திருச்சி மாவட்ட பொதுச் செயலாளர் ஜெயங்கொண்டம் டாக்டர். மு. கருணாநிதி M.B.B.S., அவர்கள் மாநாட்டை திறந்து வைத்தார்கள். தென்னாற்காடு தெற்கு இளைஞர் அணி முன்னாள் அமைப்பாளர் குறிஞ்சிப்பாடி அமரர். சுப்பிரமணிய செங்குந்தர் படத்தை மாநில சங்க அமைப்புச் செயலாளர் து. பழனியாண்டி அவர்கள் திறந்துவைத்தார்கள். நிகழ்ச்சி நிரலில் குறிப்பிட்டபடி மாவட்ட தலைவர்கள்

செயலாளர்கள் சிறப்பு சொற்பொழிவாளர்கள் சிறப்புரை ஆற்றியதும் மாநாட்டு தலைவர் தீர்மானங்களை படித்தார்கள். ஏகமனதாக ஏற்றுக்கொள்ளப்பட்டன. தஞ்சை மாவட்ட இளைஞர் அணி அமைப்பாளர் செம்பனார்கோயில் திரு. சிங்கார பிரகாசம் அவர்கள் நன்றி கூறியதும் மாநாடு நிறைவு பெற்றது.

## நெசவாளர் மாநாடு

28—7—91 ஞாயிறு பிற்பகல் 5 மணி அளவில் திருநாகேஸ்வரம் திரு. சொ. சண்முக ஓதுவார் இறைவணக்கத்துடன் பொதட்டூர்பேட்டை முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் திரு. இ. எஸ். தியாகராஜ செங்குந்தர் தலைமையில் சென்னை வேலவர் திரு. டி.எஸ். சுப்ரமணிய செங்குந்தர் ஆந்திரா மாநில தலைவர் திரு. பா.கா. ஆறுமுக செங்குந்தர் தஞ்சை மாவட்ட துணைத்தலைவர் திரு. பி. எஸ். சுந்தரேச செங்குந்தர் முன்னிலையில் நெசவாளர் நேசன் திரு. ஜெ. சுத்தானந்த செங்குந்தர், B.Sc. அவர்கள் வரவேற்புரையுடன் மாநாடு தொடங்கியது. கும்பகோணம் சட்டமன்ற உறுப்பினர் திரு. ராம. ராமநாதன், செய்யாறு சட்டமன்ற உறுப்பினர் திரு. ஏ. தேவராஜ் செங்குந்தர், பாண்டிச்சேரி சட்ட மன்ற உறுப்பினர் எம். பாலசுப்பிரமணியம் M.A., மற்றும் உத்திரன்மேலூர் சட்டமன்ற உறுப்பினர் காஞ்சி பன்னீர்செல்வம் ஆகியோர்கள் சிறப்புரை ஆற்றியதும் நிகழ்ச்சி நிரலில் குறிப்பிட்ட மாவட்ட தலைவர்கள் பொதுச் செயலாளர்கள் வாழ்த்துரை வழங்கினார்கள். மாநாட்டு தீர்மானங்கள் படிக்கப்பட்டு ஏகமனதாக நிறைவேறியது. தஞ்சை மாவட்ட தலைவர் மன்னார்குடி திரு. ஆர்.என். சந்தானராஜகோபால செங்குந்தர் மற்றும் பொதுச்செயலாளர் கூறைநாடு ச.கு.பா. பழனிவேல் செங்குந்தர் நன்றி கூறியதும் மாநாடு இனிது நிறைவு பெற்றது.

---

## எழுப்பெழுபது

கவிச்சக்ரவர்த்தி 1008 சிரச் சிங்காதனத்தில் அமர்ந்து ஈட்டி எழுபது (எழுபது) பாடல்கள் பாடிய பின்னர் தனக்கு பழியும் பாவமும் நேரிடாதபடி தலையையும் உயிரையும் தடையின்றி கொடுத்த உதார குணமுடைய செங்குந்தர் தலைவர்கள் உயிர் பெற்று எழ வேண்டி பாடிய எழுப்பெழுபதில் நமக்கு கிடைத்துள்ள ஒரு தலைச் செய்யுள்.

கலைவாணி நீயுலகிலி லிருப்பதுவுங் கல்வியுணர் கவிவல்லோரை
நிலையாகப் புரப்பதுவு மவர்நாவில் வாழ்வது நிசமேயன்றோ
சிலைவாண ஞவிருந் தாயிரம்புயங்க டுணிந்துமுயர் சீவனுற்றான்
றலையாவி கொடுத்திடுஞ் செங்குந்த ருயிர்பெற்றிடவுந் தயைசெய்வாயே



# வணங்குவம் வாரீர்

கவிஞர் தென்னவன், செம்பொன்

பார்புகழ் குந்தரின் மணிக்கொடி பாரீர்;
பக்தியுடன் இதை வணங்குவம் வாரீர்!
[பார்புகழ் .....

பேர்புகழ் கயிலைப் பெருமான் தேவி
பிறைநுதல் பார்வதி பேரன் புடனே
சீர்புகழ் ஒன்பான் வீரர்க் களித்த
திருச்செங் குந்தம் திகழ்வதைப் பாரீர்!
[பார்புகழ்......

கோழியாய்ப் பாய்ந்த சூரனை ஏற்றே
கொடியினில் வைத்த குமரனின் சேவலும்
சோழனாய்த் தோன்றிய குந்தனின் புலியும்
துணையாய் வீற்றருள் வெண்கொடி இதுவே
[பார்புகழ் .....

நம்முடை ஒற்றுமை நலமுறக் காட்டி
நானிலம் இதனில் நம்புகழ் கூட்டித்
தம்புகழ் பரப்பும் தனிக்கொடி இதனைத்
தாழ்ந்து பணிந்தே வணங்குவம் வாரீர்!
[பார்புகழ் .....

வானைத் தொடும்படி வளமுற ஓங்கி
வளைந்தும் நெளிந்தும் பறப்பதைப் பாரீர்!
கூனை நிமிர்த்தும் குலக்கொடி இதனைக்
கூடியே நாமும் வாழ்த்துவம் நன்றே!
[பார்புகழ் ... ...

# உறுதிமொழி

நம் குலக் கடவுள் அருள்மிகு வெற்றிவேல் முருகப் பெருமான் ஆணையாக மனசாட்சியுடன் உறுதி பூணுகிறோம்.

1. நாம் இந்திய குடிமக்களாய் இருப்பதை பெருமையாக கருதுகிறோம். நமது நாட்டின் அரசியல் அமைப்பு சட்ட திட்டங்களுக்கு கட்டுப்பட்டு நாட்டின் ஒற்றுமைக்கும் முன்னேற்றத்திற்கும் பாடுபடுவோம்.

2. நாம் செங்குந்தர் குல பழங்குடி மக்கள் என்ற உணர்வுடன், ஒன்றுபட்டு சமூக, பொருளாதார, கல்வி, தொழில், கலாச்சார முன்னேற்றத்திற்கு கட்டுப்பாட்டுடன் உழைக்கவும் சமூக நலம் காக்கவும் உறுதி பூணுகிறோம்.

3. பிற சமூகத்தவரிடம் வெறுப்பு இன்றியும் எல்லோரிடமும் நட்பும் அன்பும் கொண்டு பழகுவோம்.

4. நமது உரிமைகளை பாதுகாக்க எப்போதும் தயாராக இருப்போம்.

5. நமது சங்க நிறுவனர்களை நினைவில் கொண்டு சங்கத்தை கட்டிக்காத்து வளர்த்திட உறுதி பூணுகிறோம்.

# நுழைவாயிலில்...

அன்பிற்கினிய உறவினப் பெருமக்களே,

உங்களையெல்லாம் வணங்கி வாழ்த்தி மகிழ்கின்றோம்.

கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளிக்கக் கூடிய, தஞ்சை மாவட்டம் கும்பகோணம் நகரில் நடைபெறும் நமது தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க 16-ஆவது மாநில மாநாட்டு மலரைத் தங்கள் திருக்கரங்களில் தவழ விடுவதில் நாங்கள் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

ஆயிரம் ஆண்டுகட்கு முன்னே நமது தஞ்சையிலிருந்து அரசாண்ட சோழர்குல மாமன்னன் இராசராசன் கலையழகு மிளிர - விண்முட்டக் கட்டிய – பெருவுடையார் திருக்கோயிலின் உயர் கோபுரத்தையும், கன்றை இழந்த பசுவின் துயரைப் பொறுக்கமாட்டாமல் தன் ஒரு மகனையே தேர்க்காலில் இட்டுக் கொன்ற மனுநீதிச் சோழனின் வீர உருவத்தையும், நமது சங்கத்தைத் தோற்றுவித்த ஆரூர் வள்ளலார், அதனை நன் முறையில் கட்டிக் காத்த கைத்தறிக் காவலர், ஆகியோரின் திருமுகப் பொலிவினையும், நம்மில் பலர் கைத்தறி நெசவாளர் என்பதுடன் ஒருசிலர் வேளாண் பெருமக்கள் என்பதையும் குறிக்கும் தொழிற்காட்சிகளையும், சங்கக் கொடியையும் எடுப் பாகக் கொண்டு, இம்மலரின் வண்ண முகப்பு அழகுத் திருக் காட்சியை வழங்கி நம்மையெலாம் மகிழ்ச்சிக் கடலில் திளைக்கச் செய்துள்ளது.

நாமெலாம் முருகப் பெருமானின் வழித் தோன்றல்கள் என்பதாலும், அவன் நமக்கெல்லாம் குலக்கடவுள் என்பதாலும், அவனை நாம் வணங்குதல் வேண்டும் என்னும் நோக்கில், அறுபடை வீடுகளுள் ஒன்றான சுவாமிமலை முருகனின் திருவுருவப் படம் முதலில் திருக்காட்சி நல்குகிறது.

இம்மலரில் ஆன்றவிந்தடங்கிய சான்றோர் பலரின் வாழ்த் துரைகள் அமைந்து அணி செய்கின்றன; நம் சங்கம் வளரவும், வாழவும் உழைத்த - உழைக்கின்ற - பெருமக்கள் பலரின்

திருவுருவப் படங்களும், அவர்தம் வாழ்க்கை வரலாறுகளும் இடம் பெற்று மனநிறைவளிக்கின்றன; நமது செங்குந்த மரபின் மாண்புகளை விளக்கும் புராண - இலக்கிய - வரலாற்றுக் கட்டுரைகள்-பாமலர்கள் நிறைந்துள்ளன; நமது புலவர் பெருமக் களின் வாழ்க்கைக் குறிப்புக்கள், அவர் தம் படைப்புக்கள் குறித்த விளக்கங்கள் - நம்குல இருபெருந் தியாகிகளான தில்லையாடி வள்ளியம்மை, திருப்பூர் குமரன் ஆகியோரின் உண்மை வரலாறுகள் விளக்கப்பட்டுள்ளன; நம் சங்கப் பணிகள் குறித்த விவரங்களும், மாவட்டச் சங்க வரலாறுகளும் புதிய பொலிவுடன் திகழ்கின்றன; இடையிடையே நம் குல வணிகப் பெருமக்களின் விளம்பரங்களும் நிறைந்து களிப்பூட்டுகின்றன.

மொத்தத்தில் இம்மலர், நம் செங்குந்த மக்களின் கருத்துக் களஞ்சியமாக - செங்குந்தர் இல்லம் தோறும் இருந்து அணி செய்யவேண்டிய செல்வப் பேழையாக - நம்குல மகளிரும், இளைஞரும், வாழ்நாளெல்லாம் போற்றிக் காக்க வேண்டிய கையேடாக - திகழ்கிறது!

இம்மலர் இத்துணைச் சிறப்பாக அமைய வாழ்த்துரைகள், கட்டுரைகள் பாமலர்கள் வழங்கிய அறிஞர்கள், அல்லும் பகலும் உழைத்த அன்பர்கள், பொருள் உதவி புரிந்த அருளாளர்கள், விளம்பரங்கள் தந்துதவிய வணிகப் பெருமக்கள், மாநில மாவட்டச் சங்கங்களின் பொறுப்பாளர்கள், உறுப்பினர்கள், மலரை அழகுற அச்சிட்டு உதவிய அச்சகக் குழுவினர் ஆகிய அனைவர்க்கும் எங்கள் நன்றி என்றும் உரியதாகும்.

இனி, மலரைப் புரட்டுங்கள்; மணத்தை நுகருங்கள்; நுகர்ந்து பெற்ற பயனை எங்களுக்கு எழுதுங்கள்!

தங்கள்,

**ஜெ. சுத்தானந்தன்,**
தலைவர்.
**தி. ரா. செல்வராசன்,**
பொதுச்செயலர்,
தென்னிந்திய செங்குந்த
மகாஜன சங்கம்.

**ஆர்.என். சந்தான ராஜகோபாலன்,**
தலைவர்.
**ச. கு. பா. பழநிவேல்,**
பொதுச்செயலர்,
தஞ்சை ஜில்லா செங்குந்த
மகாஜன கல்விச் சங்கம்.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க 16-ஆவது மாநில மாநாடு
27, 28—7—91இல் கும்பகோணத்தில் நடைபெற்றபோது

தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கத்தின் தலைவர்

மன்னார்குடி **ஆர்.என். சந்தானராஜகோபால செங்குந்தர்** அவர்கள்

ஆற்றிய



 # வரவேற்புரை. 

அன்புசால் தலைவர் அவர்களே, மாண்புமிகு நீதி அரசர் அவர்களே, மாண்புமிகு கைத்தறித்துறை அமைச்சர் அவர்களே, மாண்புமிகு உள்ளாட்சித்துறை அமைச்சர் அவர்களே, முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் அவர்களே, நாடாளுமன்ற உறுப்பினர் அவர்களே, சட்டமன்ற உறுப்பினர்களே, சங்கத் தலைவர்களே, செயலர்களே, தலைமைச் சங்கப் புரவலர்களே, துணைத் தலைவர்களே, பொதுச் செயலர் மற்றும் நிர்வாகிகளே, உறவினர்களே உங்கள் அனைவரையும் வருக வருக "உங்கள் வரவு நல்வரவு ஆகுக" என வரவேற்று என் வணக்கங்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

**சாதிச் சங்கம் தேவையா?**

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் 16-ஆவது சமூக, நெசவாளர், மகளிர், இளைஞர் மாநில மாநாடு அரங்கில் வரவேற்புரை நிகழ்த்தும் வாய்ப்பு அளித்த உங்கள் எல்லோருக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன். பலர் சாதிச் சங்கங்களால் நாட்டுக்கு நன்மை உண்டா எனக் கேட்கின்றனர். குடும்பத்தில் நம் பெற்றோர், உடன் பிறந்தோர், மனைவி, குழந்தைகளிடம் பாசமும் பரிவும் கொள்வதை தவறாக ஒருவரும் கூறுவதில்லை. குடும்பத்திற்கு அடுத்த நிலையில் உள்ள உறவினர்களையும் அதன்பின் எல்லா மக்களையும் நேசித்து அன்பு செலுத்த வேண்டியதும் இன்னும் மேல்நிலையில் மாந்தர் குலத்தினர் அனைவருக்கும், அனைத்து உயிர்களுக்கும் அன்பு செலுத்தி அன்புமயமான கடவுள் நிலைக்கு உயரவேண்டும் என்னும் உயர் நோக்கங்களை நமது வேதங்களும், சாத்திரங்களும் தெரிவிக்கின்றன. இத்தகைய மேலான குறிக்கோளுக்கு ஜாதி சங்கம் ஒரு படியாக அமைந்துள்ளது என்பதுதான் உண்மை. இந்த படித்தளங்களில் ஒரு சமுதாயம் அடையும் முன்னேற்றத்தின் பயனை நாடும் பெறுகிறது.

"மக்களை தெய்வங்களாக பாவித்து செய்கின்ற வழிபாடுதான் மேலான வழிபாடு" என்பது சுவாமி விவேகானந்தர் அருள்வாக்கு. மக்கள் சேவையே மகேசன் சேவை என்பது நம் ஆன்றோர் திருவாக்கு. ஜாதிகள் இல்லையடி பாப்பா என பாரதி கூறினார் அந்த நிலை வர இன்னும் வெகுதூரம் முன்னேறி ஆகவேண்டும்.

**தென்னிந்திய சங்கத் தோற்றம்:**

இந்தக்கால கட்டத்தில் ஜாதி சங்கங்கள் மூலமாய் எல்லா மக்களும் முன்னேற்றப் பாதையை நாடுகின்றனர். நாமும் சூழ்நிலைகளைக் கூர்ந்து நோக்கி நமக்குள்ள குறைகளை இடர்களை அரசுக்கு எடுத்துக் கூறவும் பயன் அடையவும் ஒரே வழி இத்தகைய சங்கங்களே என்பதும் உறுதி ஆகிவிட்டது. தனி மனிதனால் செய்ய முடியாததை ஒரு கூட்டு அமைப்பு அல்லது சங்கம் செய்ய முடியும் என்பதை முன்னாளிலேயே நமக்கு வழிகாட்டி வாழ்வளித்த பெருந்தகைகள் வள்ளல் சபாபதி செங்குந்தர், காஞ்சி நாகலிங்க முனிவர் போன்ற நம்குலப் பெரியோர்கள் 65 ஆண்டுகளுக்கு முன் இந்த தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தையும் செங்குந்த மித்திரன் மாத ஏட்டினையும் தோற்றுவித்தார்கள்.

**நாமும் நமது தொழிலும்:**

பண்டைப் பெருமைகள் மிக்க நம் குலத்தவர் திருக்கயிலாய பரம்பரையினர் உபசுப்பிரமணியர் என்ற புராணப்புகழும் சோழ வேந்தர்களிடம் படைவீரர்களாய், மாற்றார் படையினர் அஞ்சிய கைக்கோளர்படை என்ற தற்கொலைப்படை மறவர்களாயும் ஒட்டக்கூத்தர் போன்ற பெரும்புலவர்கள் அரசனுக்கு ஆசானாகவும் தமிழ்த் தொண்டு புரிவதில் இணையற்ற புலவர்களாயும் செங்குந்தப் பெருமக்கள் வாழ்ந்தவை சரித்திரம் கூறும் உண்மைகள். காலங்களின் மாற்றத்தால், குலத்தொழில் ஆன தறித்தொழில் நலிவு அடைந்ததால் நம் குல மக்கள் வறுமைப் பிடியில் சிக்கித் தவித்தனர். பல மூடப்பழக்க வழக்கங்களுக்கு இரையாகி தாம் வசிக்கும் ஊரில் உள்ளவர்களே செங்குந்தர்கள் மற்ற ஊர்களில் உள்ளவர்கள் அன்னியர்கள் என்ற கருத்துடன் பிரிந்து சிதறிக் கிடந்தனர். தமிழ் மக்களில் பெரும் தொகையினரான 50 லட்சம் செங்குந்தர்களை உணர்வுகளால் ஒன்றுகூட்டி நாம் எல்லோரும் செங்குந்தர்கள், தஞ்சையில் வாழும் செங்குந்தனும் நெல்லையில் வாழும் செங்குந்தனும் சென்னையில் வாழும் செங்குந்தனும் உற்ற உறவினர்களே என்ற பாசப்பிணைப்பையும் திருமணம் போன்ற தொடர்புகளையும் நம் பெரியோர்கள் தொடங்கி வைத்த சங்கமும், மாத ஏடும் சாதித்துள்ளன. இந்த நல்லுணர்வுகளைப் பெருக்கி சங்கத்தையும் சமுதாய ஏட்டினையும் வளர்த்தால் நாமும் வளர்வோம் என்பது உறுதி.

சென்னை அரண்மனைக்காரன் தெருவில் உள்ள எழில்மிகு செங்குந்தர் மாளிகையும் சென்னை சேத்துப்பட்டில் 18 கிரவுண்டுகளைக் கொண்ட வள்ளலார் மாணவர் இல்லமும் திறமையுடன் நிர்வகிக்கும் திரு. சி.கே. குமாரசுவாமியும் பயிலும் 800 மாணவர்களும் நம் சங்கத்தின் சிறப்பு அம்சங்கள்.

**நமது சாதனைகள்:**

உணவு, உடை, உறையுள், இம்மூன்றும் அடிப்படைத் தேவைகள். இவற்றைப் பெறவும் மேலும் வாழ்வில் வளம் காணவும் கல்வியறிவு இன்றியமையாதது என்பது நிரூபணம் ஆகிய உண்மை. அடிப்படை தேவைகளுக்கே சில நேரங்களில் நம் ஒருமித்த உணர்வுகளை அரசுக்கு உணர்த்த சென்னையில் செங்குந்தர் பேரணி நடத்தினோம்.

நாம் மிகவும் பிற்பட்டவர்கள் பட்டியலில் சேர்க்கப்பட்டால்தான் நம் எதிர்காலம் ஒளிபெறும் என்பதை உணர்ந்து எல்லா மாவட்டங்களிலும் உண்ணாவிரதப் போராட்டம் அமைதியாக நடத்திக் காட்டினோம். சென்னையில் 15-ஆவது மாநில மாநாடும் பேரணியும் பெரும் வெற்றி அடைந்தன. இவை தலைமைச் சங்கத்தின் வெற்றிச் சாதனைகள். எதிர்காலத்திலும் நமக்குபாதுகாப்பும் நல்வழிகாட்டலும் சங்கத்தினுல்தான் இயலும் என்பதை உணர்கிறோம். தலைமைச் சங்கத்தின் தலைவர்களாய் இயங்கி நமக்கு விழிப்பும் செயல் ஊக்கமும் அளித்தவர்களில் கைத்தறிக்காவலர் பத்மஸ்ரீ நாச்சிமுத்து செங்குந்தரை நன்றியுடன் எண்ணிப்பார்க்கிறோம். அன்னாரிடம் பயின்று நம்மை வழிநடத்தும் நம்தலைவர் நெசவாளர் நேசன் உதயோக ரத்னா சிவபூசைச் செல்வர் திரு ஜே. சுத்தானந்தன் B.Sc., அவர்கள் நம் நெஞ்சில் நிறைந்துள்ளவர் இளைஞர்களை ஈர்க்கும் மாபெரும் சக்தியாக உள்ளார். அன்னார் இறையருளால் எல்லா நலன்களையும் பெறுவாராக.

**யான் பெற்ற பேறு:**

குடந்தை நகரில் இந்த மாநாட்டை தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச்சங்கம் நடத்துவதை அறிவீர்கள். 1944-ல் இந்த சங்கம் கூறைநாட்டில் வள்ளல் சபாபதி செங்குந்தரால் தொடங்கப்பட்டு அவரது அறிவுரையுடன் என் தந்தையார் அருள் திரு. நடராஜ செங்குந்தர் முதலாவது தலைவராய் சங்கத்தை வழிநடத்தினார்கள். 1947 முதல் ஆக்கூர் தியாகி அமரர் சு. ராமலிங்க செங்குந்தர் தலைவராக இருந்து வழிநடத்தி மற்ற மாவட்டங்களும் தங்களுக்கு முன்னோடியாய் கருதும் அளவுக்கு சிறந்த பணியாற்றினார்கள். அன்னார் மறைவுக்குப் பிறகு 1981 முதல் நான் தலைமைப் பொறுப்பேற்று பெரியோர்கள் அடிச்சுவற்றைப் பின்பற்றி இயங்கி வருகிறேன். சங்கம் துவங்கிய நாள் முதல் மாவட்ட சங்கத்தின் பொதுச் செயலாளராய் கர்மவீரர் செங்குந்தகுலச் செம்மல் திரு. ச.கு.பா. பழநிவேல் செங்குந்தர் தொண்டாற்றி வருகிறார்கள். "ச.கு.பா." என மாநிலத்தின் அனைத்து செங்குந்தர்களாலும் போற்றப்படும் பெரியவர் திரு. ச.கு.பா. அவர்கள் தலைமைச் சங்கத்தின் சட்டதிட்டங்களை விரிவாக்கி அனைத்து மாவட்டங்களும் தலைமைச் சங்கத்தின் செயல்பாடுகளில் பங்குபெறச் செய்து சங்கத்தின் மாபெரும் வளர்ச்சிக்கு அடிக்கல் இட்டிருக்கிறார்கள். அன்னாரை நன்றியுணர்வுடன் மாநில துணைத் தலைவராகவும் நாம் ஏற்றுக் கொண்டிருக்கிறோம். இந்த மாநாட்டின் நிர்வாகப் பொதுச்செயலர் பொறுப்பையும் சிறப்பாக நிறைவேற்றுகிறார்கள்.

**எனது பூரிப்பு:**

தஞ்சை மாவட்ட சங்கம் சுமார் 2000 மாணவர்களுக்கு கல்வி உதவித் தொகை அளித்துள்ளதும் 700க்கு மேற்பட்ட மாண்வர்களுக்கு எஸ்.எஸ்.எல்.சி மற்றும் பிளஸ் 2 மாணவர்களுக்கு ஊக்கப்பரிசு அளித்துள்ளதும் சாதனைகள் எனக் கூறலாம். பவுன் 30 ரூபாய் விற்பனை ஆகிய காலக்கட்டத்தில் உதவி பெற்ற முன்னாள் மாணவர்கள் இன்று நல்ல நிலையில் உயர் உத்தியோகங்களிலும் வளமான வாழ்விலும் பயன் அடைந்துள்ளது எங்களை மகிழ்ச்சியில் பூரிக்கச் செய்கிறது.

தஞ்சை மாவட்ட சங்கம் நான்கு கோட்டங்களாய் அதாவது தில்லையாடி வள்ளியம்மை கோட்டம், ஞானியார் அடிகள் கோட்டம், திருப்பூர் குமரன் கோட்டம்

கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் கோட்டம் என வகை செய்யப்பட்டு நான்கு துணைச்செயலர்களும் மற்றும் 77 கிளைச்சங்கங்களையும் கொண்டு இயங்கி வருகிறது. அடிப்படை உறுப்பினர் கட்டணம் ரூ 3 செலுத்தி உறுப்பினர் ஆனவர் கிளைச்சங்க நிர்வாகத்தில் பங்கு பெறுகின்றனர். ரூ 25 செலுத்தி ஆயுள் உறுப்பினர் ஆனோர் கிளைச்சங்கம் மற்றும் மாவட்ட சங்க நிர்வாகத்தில் பங்கு பெறுகின்றனர். ஆல்போல் தழைத்து ஓங்கி வளர்ந்துள்ள சங்கத்தின் அடிவேராக ஆணிவேராக கிளைச்சங்கங்கள் அமைந்துள்ளன. மாவட்ட, மாநில சங்கங்கள் இந்த வரிசையில் எல்லாமக்கள் தொடர்புகளுடன் சிறப்பாக இயங்கிவருவதை அறிவீர்கள்.

**நமது மூலாதாரங்கள்:**

மாவட்ட சங்கத்தினர் ஆண்டுதோறும் சுற்றுப்பயணம் செய்து குலாபிமானிகளிடம் உண்டியல் நிதி வசூலிக்கின்றனர். அந்த வருமானமும் திருமண நன்கொடைகள், பல்வேறு அறக்கட்டளைகள் மூலம் பெறும் வட்டித்தொகைகள் உறுப்பினர் கட்டணங்கள் ஆகியவை நிதி ஆதாரமாய் அமைந்துள்ளது. இந்த வருமானங்களுக்குள் ஆண்டுதோறும் தணிக்கையாளர் சான்று பெற்று பொதுக்குழு கூட்டத்தின் இசைவு பெறப்படுகிறது. இந்த ஆண்டு கூடுதல் வருமானம் ரூ. 49599-23 என்பதையும் ஆஸ்திப் பொறுப்புகள் ரூ. 1,44,857—79 என்பதையும் பலரால் நிறுவப்பட்ட அறக்கட்டளைகள் தொகை ரூ. 93,820—93 என்பதையும் மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறேன். நிதி ஆதாரங்கள் மேலும் வளர்ச்சி அடைய நமது சங்கத்தின் மூலம் பயன் அடைந்த பழைய மாணவர்கள் தாங்கள் நன்றிக்கடனை செலுத்தும் வகையில் "கற்பகத்தரு அறக்கட்டளை" ஏற்படுத்தியுள்ளோம். செயல்பாடுகள் செம்மை பெற மனித உழைப்பும் பொருளாதாரமும் தேவை. இரண்டு மூலாதாரங்களும் நம்மிடம் உள்ளன. நாம் மேலும் உயர்வடைவோம். தொண்டுகள் பல புரிந்திடுவோம் என்பதை தெரிவித்துச் கொள்கிறோம்.

**முடிவுரை:**

தஞ்சை மாவட்டத்தில் உள்ள செங்குந்தர்கள் விவசாயத்தையும் கைத்தறித் தொழிலையும் நம்பி வாழ்கின்றனர். இரண்டு தொழில்களும் நலிவு அடைந்து வருகின்றன. மாற்றுத் தொழில்களுக்கு செல்ல முயற்சிக்கவேண்டும். இரும்பு உருக்கு, மற்றும் வேறுகனிமப் பொருள்கள் சம்பந்தமான தொழில்களும் பெட்ரோலியம், கம்ப்யூட்டர், எலெக்ட்ரானிக்ஸ் போன்ற புதிய துறைகளிலும் பயிற்சியும் முயற்சியும் பெற வேண்டும். அரசு உத்தியோகங்கள் பெறுவதிலும் முழு முயற்சியும் வேண்டும். எல்லாவற்றுக்கும் தன் காலில் நிற்கும் சுயவலிமை பெற்றவர்களாய் நம்மவர் ஆக வேண்டும் என்பது நம் குறிக்கோள். இந்த நல்ல முயற்சிக்கு நம்மில் உள்ள தொழில் அதிபர்களும், விஞ்ஞானிகளும் அறிஞர்களும் செங்குந்தர்களை கைதூக்கிவிட்டு உதவ முன்வரவேண்டும். சங்கம் மூலமாய் தொழில் முனைவோர்க் கருத்தரங்கமும் புதிய தொழில் துவங்க பொருளாதார மற்றும் தொழில் நுணுக்கங்களை அறிவிக்கவும் தக்கவர்களை அணுகி எம்மாலான முயற்சிகளை மேற்கொள்கிறோம். எல்லோரும் இணைந்து நல்ல பணிகளை ஆற்ற முன்வருக என வேண்டுகிறேன். நமக்கு வழி காட்டியாக இருந்தும் பல வகையிலும் உதவியும் வந்தவர்களுக்கு நன்றியை தெரிவித்துக் கொண்டு என் வரவேற்பு உரையை நிறைவு செய்கிறேன்.

வாழ்க செங்குந்தம்! வாழ்க வளமுடன்!

# "காவிரி மணலினும் நெடிது வாழ்க"



T. S. சுவாமிநாத உடையார்,
(முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்)

தென்னிந்திய செங்குந்தர் மாநில 16-ஆவது மாநாடு; கோயில் பெருநகராம் திருக்குடந்தையில்; ஆடும் மயிலேறி அமரர்கள் சூழ வரும் திருவேரகத்தமர்ந்த முருகப் பெருமானின் அருளால் வெற்றி பெற்றதை அறிந்து மட்டற்ற மகிழ்ச்சியடைகின்றேன்.

கண்ணுதல் பெருமான் மைந்தனின் வழிவந்த வீரவாகு முதலிய குந்தப்படை வீரர்களின் வழித்தோன்றல்களே! உங்கள் அனைவர்க்கும் எனது அன்பு நல்வாழ்த்துக்கள்.

**கல்வி:**

போர்க்களத்தில் முன்னின்று போரிட்டுப் பகைவர்களை அழித்ததினால் முதலியார் என்ற உயர் பட்டத்தைப் பெற்றுள்ளீர்கள். அன்று புறப்பகையை அழிக்கப் புறப்பட்ட நீங்கள்; இன்று அறியாமைப் பகையைப் போக்க பல கல்வி நிலையங்களை நிறுவியுள்ளீர்கள். அன்னசத்திரம் ஆயிரம் வைத்தல், ஆலயம் பதினாயிரம் நாட்டல்; அன்னயாவினும் புண்ணியம் கோடி ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல் என்றார் பாரதியார். அத்தகு புண்ணியத்தைப் பெற்றவர்கள் நீங்கள். மேன்மேலும் இத்தொண்டு சிறக்கப் பாடுபடுவீர்கள் என்று எண்ணுகின்றேன்.

> ''எல்லா நலமும் ஈந்திடும் கல்வி
> இல்லா வீட்டை இருண்டவீ டென்க!
> படிப்பிலார் நிறைந்த குடித்தனம், நரம்பின்
> துடிப்பிலார் நிறைந்த சுடுகா டென்ப!''
>
> ''கல்வி இல்லான் கண் இலான் என்க''
>
> ''படிப்பிலாக் காலை நொடிப்பிலே வீழ்வான்''.

என்றார் உங்கள் குலத்தோன்றல் பாரதிதாசனார். அவர்தம் கனவை நனவாக்குங்கள்.

**பெண் கல்வி:**

ஒரு சமுதாயத்தில் பெண்களின் முன்னேற்றம்தான் அச்சமுதாய முன்னேற்றத்தின் அளவுகோல். கல்வி இல்லாப் பெண்கள் களர்நிலம் என்றார் பாரதிதாசனார். எனவே கல்வியில் பெண்கள் முன்னேற பாடுபடுதல் வேண்டும்.

ஒரு ஆணுக்குக் கிடைக்கும் கல்வி அவனோடு நின்றுவிடுகின்றது. ஆனால் ஒரு பெண்ணுக்குக் கிடைக்கும் கல்வியோ அக்குடும்பம் முழுவதற்கும் கிடைக்கின்றது என்றார் காந்தியடிகள். ''அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு'' என்ற பழங்கொள்கையை மாற்றுங்கள் தானாகவே உங்கள் இனம் எல்லா நிலைகளிலும் உயரும் என்பதில் ஐயமில்லை.

தொழில்:

நெய்யும் தொழிலை நெறியாகக் கொண்டு வாழும் நெறியாளர்களே! வருவாய்குறைவு என்றாலும் மக்களின் மானம் காக்கும் தொழிலை மாண்புடன் மேற்கொண்டிருக்கிறீர்கள். மிகுபொருள் படைத்தவர்கள் இத்தொழிலில் புதிய நுணுக்கங்களைப் புகுத்தி ஏழைத் தொழிலாளர்களுக்கு உதவி செய்து அவர்களது வருமானத்தைப் பெருக்க ஆவன செய்ய வேண்டுகிறேன்.

இளைஞர் கடமை:

படித்த; பட்டம் பெற்ற இளைஞர்கள் அரசு வேலையில் ஆர்வம் காட்டும் அளவிற்குச் சுயதொழிலில் நாட்டம் காட்டுவதில்லை. இவ்வெண்ணம் மாற்றம் பெறல் வேண்டும். "இன்றைய இளைஞர்களே நாளைய சமுதாயத்தை உருவாக்கும் சிற்பிகள்" என்றார் நேரு பெருமகனார். நாளைய சமுதாயத்தைப் படைக்கும் பண்பாளர்களே! செய்யும் தொழிலுக்கு மதிப்பளித்துச் செல்வங்கள் சேர்க்க வாழ்த்துகின்றேன்.

"எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்"

என்ற குறள் மொழிக்கிணங்க, தூய எண்ணம், தூய சிந்தனை, தூய பணிகளையே மேற்கொள்ளுங்கள். "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்ற அருள் மொழிக்கு இலக்கணமாகத் திகழ்ந்து பயன் கருதாது உழைக்கும் பண்பாளர்களாக உருவாகுங்கள் என்று வாழ்த்துகின்றேன்.

ஒன்றுபட்ட எண்ணம்:

"ஒன்று பட்டால் உண்டு வாழ்வு" "கூடி வாழ்ந்தால் கோடி நன்மை" என்பர். ஒன்றுபட்ட உங்களின் சக்தி ஆக்கப் பணிக்கே ஆகவேண்டும்; ஒருகாலும் அழிவுக்கு ஆதல் கூடாது. மதம், சாதி இவைகளால் தங்களை உயர்த்திக் கொள்ளுங்கள். பிறர் மதம் சாதிகளைத் தாழ்த்துவதில் சிந்தனை கொள்ளாதீர்கள் என்பதே என் எண்ணம். நாம் உயர்வதோடு நமது நாட்டையும் உயர்த்த வேண்டும். நம் நாட்டு ஒற்றுமைக்கு உறுதுணையாக வேண்டும். இவ்வாறே அனைத்து மதங்களும், சாதிகளும் எண்ணினால் காந்தியடிகளின் கனவு நனவாகும் என்பதில் ஐயமில்லை. "அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்" என்றார் வள்ளுவர் அவர் தம் கொள்கைக்கு ஏற்ப; பிறரிடம் நட்புடனும், அன்புடனும் பழக வேண்டும். நமது உரிமைகளுக்குக் குரல் கொடுக்கும் போது பிறரது உரிமைகளுக்கும் வழிவிடுங்கள். உரிமைகளை வாதாடிப் பெறவேண்டுமேயன்றிப் போராடிப் பெறுதல் கூடாது. இத்தகு நற்பண்புகள் அனைத்து சமூகத்தவரிடமும் உருவாகுமேயானால், நாம் முன்னேறுவதோடு நாடும் முன்னேறும் என்பதில் ஐயமில்லை.

65 ஆண்டுகால பழமை கொண்ட இச்சங்கம் மேலும் பல மாநில மாநாடுகளைக் காண வேண்டும் என்று வாழ்த்துகின்றேன். திருமுருகன் திருவருளால் இச்சங்கம் காவிரி மணலினும் நெடிது வாழட்டும் என வாழ்த்துகின்றேன். என்னுடைய கருத்துக்களுக்குச் செயல்வடிவம் கொடுத்துச் செயலாற்றுவீர்கள் என்று எண்ணுகின்றேன். நன்றி, வணக்கம்.

——o——



# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் 16-ஆவது மாநில மாநாடு

1991ஆம் ஆண்டு ஜூலை மாதம் 27, 28 ஆகிய தேதிகளில்
தஞ்சை மாவட்டம் – கும்பகோணத்தில் நடைபெற்ற
மாநாட்டில்

வடஆற்காடு அம்பேத்கார் மாவட்ட செங்குந்த மகாஜன சங்கத் தலைவர்
குடியேற்றம் நகர் மன்ற முன்னாள் தலைவர்
குடியேற்றம் திருவள்ளுவர் மேல்நிலைப் பள்ளி தாளாளர்

உயர்திரு. **கே. எம். கோவிந்தராஜ செங்குந்தர்** அவர்கள்

நிகழ்த்திய

## கொடியேற்று சிறப்புரை

வெல்க செங்குந்தம்! சிறக்க செங்குந்தம்! ஓங்குக ஒற்றுமை!

பேரன்புமிக்க தலைவர் அவர்களே! உள்ளங் கவர்ந்த உறவினர்களே! அனைவருக்கும் என் அகம் குளிர்ந்த நன்றியினையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

நமது தென்னிந்திய மகாஜன சங்கத்தின் 16-ஆவது மாநில மாநாட்டில் கொடியேற்றிச் சிறப்பிக்கும் சீரிய தொண்டினை எனக்களித்தமைக்கு சிரந்தாழ்த்தி என் நன்றியினை தெரிவித்துக் கொள்கின்றேன்.

படத்திலே முன்னோரைக் காண்கின்றோம்; சிலையிலே இறைவனைக் காண்கின்றோம்; சொல்லிலே பொருளைக் காண்கின்றோம்; அதுபோல **கொடியிலே கொள்கையைக் காண்பதுவே — காணாதவர் கண்களையும் காண வைப்பதுவே** — இக் கொடியேற்று விழாவின் கொள்கை விளக்கமாகும்.

வெண்மையின் நடுவே சிவந்த குந்தப்படையும் அதன் வலது புறத்தில் சேவலும், இடது புறத்தில் புலியும் கொண்டு விளங்குவதே நமது செங்குந்தர் குலக்கொடியின் சின்னமாக விளங்குகின்றது.

**வெண்மை:**

பரம் பொருளின் உண்மையைக் காட்டும் வெண்மையாய்த் திகழும் வெள்ளிமலையில் வெண்ணீறு அணிந்த கண்ணுதல் கடவுளின் வழி வந்த வள்ளல் **முருகப் பெருமான்** — **வீரவாகு** முதலிய நவவீரர்கள் வழிவந்தவர்கள் என்பதை அவ்வெண்மை உணர்த்துகிறது. அதுமட்டுமா நாம் இறைவழி வந்தவர்கள் — இறை உணர்வு உடையவர்கள் என்பதையும் நாம் உணர வேண்டும்.

**குந்தம்:**

சூரன் முதலிய கொடியவர்களின் குலமறுத்து — மறத்தை மறுத்து அறத்தை நிலை நிறுத்த வீரவாகு முதலிய நவவீரர்களுக்கு அன்னை ஆதி சக்தியால் அருளப் பட்டதே குந்தப் படையாகும். எங்கெங்கு எவ்வுயிர்க்கு எத்தீங்கு ஏற்பட்டாலும் வீரத்தோடு நம் தீரம் காட்ட வேண்டும் என்பதையே இக்குந்தம் நமக்கு உணர்த்துகிறது.

**சேவல்:**

பாவம் செய்த சூரன்தான் சேவலாக மாறினான். ஆனால் அவனையும் **பாவம்** என்று எண்ணி தன் கொடியாக்கி, பாவிகளையும் மன்னிக்க வேண்டும் என்ற தன் **மறக் கருணையைக்** காட்டினான் முருகப் பெருமான். இது எதைக் காட்டுகிறது. எதிரியாக இருந்தாலும் எதிராக இல்லாமல் பக்கமாக வந்து விட்டால் கருணையைக் காட்டு என்கிறது.

**புலி:**

சூரனின் கொடி புலிக்கொடி. வெற்றிப் பரிசாக வேலவர் வீரவாகு தேவருக்கு அளித்தார். முசுகுந்தச் சோழர் முதலாக சோழர் குலக்கொடி புலிக் கொடியே **நாடாண்ட காலமும் நாம் உண்டு** என்பதை இது மறைவாகச் சொல்லும் வேதம் என்பதை எடுத்துச் சொல்லவும் வேண்டுமா? இவைகளை எண்ணிப் பார்க்க வேண்டு கின்றேன்.

**பாரெல்லாம் நம்மவரே பார்ப்பீர்:**

நம்குல மக்கள் வாழையடி வாழையாய் — பரம்பரை பரம்பரையாய் பாரம்பரியத்தோடு தமிழகத்தில் மட்டுமல்ல இந்தியா முழுவதும் பரவி உள்ளனர் என்பதையும் **இலங்கை தென்னாப்பிரிக்கா, மலேசியா** முதலிய நாடுகளில் தலைமுறை தலைமுறையாக வாழ்ந்து வருகின்றனர் என்பதையும் தற்போது கல்வி — வேலைவாய்ப்பு முதலிய காரணங்களால் உலகம் முழுவதும் பரவியுள்ளனர் என்பதையும் இந்த நேரத்தில் எண்ணி பார்த்திடல் வேண்டும்.

மதிப்பிற்கும் வணக்கத்திற்கும் உரிய **காஞ்சிப்பெரியவர்** அவர்கள் இலங்கையில் யாழ்ப்பாணத்தில் நம்மவர்க்கென்றே கோயிலும் மடமும் இருப்பதைப் பலமுறை கூறியுள்ளதை நானே கேட்டுள்ளேன். இன்றும் யாழ்ப்பாணத்தில் நம்மவரே மிகுதி என்பதை நினைவு கூர்வதோடு அங்கு அமைதி ஏற்பட இறைவனை இறைஞ்சுவோமாக.

உலகம் பரவிய நம் இனம் உலகம் மறக்க வாழ்கிறது. காரணம், "தில்லைப்பெண் எல்லை தாண்டாள்". என்பதுபோன்ற குறுகிய கண்ணோட்டமே. அதனை மாற்றி அமைத்த பெருமை தென்னிந்திய மகாஜன சங்கத்தைச் சாரும் என்பதைப் பெருமையுடன் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்:**

தமிழ் வளர்த்த முதற் சங்கம் இப்போது இல்லை. ஆனால் தன் இனம் வளர்க்கத் தோன்றிய சங்கம் இன்றும் உள்ளது **நமது தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கமே.**

கால இட வேறுபாட்டுச் சூழல்களால் ஆங்காங்கு ஒருவரை ஒருவர் அறிய முடியாது பிரிந்திருந்தவர்களை இதயத்தால் பிணைய வைத்து குலநலம் செழிக்க — இன வளம் பெருக பெரியவர் காஞ்சி நாகலிங்க முனிவர், திருவாரூர் வள்ளல் சபாபதி செங்குந்தர் முதலிய சான்றோர்களின் முயற்சியாலும் திருமுருகப் பெருமானின் திருவருளாலும் 1927-ல் **தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்** நிறுவப்பட்டது என்பதை அனைவரும் அறிவர். சங்கத்தின் சார்பில் **செங்குந்த மித்திரன்** இதழும் துவக்கப்பட்டது.

இதனால் சமுதாயம் விழிப்புணர்ச்சியும் எழுச்சியும் பெற்றுள்ளது என்பதையும் நம் இனமக்கள் கல்வித் துறையில் ஓரளவு வளர்ச்சி பெற்றுள்ளார்கள் என்பதையும் எவரும் மறுக்கவோ மறைக்கவோ முடியாது.

ஆனால் அறுபத்து நான்கு ஆண்டுகளாக வளர்ந்துவரும் இச்சங்கத்திற்கு அரண்மனைக் காரன் தெருவில் உள்ள அலுவலகக் கட்டடமும், சேத்துப்பட்டில் 18 கிரவுண்ட் நிலமும்தான் சொந்தம் என்பதை இக்குலத்தின் சொந்தக்காரர்கள் (உறவினர்கள்) சிந்திக்க வேண்டாமா? செங்குந்த மித்திரன் இதழ் எத்தனை எத்தனை ஆயிரம் இதழ்களை மலர வைத்து மணம் பரப்புகிறது? ஐம்பது லட்சம் செங்குந்தர்கள் என்று சொல்லிக் கொள்கின்ற **செங்குந்த மித்திரர்கள்** சிந்தித்து எண்ணிப் பார்க்க வேண்டாமா?

இதற்கெல்லாம் காரணமாக நான் கருதுவது **சங்கத்தால் எனக்கென்ன பயன்? சங்கம் எனக்கு என்ன செய்தது?** என்று நம்மில் பலர் நினைப்பதுதான். எனவே இந்த இழிநிலையை — அவலத்தை நீக்க, **சங்கத்திற்கு நாம் என்ன செய்தோம்.** இராமனுக்கு அணில் செய்ததுபோல நம் குலம் செழிக்க நம் சங்கத்திற்கு அருகம்புல் நுனியில் காட்சிதரும் பனித்துளி அளவாவது உதவி செய்தோமா? என்று ஒருவர் விடாமல் **அனைவரும் உணர** ஆரம்பித்தால்:

இச்சங்கத்தைத் தோற்றுவித்த மிகப்பெரும் மரியாதைக்குரிய சான்றோர்களின் வாழ்த்துக்களோடு — இது நாள்வரை இச்சங்கத்தைக் கட்டிக் காத்து வருகின்ற தகுதிமிக்க தலைவர்களின் வாழ்த்துக்களோடு — தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் **உலக செங்குந்த மகாஜன சங்கமாக** ஏற்றம் பெறும் என்ற என் கருத்தினைப் பணிவோடு தெரிவித்துக் கொள்கின்றேன்.

**பரணி பாடும் தஞ்சையும் வளங்கொண்ட வடார்க்காடும்:**

1980-இல் நம்மின மக்கள் கணக்கெடுப்பின்படி சுமார் முப்பத்தைந்தாயிரம் மக்களை கொண்ட தஞ்சை மாவட்டம் இன்று போட்டியிட்டு — போர்க்கொடி நாட்டி 16-வது

மாநில மாநாட்டை நடத்துவது குறித்து நாம் பெருமைப்படுகிறோம்; பூரிப்படைகிறோம் என்றெல்லாம் புகழ்ந்து சொல்லி விடலாம்.

புலிக்கொடியோடு நாடாண்ட தஞ்சைத் தரணி — போர் என்று ஏற்பட்டால் போர்க் களத்தில் முதலில் நின்று போரிட்டதால் நம்மவர்க்கு **முதலியார்** என்ற பட்டத்தை வாங்கித் தந்த தஞ்சைத் தரணி — செய்யும் தொழில் அது நெய்யும் தொழிலாக இருந்தாலும் உண்மையில் — ஒழுக்கத்தில் சிறந்தவர் என்பதால் **கைக்கோளர்** என்ற சிறப்பினை வாங்கித் தந்த தஞ்சைத் தரணி இன்று இம்மாபெரும் மாநாட்டினை நடத்துகிறது என்றால் **எண்ணிக்கையில் குறைந்தாலும் ஏற்றதொரு எண்ணத்தில் குறையாத பஞ்சபாண்டவர்களைத் தான் என்னைத் தோன்றுகிறது.** துரியோதனர்கள் யார் என்று நான் வெளிப்படையாகச் சொல்லத் தேவையில்லை. புரிந்து கொள்வதையும் தெளிவாகத் தெரிந்துக் கொள்வதையும் உங்களது ஆய்வுக்கே விடுகின்றேன்.

இம்மாவட்டத்தில் இவ்வின உணர்விற்குக் காரணமாக இருந்தவர்கள் அமரர் திருவாரூர் சபாபதி வள்ளலும் அமரர் நடராச செங்குந்தரும் ஆவர். முன்னோர் வழியினைப் பொன்போல் போற்றும் அமரர் சேதுராமன் அவர்களையும், திருமிகு ச.கு.பா. பழநிவேல் அவர்களையும், திருமிகு ஆர்.என். சந்தான ராஜகோபாலன் அவர்களையும் மற்றும் இனமானத் தலைவர்களையும் தொண்டர்களையும் இம்மாநாட்டின் பெருமை முழுமையாகச் சேரும். அவர்களுக்கு **முருகப்பெருமான் அருளும்** சாரும் — என்பதை வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். அத்தோடு வழிவழி வந்த மூவேந்தர் மடியிருந்து தமிழ் வளர்த்த — நமக்கென **ஈட்டி எழுபது** பாடிய ஒட்டக் கூத்தனின் உள்ளார்ந்த ஆன்மா ஆறுமுகப் பெருமாளிடம் வேண்டிய வரமே இது என்று சொல்லி வணங்குகின்றேன்.

அண்மையில் பிரிவுபட்ட வடார்க்காடு மாவட்டத்தின் ஒன்றான அம்பேத்கார் மாவட்டத்தின் செங்குந்தர் மகாஜன சங்கத்தின் தலைவனாக உள்ளேன். அதனால் தான் **குடியேற்றம் வாசிக்கு இந்தக் கொடியேற்றும்** ராசி கிடைத்ததோ அல்லது நம்மின மக்கள் மிகவும் நிறைந்த வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டத்தில் அடுத்த மாநில மாநாடு நடைபெற வேண்டும் என்று கிடைத்ததோ நானறியேன். நம்மின மக்கள் மிகுதியும் உள்ள மாவட்டத்தில் ஒன்றான வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டத்தில் அடுத்த மாநில மாநாடு நடைபெறும் என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கின்றேன்.

வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டத்தின் தலைவர் என்ற முறையில் சிலவற்றைச் சொல்லக் கடமைப் பட்டுள்ளேன்.

திருப்பத்தூர் — பெரியவர் அமரர் **கா. அ. சண்முகனார்** சங்கத்தின் துவக்க காலத்தில் இருந்து எல்லா வகையிலும் ஏற்றம் பெற ஒத்துழைத்தப் பெருந்தகையாளர் என்ற பெருமையை இச்சங்க வரலாற்றின் பொன்னேடுகளில் பிரகாசிப்பதைக் காணலாம். 1928-ஆம் ஆண்டிலேயே எனது உறவினர் திரு. பீமராச முதலியார் மாநாட்டில் பங் கேற்றுள்ளார் என்பதையும் நினைவு கூர்கின்றேன். இவ்வாறு இம்மாவட்டம் சங்கத்தோடு **சங்கமமாகி** இருந்த காலம் மாறி சிறிது தொய்வு ஏற்பட்ட நிலையில் பெரியவர் **கா. அ.ச. பத்மநாபன்** அவர்கள் மாவட்டத் தலைமை பொறுப்பேற்று மாவட்டத்தில் பட்டிதொட்டியெல்லாம் சுற்றுப் பயணம் செய்து எண்பதிற்கும் மேற்பட்ட கிளைச் சங்கங்களை ஏற்படுத்தி பொலிவும் வலிவும் தந்து புத்துணர்ச்சி தந்தார் என்பதை அனைவரும்

அறிவர். அப்பெருந்தகையாளர் நினைவோடு தற்போது தலைமை பொறுப்பு ஏற்றுள்ள நான் அவர் வழி இனக்கடமை ஆற்றுவேன் என்பதை இங்குள்ளவர்களுக்கு மிகப்பணிவோடு தெரிவித்துக் கொள்கின்றேன்.

**நம் கடன் பணி செய்து கிடப்பதுவே:**

இம்மாநாட்டில் கொண்டு வரும் முடிவுகளில் நான் நுழைவது அழகல்ல. இருப்பினும் என் உள்ளார்ந்த விழைவுகளை எடுத்துரைக்க விரும்புகின்றேன்.

நமது சங்கத்திற்கு ஆஸ்தி குறைவுதான். இருந்தாலும் நமது சமுதாயத்திற்கு அளவு கடந்த ஆஸ்திகளை **ஆஸ்திகர்களாகிய** நம் முன்னோர்கள் விட்டுச் சென்றுள்ளனர். அதனைப் பாதுகாக்கும் நம் சமுதாயச் சான்றோர்களோடு நமது சங்கம் தொடர்பு கொண்டு, தற்போதுள்ள நிலையில் சமூக — கல்வி மேம்பாட்டிற்கு மேலும் மிகுதியாக உதவ வேண்டும் என்ற **அவசர அவசியத்தை** அவர்கள் ஏற்றுக் கொள்ளும் வண்ணம் எடுத்துரைக்க வேண்டும்.

வள்ளுவன் வலியறிதல் என்ற தலைப்பில் கூறிய வண்ணம் நம் இன வலிமையால் மட்டும் சாதிக்க இயலாத நிலை ஏற்படின் பலரையும் இணைத்துச் செல்லும் மாற்றான் வலியறிந்து நம்மோடு சேரக்கூடிய துணைவலியைச் சேர்த்துக் கொள்வது குறித்து, காலம் அறிந்து ஆராய்வது நல்லது.

வசதியுடையவர்கள் சமுதாய நன்மைக்காக அரசியல் தலைமையில் செல்வாக்குப் பெற முந்திக் கொள்ள வேண்டும். அச்செல்வாக்குடைய தலைவர்கள் இருந்தால் நமக்குப் பல சட்டமன்ற — நாடாளுமன்ற இடங்களில் போட்டியிட வழி ஏற்பட்டிருக்கும். கால்குழியில் தொழில் செய்த பழக்கத்தினாலோ என்னவோ நம்மவர் பலர் **காலை வாருவதும் குழிபறிப்பதுமாக** உள்ளனர். கனிவான பிரச்சாரத்தின் மூலம் இந்நிலையை மாற்ற வேண்டும்.

நமது குலதெய்வம் குமரக் கடவுளின் வேல் ஞான வேலாகும். நான் என்ற அகங்காரத்தையும் எனது என்ற மமகாரத்தையும் போக்குவதே அவ்வேலின் வேலை. எனவே **அவ்வேலைத் தொழுவதே நம் வேலை என்று கருதி, நான், எனது என்ற இரண்டு பற்றினையும் விட்டு "நமது"** என்ற உண்மையை உணர்தல் வேண்டும். இந்நிலை நம்மவர்க்கு வந்தால் நாளை நமதே! நாடு நமதே!! அகிலமும் நமதே!!!

எல்லாவற்றிற்கும் மேலாகத் தலைமைக்குக் கட்டுப்படும் இராணுவக் கட்டுப்பாடு நமக்கு வேண்டும். பாசத்திற்குரிய அமரர் பத்மஸ்ரீ நாச்சிமுத்து அவர்களால் அடையாளம் காட்டப்பட்ட உத்தியோகரத்தினா — நெசவாளர் நேசன் — ஒழுக்கச் செம்மல் ஜெ. சுத்தானந்தம் அவர்கள் தலைமையில் நம்மவர் **சுத்த — ஆனந்தம்** காண்பர் என்றும் பொதுச் செயலாளர் பேராசிரியர் செல்வராசன் அவர்கள் செயலாற்றலில் நம்மவர் செல்வம் பெற்று இராசராய் விளங்குவர் என்றும் நான் உறுதியோடு கூறி — இந்த வாய்ப்பினை அளித்த அனைவர்க்கும் என் நன்றி கூறி அமைகின்றேன்.

வணக்கம்.

மாநில மாநாடு சிறக்க எங்கள் நல்வாழ்த்துக்கள்!



# செங்குந்தர் கல்விக் கழகம்

**ஈரோடு**



**எங்கள் கல்விக் கழகத்தின் கீழ் இயங்கி வரும் கல்வி நிறுவனங்கள்:**

1. செங்குந்தர் மேல்நிலைப்பள்ளி
2. செங்குந்தர் மெட்ரிகுலேசன் பள்ளி
3. செங்குந்தர் பிரிபரேட்டரி பள்ளி



**திரு. A. முனுசாமி,**
தலைவர்.

**திரு. J. சுத்தானந்தன்,**
தாளாளர்.

**திரு. E.V. பாலசுப்ரமணியன்,**
செயலாளர்.

**திரு. R.M. சண்முகவடிவேல்,** **திரு. R.S. நடராஜன்,**
துணைத் தலைவர்கள்.



**உறுப்பினர்கள் :**

திரு. K. ராஜகோபால்
,, S.M. பிரதாபன்
,, V.G.T. வேலு
,, M. செல்வராஜ்
,, M. முருகேசன்
,, S.P. கிருஷ்ணசாமி

திரு. N.M.K. சண்முகம்
,, M.C.P. ராமலிங்கம்
,, K.C.K. திருநாவுக்கரசு
,, T.A.N. குணசேகரன்
,, C.P. சொக்கலிங்கம்
,, T. பாலசுப்பிரமணியம்



நெசவாளர் நேசன், திரு. ஜெ.சுத்தானந்த செங்குந்தர் B.Sc.,
தலைவர் - தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம்

தலைமைச் சங்க ஏழாவது தலைவர் - 26—7—1987 முதல் ... ...



ஆக்கூர் அமரர் ராமலிங்க செங்குந்தர்
ஆக்கூர்
முன்னாள் தலைவர், தஞ்சை ஜில்லா
செங்குந்த மகாசன கல்விச் சங்கம்.



சென்னை சி.நடராச செங்குந்தர்
முன்னாள் அமைச்சர்,
தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம்.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க 16-ஆவது மாநில மாநாட்டில்

மாநிலத் தலைவர் **திரு. ஜெ. சுத்தானந்தன்** அவர்கள்

ஆற்றிய

# தலைமைப் பேருரை

தமிழகம் முழுவதிலிருந்தும் வருகை தந்துள்ள என் உயிரினும் மேலான செங்குந்த குல சொந்தங்களே! இளைஞரணிச் சகோதரர்களே! வணக்கத்திற்குரிய தாய்க்குலமே! உங்கள் அனைவருக்கும் என்னுடைய நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழகத்திலிருந்து மட்டுமல்லாது ஆந்திரம், பாண்டிச்சேரி, கர்நாடகம், கேரளம், மகாராஷ்டிரம் போன்ற பிற மாநிலங்களிலிருந்தும், சிங்கப்பூர், ஸ்ரீலங்கா போன்ற அயல் நாடுகளிலிருந்தும் பல்வேறு இன்னல்களுக்கும் இடையூறுகளுக்குமிடையே நீங்கள் கூடியிருப்பதைக் காணும் பொழுது பெரிதும் மகிழ்ச்சியடைகின்றேன்.

**நினைவு கூறுகிறேன் :**

65 ஆண்டுகளுக்கு முன் இந்த இயக்கம் தோன்றுவதற்கு முன்னோடியாக விளங்கிய ஆரூர் வள்ளல் சபாபதி செங்குந்தர் அவர்கள் தோன்றிய இந்தத் தஞ்சை மண்ணில் - 'கும்பகோணம் கோயில் அழகு' என்று புகழப்படும் இந்த குடந்தை மாநகரில் - 16-வது மாநில மாநாடு நடைபெறுவது நமக்கெல்லாம் பெருமை தரக்கூடிய ஒன்றாகும்.

இந்த நேரத்தில் ஆரூர் வள்ளல் அவர்களுக்கும், அவருக்கு துணையாய் இருந்து இந்த இயக்கத்தின் தூண்களாக விளங்கிய இம்மாவட்டத்தைச் சேர்ந்த மன்னார்குடி திரு. பெரி.ராம. நடராஜ செங்குந்தர், மஞ்சக்கொல்லை திரு. ராம. சம்பந்தமூர்த்தி செங்குந்தர், திரு. ஆர்.எம்.பி. ராஜகோபால் செங்குந்தர், ஆக்கூர் திரு. சு. இராமலிங்க செங்குந்தர், திரு. வி. ரத்தின செங்குந்தர் என்று பலரையும் நன்றியுடன் நினைவு கூறக் கடமைப் பட்டிருக்கிறேன்.

1976-ஆம் ஆண்டு மறைந்த நம் தலைவர் பத்மஸ்ரீ எம்.பி. நாச்சிமுத்து செங்குந்தர் அவர்களும் நானும் இணைந்து பணியாற்றிய ஈரோடு மாநாட்டில் பொதுச் செயலாளராகப் பொறுப்பேற்ற நாள் முதலாக தன் இறுதி மூச்சுவரை இந்த இயக்கத்தின் வளர்ச்சிக்காகத் தன்னை அர்ப்பணித்து மாநில, மாவட்ட அளவில் பல்வேறு பொறுப்புகளை வகித்து காலமெல்லாம் இந்த சமுதாயத்தைப் பற்றியே எண்ணி, பேசி, இந்த மாநாட்டினை தன் வாழ்நாளுக்குள் சிறப்புற நடத்திட வேண்டும் என்று கனவு கண்ட சமுதாயக் காவலர் திரு. டி. சேதுராம செங்குந்தர் இன்று நம்முடன் இல்லை. ஆனால் அவரது கனவை இன்று நாம் நனவாக்கியிருக்கின்றோம். அண்ணார் அவர்களை இந்த நேரத்திலே நன்றியுடன் நினைவு கூர்ந்து அவருக்கு உங்கள் அனைவர் சார்பிலும் புகழ் அஞ்சலியைக் காணிக்கையாக்குகின்றேன்.

இவர்களுக்கு மட்டுமல்ல இந்த இயக்கத்தைக் கட்டிக் காத்து வழி நடத்திய பெரு மக்கள் திரு. க.அ. சண்முக செங்குந்தர், திரு. சி. நடராஜ செங்குந்தர், என்னுடைய வழிகாட்டியாகவும் ஆசானாகவும் திகழ்ந்த நம் ஒப்பற்ற தலைவர் கைத்தறிக் காவலர் பத்மஸ்ரீ எம்.பி. நாச்சிமுத்து செங்குந்தர் ஆகியோருக்கும் நம் அனைவருடைய இதயப் பூர்வமான வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தப் பெருமக்களை என் நெஞ்சில் நிறுத்தித் தலைமை உரையைத் தொடங்குகிறேன்.

மூன்று ஆண்டுகளுக்குள்ளாக உங்களை மூன்றாவது முறையாக சந்திக்கின்ற வாய்ப்புக் கிடைத்ததில் பெரிதும் மகிழ்ச்சியும் பெருமையும் அடைகின்றேன். ஆனால் அதே நேரத்தில் நம் சமுதாயத்திற்கு ஏற்பட்ட பல்வேறு சோதனைகளை எண்ணி வேதனைப் படுகின்றேன்.

**குலத்தொழிலின் சீர்குலைவு:**

நெசவுத் தொழிலையே நம்பி வாழுகின்ற நம் சமுதாய மக்களுக்கு கடந்த சில மாதங்களாக நெசவுத் தொழிலில் ஏற்பட்டுள்ள சீர்குலைவு அவர்களுடைய வாழ்க்கையையே பெரிதும் பாதித்துள்ளது என்று சொன்னால் அது மிகையல்ல. கைத்தறி நெசவாக இருந்தாலும் சரி; விசைத்தறி நெசவாக இருந்தாலும் சரி; இரண்டிலும் பிரச்சினைகள் ஏராளம்.

நூல்விலை ஏற்றம், தொடர்ந்து நூல் கிடைக்காததால் போதிய வேலை வாய்ப்பின்மை உழைப்புக்கேற்ற ஊதியம் இல்லாத நிலை, ஏறிவரும் விலைவாசியால் பொருளாதார நெருக்கடி என்று பல்வேறு இன்னல்களுக்கு ஆளாகியுள்ளனர்.

நெசவுத் தொழிலில் பாதிப்பு என்கிற பொழுது ஒட்டு மொத்த செங்குந்தர் சமுதாயமே பாதிக்கிறது. காரணம் 90 சதவீத நம்மின மக்கள் இந்தத் தொழிலையே நம்பி வாழுகின்றார்கள், இந்த தொழிலை நம்பி இருக்கின்றவரை நம் சமுதாயத்திற்கு முன்னேற்றம் என்பதே ஒரு கேள்விக்குறிதான்.

ஆனால் வேறு தொழிலுக்குச் செல்லுகின்ற வாய்ப்பும் வசதியும் இல்லாத நிலையில் இந்தத் தொழிலிலேயே ஒட்டிக் கொண்டிருக்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கின்றோம்.

நெசவுத் தொழிலுக்கும் அதனை நம்பி வாழுகின்ற நெசவாளர்களுக்கும் உரிய பாதுகாப்புக் கொடுக்கின்ற விதத்தில் குஜராத் மாநிலத்தைப் போன்று நெசவாளர் களுக்குத் தாழ்த்தப்பட்ட மக்களுக்கான சலுகைகள் கொடுக்கப்பட வேண்டும் எனக் கேட்டோம். கைத்தறி நெசவாளர்களுக்கு இலவச மின்சாரம் கொடுக்கப்பட வேண்டும் எனக் கேட்டோம். விசைத்தறியாளர்களுக்கு ஆந்திர மாநிலத்தில் உள்ளது போல் யூனிட் 1-க்கு 55 பைசா சலுகை மின்கட்டணம் விதிக்கப்பட வேண்டும் எனக் கேட்டோம். ஆனால் அனைத்துக் கோரிக்கைகளும் கடந்த காலத்தில் செவிடன் காதில் ஊதிய சங்காயிற்று.

இந்தக் கோரிக்கைகள் நிறைவேற்றப் பட்டால் நாம் குபேரர்களாக மாறிவிடப் போவதில்லை. ஆனால் தொழிலுக்குப் பாதுகாப்புக் கிடைக்கும். வறுமைக் கோட்டிற்குக் கீழே வாழும் நாம் வறுமைக் கோட்டை எல்லையாக வைத்துக் கொள்ள முடியும்.

**புதிய நம்பிக்கை:**

அண்மையில் பொறுப்பேற்றுள்ள மத்திய மாநில அரசுகளின் அறிவிப்புகள் நமக்கு ஒரு புதிய நம்பிக்கையை ஊட்டியிருக்கிறது.

செய்யும் தொழிலால் சவளைப் பிள்ளைகளாகக் கிடக்கும் செங்குந்தர் இனத்தின் குறைகளை மாண்புமிகு தமிழக முதல்வர் புரட்சித் தலைவி செல்வி. ஜெயலலிதா அவர்கள் தாயுள்ளத்தோடு பரிசிலனை செய்து நமக்கு ஒரு புது வாழ்வு அளிப்பார் என்று நம்பு கின்றேன்.

எனவே, தமிழக அரசு நெசவாளர் மாநாட்டில் நாம் நிறைவேற்றும் தீர்மானங்களை கனிவோடு பரிசீலித்து ஆவன செய்யக் கேட்டுக் கொள்கிறேன்.

**நம்மவரின் பாதிப்பு:**

தொழில் ரீதியாக பாதிக்கப்பட்டுள்ள நமக்கு சமுதாய ரீதியாக ஏற்பட்டுள்ள பாதிப்புகள் அதைவிட வேதனைக்குரியதாகும். நாம் எங்கு வாழ்ந்தாலும் எந்த நிலையில் வாழ்ந்தாலும் பிற சமுதாயங்களுடன் இணைந்து சுமுகமான சூழ்நிலையில் வாழ்வதையே விரும்புகிறோம். ஆனால் நம்மிடையே இப்பொழுது ஏற்பட்டுள்ள சமுதாய உணர்வையும் ஒற்றுமையையும் காழ்ப்புணர்வோடு காணும் வேற்று சமூகத்தினர் சிலர் ஆங்காங்கே சில இடங்களில் நம்மவர்களைத் தாக்கி நம்மவர்களுடைய உடைமைகளுக்கும் பொருள் களுக்கும் சேதங்களை உண்டாக்கியிருக்கிறார்கள்.

அத்தகைய பாதிப்புகளுக்கு உள்ளான நண்பர்களுடைய தியாகம் இந்தச் சமுதாயத் திற்காக அவர்கள் செய்த தியாகம் என்றே கருதுகிறேன். ஆனால் இந்த வார்த்தைகள் மட்டும் அவர்களுக்கு ஆறுதல் அளித்துவிடாது என்பதையும் நான் உணர்வேன். நாம் முன்னைக் காட்டிலும் ஒன்றுபட்டு செயல்பட வேண்டும் என்பதையே நடந்த சம்பவங்கள் நமக்குப் பாடம் சொல்கின்றன.

இனிமேலாவது இதுபோன்ற தாக்குதல்களும் வன்முறைகளும் நடைபெறாத வண்ணம் உரிய நடவடிக்கைகளை உறுதியுடன் எடுக்க வேண்டுமென மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

இடஒதுக்கீட்டினால் ஏற்பட்ட பாதிப்பு நம் சமுதாயத்தின் அழிவிற்கே வித்திடும் போல் தோன்றுகிறது. நான் ஏதோ மிகைப்படுத்திச் சொல்லி உங்களைப் பயமுறுத்துவதாக நீங்கள் எண்ண வேண்டாம்.

தொழில் கல்வி படிப்பதற்கான வாய்ப்புகள் குறைந்து கொண்டே வருகின்றன. இன்னும் சில ஆண்டுகள் சென்றால் தொழில் கல்வி படித்தவர்களை நம்மிடையே காண்பது அரிதாகிவிடும்.

நெசவுத் தொழிலையே நம்பி வாழும் நமது குடும்பம் முழுவதுமே பாடுபட்டால் தான் அரை வயிற்றுக் கஞ்சிக்காவது வழி என்ற நிலையில் உயர்நிலைப் பள்ளி படிப்பு வரை கூட படிக்க வைக்க முடியாத நிலையில் தொழிற் கல்வியைப் படிக்க வைக்க நமக்கு வசதியும் வாய்ப்பும் ஏதும் இல்லை என்று நீங்கள் எண்ணுவது புரிகிறது.

**வேலை வாய்ப்பு என்றும் கானல் நீரே!**

இன்று நமக்கு அந்த வாய்ப்பு இல்லாமல் இருக்கலாம். ஆனால் நாளை உங்கள் பேரனோ அல்லது அடுத்த தலை முறையினரோ படிக்க வைக்க விரும்பினால் அதற்கான வாய்ப்புகள் இல்லாமல் போகும் — இதே நிலை நீடித்தால்.

எனவே, இட ஒதுக்கீட்டில் நமக்கு மட்டுமல்ல நம்மைப் போல் பாதிக்கப்பட்ட பிற இன பிற்படுத்தப்பட்ட மக்களுக்கும் சமூக ரீதியாக நியாயம் கிடைக்கவில்லை என்றால் அந்த மக்களின் முன்னேற்றங்கள் பாதிக்கப்பட்டு அவர்களின் எதிர்காலம் - குறிப்பாக இளைஞர்களின் எதிர்காலம் கேள்விக் குறியாகிவிடும்.

கல்வியில் ஏற்பட்டுள்ள பாதிப்பைக் காட்டிலும் வேலை வாய்ப்பில் ஏற்பட்டுள்ள பாதிப்பு இனி நம்மவர்களுக்கு, அரசு வேலை வாய்ப்பு என்பது கானல் நீராகத்தான் காட்சி அளிக்கிறது.

உயர் கல்வி படிக்க வைப்பதற்கான வாய்ப்புகள் இல்லாத நிலையிலும் கஷ்டப்பட்டு தங்கள் குழந்தைகளைப் படிக்க வைத்து அதன் பிறகு வேலை வாய்ப்புக்காக அலைகின்ற பொழுது ஏன் படிக்க வைத்தோம் என்று பெற்றோர்கள் எண்ணுகின்ற நிலையும் ஏன் படித்தோம் என்று இளைஞர்கள் விரக்தியடைகின்ற நிலையும் ஏற்பட்டுள்ளது.

கல்வி, வேலை வாய்ப்புகளில் பாதிக்கப்பட்ட செங்குந்தர்களுக்கு உரிய வாய்ப்புகள் கிடைக்கின்ற வகையில் செங்குந்தர்களை மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் சேர்க்க விரைவான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என தமிழக அரசை இந்த மாநாட்டின் வாயிலாகக் கேட்டுக் கொள்கிறேன்.

**பெண்களின் நிலை:**

ஒரு சமுதாயத்தில் பெண்களின் முன்னேற்றத்தான் அந்த சமுதாயத்தின் முன்னேற்றத்திற்கு அளவுகோலாக நிர்ணயிக்கப்படுகிறது. ஆனால் நமது சமுதாயத்தில் பெண்களின் நிலை பரிதாபத்திற்குரியதாக இருக்கிறது. பெண் கல்வி அவசியம் என்பதை நம் சமுதாய மக்கள் இன்னும் உணராத நிலையில் இருக்கிறார்கள்.

சேலம் மாவட்டத்தில் மணியலூர் என்னும் கிராமத்திற்குச் சென்றிருந்தேன். அங்குள்ள நம் உறவினர்கள் பெண்களை எட்டாவது வரை படிக்க வைத்தால் அவர்களின் திருமணத்தின் பொழுது அவர்களுக்கு அரசு ரூ. 5,000/- மானியமாகத் தருகிறார்கள் என்பதைக் கூட தெரியாத நிலையில் இருக்கிறார்கள்.

எனவே கிளைச்சங்கங்கள் பெண் கல்வியை ஊக்குவிக்கின்ற வகையில் அங்குள்ள மக்களுக்கு அரசாங்கம் அளிக்கின்ற சலுகைகளை எல்லாம் எடுத்துச் சொல்லி குறைந்தது உயர் கல்வி வரையாவது படிக்க வைக்க முயற்சிசெய்ய வேண்டும்.

ஒரு குடும்பத் தலைவி படித்த பெண்ணாக இருந்தால் அடுத்த தலைமுறை கல்வியில் முன்னேறுவதற்கு அது வாய்ப்பாக இருக்கும்.

**உங்கள் கரங்களில்...**

இன்றைய இளைஞர்களின் கரங்களில் தான் செங்குந்தர்களின் நல் வாழ்வு ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. நான் செல்லுகின்ற இடங்களிலெல்லாம் தாய்ப் பசுவைத் தேடி வருகின்ற கன்றுகளைப் போல என்னைத் தேடி வந்து என் செயலுக்கு உற்சாகம் கொடுத்து ஊக்கப்படுத்துகிற இளைஞர்களின் எதிர்காலத்தை எண்ணிப் பார்க்கின்றேன். கண்ணுக் கெட்டிய தூரம் வரை கார் இருள் தான் தெரிகிறது என்றாலும், காரிருளைக் கிழித்து எறிந்து வைகறைப் பொழுதைக் காணுகின்ற ஆற்றலும் திறமையும் நம் செங்குந்த இளைஞர்களுக்கு உண்டு என்பதை நான் உறுதியாக நம்புகிறேன்.

**வயிற்றுக்குச் சோறு உண்டா?**

நம் செங்குந்த இளைஞர்களுக்கு உயர்கல்வி படிக்க வேண்டும் என்ற ஆசையிருக்கிறது. ஆனால் எதைப் படிப்பது என்பது தெரியவில்லை. தறித் தொழிலில் ஈடுபட்டு தரித்திரத்திற்கு சொந்தக்காரர்களாக வாழ்கின்ற பெற்றோர்களின் உயிரையும், உடமையையும் அடமானம் வைத்து கல்லூரியில் கால் வைத்தால் போதும் என்று கருதி B.A., B.Sc., என்ற பட்டப் படிப்புக்களைப் படிக்கத் துடிக்கின்றனர். ஆனால் அந்த பட்டப் படிப்புகள் வயிற்றுக்குச் சோறிடவில்லை; வானத்தில் பறக்க விடும் பட்டங்களுக்குத் தான் பயன்படுகின்றன.

**கவனம் திரும்பட்டும்:**

எனவே, படிக்க விரும்பும் இளைஞர்கள் தொழில் அடிப்படையில் அமைந்த ஐ.டி.ஐ., டிப்ளோமா, பொறியியல், மருத்துவம், விவசாயப் பட்டப் படிப்பு போன்றவைகளில் சேர்ந்து அவற்றில் தேர்ந்து 'கைத்தொழில் ஒன்றைக் கற்றுக் கொள்; கவலை உனக்கில்லை ஒத்துக் கொள்' என்ற கவி மொழிக்குப் புது மெருகேற்றிட வேண்டுகிறேன்.

**இதோ உதவிக்கரம்:**

படிக்க ஆர்வமிருந்தும், தகுதியிருந்தும் திறமையிருந்தும் பொருள் தடை காரணமாக கருகி விடும் நம் குலக் கொழுந்துகளுக்கு வாழ்வளிக்க கடந்த ஆண்டு சென்னையில் நடை பெற்ற மாநாட்டில் அறிவிக்கப்பட்ட **'பாவேந்தர் பாரதிதாசன் அறக்கட்டளை'** இந்த மாநாடு முதற் கொண்டு செயல்பட இருக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். வேற்றுத் தொழில் அறியா நம்மவர்களுக்கு மாற்றுத் தொழிலுக்கு வித்திடும் இந்த சீரிய பணிக்கு நிதியினை கொண்டு வந்து குவிப்பீர். "நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர்" என்ற பாரதியின் வாக்கினை செயல்படுத்தும் நம் குலச் செம்மல், தொழிலதிபர் சென்னை எம். எத்திராஜ் செங்குந்தர் அவர்கள் ஒரு லட்சம் அளிப்பதாக வாக்களித்து ரூபாய் இரண்டு லட்சமாக அளிப்பதாக அறிவித்துள்ளார். அவருக்கு இந்த நேரத்தில் உங்கள் சார்பில் என் நன்றியினை தெரிவித்துக் கொள்கிறேன்.

### தொழில் தொடங்க

படிப்பிருந்தும் ஆர்வமிருந்தும் என்ன தொழில் செய்வது ? யாரை அணுகுவது ? எப்படிச் செயல்படுவது என்று திசையறியாது திக்குத் தெரியாத காட்டில் சிக்கித் தவிக்கின்ற நம் குல இளைஞர்கள் கண்ணிருந்தும் குருடராக அலையும் நிலையைப் போக்க பல காலம் சிந்தித்தேன். அதன் விளைவாக உங்களுக்கு வழிகாட்ட 'தொழில் முனைவோர் மேம்பாட்டுக் குழு' ஒன்றினை இந்த மாநாட்டிற்குப் பிறகு உருவாக்கி செயல்படுத்த எண்ணியுள்ளேன்.

அந்தக் குழுவில் நம் குலத் தொழிலதிபர்கள், தொழில் வல்லுநர்கள், தொழிற் துறையோடு தொடர்புடைய ஓய்வு பெற்ற அரசு அதிகாரிகள் ஆகியோர் அங்கம் வகிப்பார்கள். அவர்களுடைய பெயர்ப் பட்டியலும் நீங்கள் ஆற்ற வேண்டிய பணியும் குறித்து அடுத்து வரும் செங்குந்த மித்திரன் இதழ்களில் தொடர்ந்து எழுதுவேன்.

### சமுதாயப் பணி:

நம் இளைஞர்களுக்கு கல்வி, தொழில் போன்றே சமுதாயப் பணியிலும் தெளிவில்லாத நிலையைக் காண்கின்றேன். சமுதாயப் பணி என்பது இப்படி பேரணி, மாநாடு, நடத்துவது மாத்திரமல்ல; அல்லல் பட்டு ஆற்றாது கண்ணீர் வடிக்கும் நம்மவருக்கு அரசு அவ்வப்போது அறிவிக்கும் சமுதாய நலத் திட்டங்களை கூர்ந்து கவனித்து அவை நம்மவர்களுக்கு கிட்டிட பாடுபட வேண்டும்.

படித்த இளைஞர்கள், பள்ளிப் படிப்பை முடிக்க இருக்கும் மாணவர்களுக்கு உயர் மதிப்பெண்கள் பெறவும், உயர் கல்வி பெறவும், அரசு உதவிகள் பெறுவதற்கும் வழி காட்டிகளாய்ச் செயல்பட வேண்டும்.

சிக்கனத் திருமணத்திற்கு இளைஞர்கள் முன்னோடிகளாக இருக்க வேண்டும் என்றும் விரும்புகிறேன். படித்த இளைஞர்கள் ஆங்காங்கு பழைய புத்தகங்களை திரட்டிப் புத்தக வங்கிகளை ஏற்படுத்துங்கள்; வசதியற்ற நம் குல ஏழை மாணவர்களுக்கு கிடைக்கச் செய்யுங்கள். கல்விக் கண் திறக்கும் பணியில் இது ஒரு தலையாய பணியாகும்.

### சொத்தினைக் காக்க:

நம் முன்னோர்கள் நம் குல நலனுக்காக தேடித் தந்த கோடிக்கணக்கான சொத்துக்கள் நாடு முழுவதும் இருக்கின்றன. ஆனால் அதை யார் யாரோ, எப்படி எப்படியோ அனுபவித்துக் கொண்டு நம்மவர்களுக்கு எந்த வகையிலும் பயன்படாத நிலை இருக்கிறது. இந்த நிலைகள் மாறி ஆங்காங்குள்ள நம் குலச் சொத்துக்கள் நம்மவர்களின் முன்னேற்றத்திற்குப் பயன்படுகின்ற வகையில் அந்தச் சொத்துக்கள் பாதுகாக்கப்பட வேண்டும். அதற்கு இளைஞர்கள் எடுத்துக் காட்டாக இருக்க வேண்டும்.

### செல்வந்தர்களின் ஈடுபாடு:

செங்குந்தர்களில் செல்வந்தர்கள் மிகக் குறைவு. அவர்களிலும் நமது இயக்கத்துடன் தொடர்புடையவர்கள் ஒரு சிலரே. ஆனால் இந்த சமுதாயம் முன்னேற வேண்டுமானால்

பணம் படைத்தவர்கள் மனம் வைக்க வேண்டுகிறேன். ஏதோ செல்வந்தர்களுடைய வருமானத்தையெல்லாம் இந்த சமுதாயத்திற்காக அள்ளிக் கொடுங்கள் என்று கேட்பதாக யாரும் எண்ணி விட வேண்டாம். 'சேது பந்தனம் கட்ட அணில் உதவியது' போன்ற சிறு உதவியாக இருந்தாலும் அது இந்த சமுதாயத்தின் முன்னேற்றத்திற்கு பெரிதும் துணையாக இருக்கும். எனவே, உங்களுடைய உதவிக் கரங்களை நீட்ட அன்போடு வேண்டுகிறேன். நம்மவர்கள் வாழும் பகுதியில் கல்வி நிலையங்கள் துவங்க உங்கள் சிந்தையைச் செலுத்துங்கள்.

**நமது பலம்:**

ஒரு இயக்கத்தின் பலம் என்பது அதில் இணைத்துக் கொண்ட உறுப்பினர்களின் எண்ணிக்கையைப் பொறுத்தது. அரசு ஆனாலும் மற்றவர்கள் ஆனாலும் நம் சொல்லுக்கு செவி சாய்ப்பது என்பது எண்ணிக்கையின் பலத்தைப் பொறுத்தது. 50 இலட்சம் பேர் வாழ்கிறோம், ஆனால் 5 லட்சம் பேர்களைக் கூட இன்னும் உறுப்பினர் களாகச் சேர்க்கவில்லை. அடிப்படை உறுப்பினர் சேர்ப்புப் பணியில் சில மாவட்டச் சங்கங்கள் ஆர்வம் காட்டாதது வேதனைக்குரியது.

இந்த நிலை மாறி 5 லட்சம் உறுப்பினர்கள் என்ற இலக்கை அடைந்திட தீவிரமாக செயலாற்றிடக் கேட்டுக் கொள்கிறேன். ஆர்வம் காட்டாத மாவட்டங்களில் தலைமை சங்கமே நேரிடையாக அடிப்படை உறுப்பினர் சேர்ப்பு இயக்கத்தைத் துவக்கும். ஆங்காங்குள்ள மாநில சங்க நிர்வாகிகள் மாவட்டச் சங்கங்களுடன் இணைந்து இந்த பணியில் தீவிரம் காட்ட வேண்டுகிறேன்.

**தொண்டினைத் தொடருங்கள்:**

நம்மவர்களுடைய தேவைகளோ அதிகம். அவர்கள் நம்மிடையே அதிகம் எதிர் பார்ப்பதில் தவறில்லை. எனவே, அவர்களுடைய எதிர்பார்ப்புகளுக்கு ஏற்ப நாம் பொறுப்பிலே இருப்பவர்கள் - செயல்பட வேண்டியது தலையாய கடமையாகும். இந்தக் கடமையை நிறைவேற்ற இயலாதவர்கள் நந்திகளாக இருப்பதைக் காட்டிலும் நகர்ந்து விடுவதே மேல் என வேண்டுகிறேன்.

**செயல் வடிவம் தாருங்கள்!**

அதே நேரத்தில் இந்த மாநாட்டில் நீங்கள் காட்டிய ஆர்வமும், எழுச்சியும் எனக்கு புதிய நம்பிக்கையையும் உற்சாகத்தையும் ஊட்டியிருக்கின்றன. இங்கு எழுப்பிய கோஷங்களும் இத்தகைய மாநாடுகளுமே நம்முடைய வாழ்வாகி விடாது. செங்குந்த குல சொந்தங்களே! உரையில் கூறிய கருத்துகளுக்கு செயல் வடிவம் கொடுத்திட செயலாற்றுங்கள்! செயலாற்றுங்கள்!

வாழ்க செங்குந்தம்!

வளர்க செங்குந்தர்!!

—o—

மாநில மாநாடு சிறக்க எங்களது நல்வாழ்த்துக்கள் !




## எம்.பி. நாச்சிமுத்து எம். ஜெகநாதன் பாலிடெக்னிக்,

சென்னிமலை - 638 051.

**பெரியார் மாவட்டம்**

(தமிழ்நாடு அரசின் அங்கீகாரம் பெற்றது.)

Phone: Office: **541**

எங்கள் பயிலகத்தில் பின்வரும் பட்டயப் படிப்பிற்கு *(Diploma Course)* மாணவர் மற்றும் மாணவியர் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள்.

1. **கட்டிடப் பொறியியல்** — 3 ஆண்டு
   *(Civil Engineering)*

2. **மின் மற்றும் மின்னணுவியல்** — 3 ஆண்டு
   *(Electrical & Electronics Engineering)*

3. **மின்னணு மற்றும் தொலைத்தொடர்பு பொறியியல்** — 3 ஆண்டு
   *(Electronics & Communication Engineering - Subject to approval)*

✽ மாணவர்களுக்கு மட்டும் விடுதி வசதி உண்டு.

✽ நன்கொடை பெறுவது இல்லை.

**ஜெ. சுத்தானந்தன்,**
தாளாளர்.



பேராசிரியர் தி.ரா.செல்வராசன் M.A., M.Ed., P.hd.,
பொதுச் செயலர்,
தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம், சென்னை.

## செங்குந்தர்குல தளபதி

துணைத்தலைவர்

தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்



தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம்

அமரர் தெ.சேதுராம செங்குந்தர்

முன்னாள் துணைத் தலைவர்

திருவாரூர்.

29—7—91 அன்று குடந்தையில் நடைபெற்ற 16-ஆவது மாநில செங்குந்தர் மாநாட்டில், இளைஞர் மாநாட்டினை திறந்து வைத்து

திருச்சி மாவட்டச் சங்க பொதுச்செயலாளர்

டாக்டர் **மு. கருணாநிதி** M.B.B.S., D.C.M. அவர்கள்

# ஆற்றிய உரை

இளைஞர் மகாநாட்டு தலைவர் அவர்களே!

குலத்தலைவர் அண்ணன் திரு. சுத்தானந்தம் செங்குந்தர் அவர்களே!

முன்னிலை வகிக்கின்ற பெருமக்களே!

சமுதாய இயக்கத்தின் தூண்களாக விளங்கும், பாசமிகு இளைஞரணி தம்பிகளே!

அன்புகெழுமிய தாய்மார்களே!

வணக்கம்,

மாநில சங்கம் துவங்கி 60-65 ஆண்டுகளாக, இல்லாத எழுச்சி இன்று சமுதாயத்தில் ஏற்பட்டுள்ளதற்கு காரணமே இளைஞர்களிடையே ஏற்பட்டுள்ள சமுதாய உணர்வுதான். அவர்களுடைய செயல்திறனை ஒருங்கிணைத்து - காட்டாற்று வெள்ளமாய் திரண்டிருக்கும் அவர்களது எழுச்சியை - மாநிலச் சங்கத் தலைவரும் இளைஞரணித் தலைவரும் இரு கரைகளாக இருந்து இளைஞர்களது ஆர்வத்தை சமுதாயப் பணிக்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும். மாநில இளைஞரணி அமைப்பை ஒழுங்கு படுத்தி மாநிலச் சங்கத்திற்கு துணை அமைப்பாக நிலைநிறுத்த வேண்டும் சமுதாய உணர்விலும், செயல்திறனிலும், இயக்க நிர்வாகிகளை அனுசரித்துச் செல்கின்ற பண்பிலும், தொண்டர்களுடன் பாசப்பிணைப்போடு பழகுகின்ற பாங்கிலும், இயக்கப் பணிகளுக்கு நேரத்தையும். பணத்தையும் செலவிடுகின்ற மனத்தை கொண்டுள்ள பெருந்தன்மையிலும், நமது குலத்தலைவர் திரு. ஜெ.எஸ். அவர்களுக்கு இணையான ஒருவரை மாநில இளைஞரணி அமைப்பாளராக தேர்வு செய்ய வேண்டும்.

திருச்சி மாவட்டத்தில் இளைஞரணியினருக்கு போதுமான அளவு ஊக்கமும், உற்சாகமும் கொடுத்து வருவதால்தான் திருச்சி மாவட்டத்தில் சமுதாய அமைப்புகள் வலுவுள்ளதாக அமைந்துள்ளன.

சரியாக 11 ஆண்டுகளுக்கு முன்னர் 29—7—1981-ல் திருச்சி மாவட்டம், விளந்தையில், மாநில மகாநாடு போன்று, பெருமளவில், மாவட்ட மகாநாட்டினை நடத்தி சமுதாய உணர்விற்கு புத்துயிர் அளித்தோம். அதன்பின்னர்தான், சேலம், காஞ்சிபுரம் மற்றும் சென்னை மகாநாடுகள் நடத்திடவும், பேரணிகள் நடத்தியும் உண்ணாவிரதப் போராட்டம் நடத்தியும் நமது உணர்வை வெளிப்படுத்துகின்ற, தைரியமும் நமது உறவினர்களிடையே ஏற்பட்டன. அதுபோன்று "முதலாவது மாநில செங்குந்தர் இளைஞர் மகாநாட்டினையும்"

திருச்சி மாவட்டத்தில் நடத்த அனுமதிக்கும்படி தலைவர் அவர்களை கேட்டுக் கொள்கிறேன்.

இளைஞர்களிடையே உள்ள செயல்திறனை பயன்படுத்தி

1) மகிமை பணம் வசூல்.

2) மாணவர்களின் கல்வித்தரம் உயர்த்த பயிற்சி வகுப்புகள்.

ஆகிய இரு அம்ச திட்டத்தை அமல்படுத்த, நாம் அனைவரும் தீவிரமாக செயலாற்ற வேண்டும்.

திருச்சி மாவட்ட இளைஞரணி தம்பிகளின் உற்சாகம் மற்றும் செயங்கொண்டம் பகுதி மிகக்கடுமையான வறட்சி பகுதியாக இருந்தும் மிகவும் தீவிரமாக சோர்வின்றி சொந்த வேலைகளை ஒதுக்கி வைத்துவிட்டு ரூ. 20 இலட்சம் வசூல்செய்து மாற்றாரும் வியந்து பாராட்டும் வண்ணம் சீரிய முறையில் திருமண மண்டபம் அமைக்கின்ற குலப்பெருமக்களின் செயல்திறன் ஆகியவற்றிற்கு கிடைத்த பாராட்டாக – கௌரவமாக நினைத்து இவ்இளைஞர் மகாநாட்டினை பெருமையோடும் பெரும் மகிழ்வோடும் திறந்து வைக்கின்றேன்.

நன்றி, வணக்கம்.


With best compliments from:

இல்லத்திற்கும் அன்பளிப்பிற்கும் திருமணத் தேவைக்கும்
தேவையான எல்லாவிதமான எவர்சில்வர் சாமான்களுக்கும்
இன்றே விஜயம் செய்யுங்கள் !

போன் : 816

ராஜலெட்சுமி எவர்சில்வர் மார்ட்

6, லாரன்ஸ் ரோடு, கடலூர் - 607 002.

(தென்னாற்காடு மாவட்டம்)

எங்களிடம் தரமான பொன், வெள்ளி நகைகள் கிடைக்கும்.

M. A. சீல் உத்திரவாதமுள்ளது.



RAJALAKSHMI JEWELLERY

22 Ct, GOLD SILVER JEWELS MERCHANTS

34, LAWRENCE ROAD, TIRUPAPULIYUR, CUDDALORE - 607 002

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க 16-ஆவது மாநில மாநாடு
கும்பகோணத்தில் நடைபெற்றபோது

இளைஞர் அணி மாநாட்டுக்கு தலைமை வகித்த
தென்னாற்காடு (தெற்கு) மாவட்ட சங்க பொதுச்செயலர், பெண்ணாடம்

திரு. ஆ. இராஜவேலு அவர்களின்



# தலைமை உரை





தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைவர் கைத்தறிக் காவலர் நெசவாளர் நேசன் உத்தியோக ரத்தினா, ஐம்பது லட்சம் செங்குந்தர்களின், வழிகாட்டியாக விளங்கும் திரு. ஜெ. சுத்தானந்தம் அவர்களே! தன்னடக்கமும், செயல்திறனும் கொண்ட பொதுச் செயலாளர் டாக்டர் தி. ரா. செல்வராசன் அவர்களே! தஞ்சை மாவட்ட செங்குந்தர் கல்விச் சங்க தலைவரும் மாநில சங்க புரவலரும் இம்மாநாட்டை சீரோடும், சிறப்போடும் நடத்திக் கொண்டிருக்கும் தலைவர் திரு. R.N. சந்தானராஜகோபாலன் அவர்களே! தஞ்சை மாவட்ட சங்கப் பொதுச் செயலாளரும் மாநில சங்க துணைத் தலைவரும், மாநில சங்கத்துடன் சுமார் ஐம்பது ஆண்டு காலம் தொடர்பு உடையவரும் இம் மாநாட்டை சிறப்பாக நடத்திக் கொண்டு இருக்கும் செயல்வீரர் திரு. ச.கு.பா. பழநிவேலு அவர்களே! இந்த மாநாடு சிறப்பாக நடைபெறுவதற்கு உறுதுணையாக இருந்த தஞ்சை மாவட்ட சங்க நிர்வாகிகளே! தமிழகம் முழுவதிலிருந்தும், பிற மாநிலங்களிலிருந்தும் வருகை புரிந்துள்ள மாநில மாவட்டச் சங்க நிர்வாகிகளே! தாய் மார்களே, எனது உயிரின் மேலான செங்குந்தர் குல இளம் சிங்கங்களே! நமது மாநாட்டிற்கு வருகை தந்து சிறப்பித்த கைத்தறி துறை அமைச்சர் அவர்களே! சட்டமன்ற உறுப்பினர்களே! இம் மாநாட்டிற்கு முன்னிலை வகிக்கும் நண்பர்களே! வரவேற்பு நல்கிய நண்பர் அவர்களே! இம்மாநாட்டு திறப்பாளர் திருச்சி மாவட்ட சங்கப் பொதுச் செயலாளர் டாக்டர் மு. கருணாநிதி அவர்களே!

தென்னாற்காடு மாவட்டம் (தெற்கு) செங்குந்த இளைஞர் அணி தலைவர் அமரர் திரு. கே. சுப்ரமணியன் திருவுருவப் படத்தை திறந்து வைத்து உரையாற்ற இருக்கின்ற நண்பர் து. பழனியாண்டி அவர்களே! சிறப்புரையாற்ற வருகை தந்திருக்கின்ற பெரியோர்களே! வாழ்த்துரை வழங்க வந்துள்ள இளைஞர் தளபதிகளே! மாநிலம் தழுவிய இளைஞர் அணி நிர்வாகிகளே! இம் மாநாட்டிற்கு தலைமை ஏற்கும் வாய்ப்பினை நல்கிய மாநில சங்கத் தலைவர், பொதுச் செயலாளர் அவர்களே! தஞ்சை மாவட்ட சங்க நிர்வாகிகளே! உங்கள் அனைவருக்கும் எனது பணிவான வணக்கத்தினையும், நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன். இதற்கு முன்னால் நடைபெற்று முடிந்துள்ள மாநாடுகளில் சமுதாயத்திற்கு பெரும் பணி ஆற்றிய பெரியோர்கள் பற்றியும், சமுதாய நலன்கள்

பற்றியும் கைத்தறித் தொழில் எந்த அளவுக்கு நசிந்து இருக்கிறது என்பதனையும் அரசு
கைத்தறி துறைக்கு செய்ய வேண்டிய சலுகைகள் பற்றியும் விசைத்தறிக்கு அரசு செய்ய
வேண்டிய சலுகைகள் பற்றியும் ஆராயப்பட்டன. நமது சமுதாயத்தில் மகளிர் ஆற்ற
வேண்டிய பணிகள் பற்றியும் மகளிர்க்கு கல்வி அவசியம் என்பது பற்றியும் ஆராய்ந்
திருக்கிறோம். நமது சமுதாயம் எதிர் காலத்தில் பொலிவோடு விளங்க வேண்டுமென்றால்
அது இளைஞர்களின் கையில் தான் உள்ளது. பிற சமூகத்தவர்களைப் போல் நமது
சமுதாயத்தைச் சேர்ந்த இளைஞர்களுக்கும் சமுதாய உணர்வு மிக அதிகமாக தேவை.
பிற சமுகத்தவர்களைப் போல் நமக்கு அரசியல் பலமில்லை. அரசியல் பலமில்லாமல் நம்
மக்கள் வாழ்வில் உயர்வது மிக கடினம். நமது இளைஞர்கள் தங்களுக்கு விருப்பமான
அரசியல் கட்சிகளில் பங்கு கொண்டு கட்சியின் உயர் பதவிக்கும் நாடாளுமன்ற சட்டமன்ற
உறுப்பினர்களாக வருவதற்கும் முயற்சி செய்ய வேண்டும். நமது இனத்தொழிலான நெசவுத்
தொழில் நலிவடைந்து வருகிறது. அதனை நவீனபடுத்தவும் விசைத்தறிகள் அமைக்கவும்
முயல வேண்டும். இளைஞர்கள் கைத்தறியை விடுத்து வேறு தொழிலுக்கும் அரசு
வேலைக்கும் போக முயற்சி செய்ய வேண்டும். கைத்தறி துறையிலும், கூட்டுறவுத்
துறையிலும் செங்குந்த இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பில் முன்னுரிமை வழங்கவும்
கைத்தறி நெசவாளர்களுக்கு இலவச மின்சாரம், இலவச வீட்டு மனைப்பட்டா, விசைத்
தறிக்குக் குறைந்த கட்டணத்தில் மின்சாரம் வழங்குதல், குஜராத் மாநிலத்தில் செய்திருப்பது
போல செங்குந்தர் சமுதாயத்தை மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் சேர்க்கவும்
தமிழக அரசை வற்புறுத்த வேண்டும். மேற்கண்ட கோரிக்கைகள் நிறைவேற எந்த
தியாகமும் செய்ய இளைஞர்கள் தயாராக இருக்க வேண்டும். நமது இன பெண்களுக்கு
கல்வியில் அதிக முக்கியத்துவம் கொடுத்து அவர்களும் அரசு வேலைகளுக்கும், அரசியலுக்கும்
வர முயற்சி செய்ய வேண்டும். இப்பொழுதுள்ள விலைவாசி ஏற்றத்தில் ஆண், பெண்
இருபாலரும் வேலை செய்ய வேண்டியது இன்றியமையாதது ஆகிறது. நமது இன
இளைஞர்கள் திருமணத்தின்போது அதிக பொன் பொருளை எதிர்பாராமல் குடும்பத்திற்கு
ஏற்ற நல்ல பெண்களையே தேர்ந்து எடுத்து திருமணம் செய்து கொள்ள வேண்டும்.
சிக்கன திருமணத்தையும் கூட்டு திருமணத்தையும் ஊக்குவிக்க வேண்டும்.

தென்னாற்காடு மாவட்டம் (தெற்கு) இளைஞர் அணி தலைவர் அமரர் கே. சுப்பிரமணியன் அவர்கள். நமது சங்க பணிக்காக பயணம் செய்யும் போது பஸ் விபத்தில் காலமானார்கள். இதுபோல் சங்க பணிக்காக செல்லும் போது விபத்தில் உயிர் இழந்தவர் இவர் ஒருவரே என்று கருதுகிறேன். இந் நேரத்தில் அவருடைய சமுதாயப் பற்றை பெரிதும் போற்றுகிறேன். அவரது குடும்பத்திற்கு இரங்கல் தெரிவித்து அவரது ஆத்மா சாந்தி அடைய வேண்டுகிறேன். தொடர்ந்து நம் இளைஞர்களின் எழுச்சி சொற்பொழிவுக்கு பிறகு முடிவுரையை சமர்ப்பிக்கிறேன் என கூறி முடிக்கின்றேன்.

நன்றி ! வணக்கம் !

வாழ்க செங்குந்தம் ! வெல்க செங்குந்தம் !!



வாழ்க செங்குந்தர் !



வளர்க அவர்தம் புகழ்!

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் 16-ஆவது மாநில மகளிர் மாநாடு 28—7—91 ஞாயிறு அன்று கும்பகோணத்தில் நடைபெற்றபோது

தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்க புரவலர்

ஆக்கூர் திருமதி **முத்துலெட்சுமி இராமலிங்கம்** அவர்கள்

ஆற்றிய

# வரவேற்புரை.

—⊙—

பெருமதிப்பிற்குரிய மாநிலத் தலைவர் திருமிகு. ஜெ. சுத்தானந்தன் அவர்களே! மாதர் மாநாட்டின் தலைவி டாக்டர் சரோஜினி சேதுராமன் அவர்களே! மற்றும் செங்குந்தர் இன நன்மணிகளே! உங்கள் அனைவரையும் வணங்கி மகிழ்கின்றேன். இம்மகளிர் மாநாட்டில் உங்களுக்கு வரவேற்பு கூறும் வாய்ப்புக் கிடைத்ததற்குப் பெருமகிழ்ச்சி கொள்கின்றேன்.

எல்லாம் வல்ல இறைவன், அம்மையும் அப்பனுமாகக் காட்சி தருகின்றான் 'தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வம்' என்றார் வடலூர் வள்ளல். உலகிலுள்ள மக்களில் சரிபாதியாகப் பெண்கள் உள்ளார்கள் என்பது உண்மை. இந்த மகளிர் தாம் பெற்றிருந்த பெருமைகள் அளவில்லாதவை. நம்நாட்டில் மங்கம்மாள், ஜான்ஸிராணி போன்று வரலாற்றில் இடம் பிடித்தவர்கள் உண்டு. காந்தியடிகளின் உற்ற துணையாக விளங்கி நம் குலப் பெருமைக்கு எடுத்துக் காட்டாக விளங்கிய தில்லையாடி வள்ளியம்மை குறிப்பிடத்தக்கவர்.

அன்னையாகவும், அறம் செய்யும் துணையாகவும் விளங்குகின்ற வாழ்க்கைத் துணை நலம் என வள்ளுவரால் போற்றப்பட்ட பெண் மக்கள், இன்றைய நிலையில் குறிப்பாக நம் செங்குந்தர் இனத்தில் போதிய கல்வியறிவு இல்லாதவர்களாகவும், நெசவுத் தொழிலில் துணை நிற்பவர்களாகவும் விளங்குவதுடன் முழு வயிறு காணாதவர்களாகவும் விளங்கு கின்றார்கள். வறுமை ஒரு பக்கம், அறியாமை ஒருபக்கம், அவர்களை வாட்டி வதைத்திட 'வெந்ததைத் தின்று விதிவந்தால் சாவோம்! எனப் பெருங்கலக்கத்துடன் நாள்களைத் தள்ளிக் கொண்டிருப்பதைத்தான் எங்கும் காண முடிகிறது.

பாரதி கண்ட பெண் சமுதாயம், நம் குலத்திற்குப் பெருமை சேர்த்த பாரதிதாசன் விரும்பிய பெண்களின் உயர்வு நம்மிடையே இன்றும் சரிவரக் காணப்படவில்லை.

பெண்ணைச் சீதனத்துடன் அனுப்புதல், இன்று இல்லாத இனம் இல்லை என்று கூறும் அளவிற்கு விசுவரூபம் எடுத்து மக்களை அலைக்கழிக்கிறது. எனவே அன்பில்லாத, பொருத்தமில்லாத, விருப்பமில்லாத திருமணங்களே எங்கும் பெரும்பாலும் நிகழ்கின்றன. இருப்பவர்கள் கொடுக்கலாம், இல்லாதவர்கள் என்ன செய்வார்கள்? பெண்ணைப் பெற்றவர்கள் பாவஞ் செய்தவர்களா? இந்த இழிவான நிலை தொலைய வேண்டும். எனவே இந்த மகளிர் மாநாட்டிலே நான் விடுக்கும் வேண்டுகோள்கள் இவை:

1. நம்மின மகளிர் குறைந்தது 10-ஆம் வகுப்பு வரையாவது படிக்க வேண்டும்.
2. படிப்பு முடிந்தபிறகு 18 வயதிற்குமேல்தான் திருமணம் செய்ய வேண்டும்.
3. நெருங்கிய உறவுத் திருமணங்களைக் கூடியவரை குறைத்துத் தொலைதூரத்துச் சம்பந்தங்களை வரவேற்க வேண்டும்.
4. வரதட்சணையே கேட்கக் கூடாது.
5. பெண்கள் வேலை வாய்ப்பையும், பட்டப்படிப்பையும், தொழிற்படிப்பையும் விரும்பி ஏற்க வேண்டும். அதற்கு நம் சமுதாயம் ஆதரவும், ஒத்துழைப்பும் நல்க வேண்டும்.
6. குடும்பக் கட்டுப்பாட்டிலும் நாம் மிகுந்த கவனமாயிருத்தல் வேண்டும்.

இப்படிப்பட்ட செங்குந்தர் இனம் விரைவில் நம் மகளிரால் உருவாக்கப்பட வேண்டும் அதற்கு நீங்கள் உறுதுணையாய் விளங்கவேண்டும் எனக்கூறி இம்மாநாட்டிற்கு வருகை தந்துள்ள உங்களை உள்ளம் மகிழ. வருக! வருக! என வரவேற்று என் வரவேற்புரையை நிறைவு செய்கின்றேன்.

நன்றி வணக்கம்.


16-ஆவது மாநில மாநாடு சிறப்புற
வாழ்த்துகிறோம்!

ஸ்ரீ வெங்கிடாஜலபதி துணை

**தனலெட்சுமி ஏஜென்ஸீஸ்,**

மெத்தை, தலையணை உற்பத்தியாளர்,
பழைய தலையணை, மெத்தை முதலியவை
புதுப்பித்துத் தரப்படும்.
புதுக்குப்பம் ரவுண்டானா, வட்டம் - 27
நெய்வேலி - 3.



**DHANALAKSHMI AGENCIES**
Manufacturer of Quality Beds & Pillows
(Old Beds & Pillows Modified)
Pudhukkuppam Rountana, Block - 27,
NEYVELI - 3.

16-ஆவது மாநில மாநாடு சிறக்க
வாழ்த்துகிறோம்!



**செங்குந்த மகாஜன சங்கம்**
**செங்குந்தர் இளைஞர் அணி**
பெண்ணாடம் - 606 105,
தென்னாற்காடு மாவட்டம்.

மானத்தைக் காக்கும் தொழில் நம்தொழில். நம்மில் எத்தனை பேர் பட்டாடைகளைப் பார்த்திருக்கிறோம்? உழவனின் வளமையும், நெசவாளியின் வளமையும் உயரவில்லையே! வறுமையல்லவா உயர்ந்து நிற்கிறது.

**புதியதோர் உலகம் செய்யப் புறப்படுவோம்:**

20-ம் நூற்றாண்டின் எல்லையில் 21-ஆம் நூற்றாண்டிற்கு வரவேற்பு கூறும்போது கூட நம்குலப் பெண்களில் ஒரு ஐ.ஏ.எஸ்., மாவட்டத்திற்குச் சில மருத்துவர்கள், பொறியாளர்கள், அமைச்சர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள் உருவாகவில்லையென்றால் நாம் இன்னும் உறங்கிக் கொண்டிருக்கிறோம் என்பதுதான் பொருள்.

வறுமையில் முதல் இடம், உழைப்பில் இரண்டாம் இடம், வாழ்க்கை வசதியில், கல்வியில் வேலை வாய்ப்பில் மிக மிகப் பின் தங்கிய இடம்.

எங்கோ விரல் விட்டு எண்ணக்கூடிய நம் இனத்தைச் சேர்ந்த ஒரு சிலரின் உயர்ந்த நிலையைக் கண்டு இனத்தையே மதிப்பிடுகிறது அரசாங்கம்.

'ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்பது அடுப்பங்கரைக்குப் பொருந்தும். மக்களை அளவிடப் பொருந்துமா? சிலப்பதிகாரம் பாராட்டும் பொன் கொழித்த காவிரியே இன்று தஞ்சையை மறந்து விடுமோ என்ற அச்சம் தமிழகத்தை வருத்தும்போது எதனையும் அரசு நடு நிலையில் சீர் தூக்கிச் செய்ய வேண்டும்.

**'யாதும் ஊரே! யாவரும் கேளிர்!'**

என்றார் கணியன் பூங்குன்றனார். ஒரே தொழிலைச் செய்கின்ற நம்மிடையே இன்னும் ஒன்றுபட்ட கலாச்சாரம் தோன்றவில்லை. கிழக்கென்றும் மேற்கென்றும் வடக்கென்றும் தெற்கென்றும் திசை கூறிப் பிரிந்து வாழ்கின்ற நிலை.

ஒரு காலத்தில் போக்கு வரவுச்சாதனங்கள் சரியாக இல்லை. அக்காலத்திற்குத் தகுந்தது போலச் சம்பந்தங்களைக் குறுகிய வட்டத்துக்குள் அமைத்துக் கொண்டார்கள். அறிவியலும் நெருங்கிய உறவில் திருமணம் செய்து கொள்வதைக் கண்டிக்கிறது. ஒரு சில பகுதிகளில் நம்மிடையே பண்பட்ட குடும்பங்கள், வாழும் நெறியில் முன்னேறிய குடிகள் காணப்படுகின்றன, சில பகுதிகளில் நாகரிகக் குறைவு, பண்பாட்டுக் குறைவு ஆகியன காணப்படுகின்றன.

எனவே, உறவு வட்டத்தைப் பெரியதாக்கி ஒன்றுபடுவோம். உறவிலே நன்மை மிக உண்டு: கல்வியறிவும் வேலைவாய்ப்பும் உள்ள நம்மவர்களில் சிலர் மட்டும் துணிந்து இந்நிலையை வரவேற்கின்றனர். காலம் சென்ற என் இதய தெய்வம் தஞ்சை மாவட்டத்தின் முன்னாள் தலைவர் ஆக்கூர் அண்ணலார் அவர்கள் இதனை பெரிதும் வற்புறுத்தி வந்தார்கள்.

**வரதட்சிணைக் கொடுமை:**

குலத்தை விளங்கச் செய்ய குடும்பத்தைத் தாங்குவதற்குத் துணையாக வீட்டிற்கு வரும் திருமகளுக்கு இன்றைய தகுதி பொன்னும் பொருளும்தான். அழகோ, அறிவோ, பண்போ, குடும்பத்தின் பெருமையோ கணவன் வீட்டினரால் நினைத்துக்கூடப் பார்க்கப் படுவதில்லை.

ஏனிந்த அவலம். ஆட்டைக்கடித்து, மாட்டைக்கடித்து ஆளையே கடிக்கவந்ததுபோல,? படை வீட்டுவேதியர்கள் எந்தக்காலத்திலோ செய்து கொண்ட திருமண ஒப்பந்தம்

**With best compliments from:**

**TEL : 665172**



## Sri Muthukumarasamy Finance Pvt. Ltd.

**60, Gangadeeswarar Koil street.**
**Purasawalkam, Madras - 600 084**



Hire Purchase loans given on Lorries, Trucks, vans,
and cars at attractive rates of interest

**M. MANICKAM,**
Managing Director.

**M. S. RANGIAH,**
Chairman

*With best compliments from:*

**TEL : 665172**



## Sri Muthukumarasamy Chit Funds Pvt. Ltd.,

60, GANGADEESWARAR KOIL STREET,
PURASAWALKAM, MADRAS - 600 084



Chit groups ranging from Rs. 10,000 to 5,00,000 conducted

**M. MANICKAM,**
Managing Director.

**M. S. RANGIAH,**
Chairman.

# சகோதரிகட்கு ...

— டாக்டர் சரோஜினி சேதுராமன், M.B.B.S., D.G.O. திருவாரூர்.

அன்பிற்கினிய சகோதரிகளே, சகோதரர்களே, எல்லோரையும் வணங்கி மகிழ்கிறேன். நம் இனத்தவர் யாவரும் இணைந்து மாநாடு நடத்துவது நமக்கு உற்சாகத்தையும் உணர்வையும் அளிக்கிறது. மகளிர் அணியின் சார்பில் பங்குபெறுவதை எனக்குக் கிடைத்த பெரும் பேறாக எண்ணி அகமகிழ்கிறேன். செங்குந்தர் குலத்தில் பிறந்ததை எண்ணி உவகை அடைகிறேன். நான் மட்டுமல்ல; நாம் ஒவ்வொருவரும் பூரிப்படைகிறோம். செங்குந்தர் இனம் - தொழில்களில் சிறந்ததாகிய நெசவுத் தொழிலைத் தம் குலத் தொழிலாகக் கொண்டு விளங்குகிறது. 'ஆடையில்லா மனிதன் அரை மனிதன்' என்பது சான்றோர் வாக்கு. ஆடை - மனிதனை முழுமையாக்குகிறது, ஆடை - மனிதனின் மானங் காக்கிறது, ஆடை - மனிதனின் கௌரவத்தை உயர்த்துகிறது. இந்த பெருமைக்குரிய ஆடையை உருவாக்கி வழங்கிவரும் இனம், நம் செங்குந்தர் குலம். இயல்பாகவே ஆடை நெய்வோர் நுணுக்கமான அறிவு நலம் வாய்க்கப் பெற்றிருப்பார்கள், நுண்ணறிவு வாய்க்கப் பெற்ற ஒட்டக்கூத்தர், பாவேந்தர் பாரதிதாசன், வாரியார் சுவாமிகள் போன்ற சான்றோர் பலம் நம்மிடம் உண்டு. இதை எண்ணி நாம் உண்மையிலேயே பெருமைப்படுகிறோம். நெசவுத் தொழிலில் மகளிர் பங்கு கணிசமானது. பாவும் ஊடையும் இணைந்து துணியாவது போலவே ஆடவர் பெண்டிர் இருவரின் உழைப்பாலும் நெசவுத்தொழில் நடைபெறுகிறது. இந்த மகளிரின் நிலை நம் சமுதாயத்தில் எவ்வாறு உள்ளது? இதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டிய நேரம் இது. பிற சமூகத்தினரின் பெண்கள் முன்னேறியிருக்கிற அளவுக்கு நம் சமூகத்தில் இன்னும் மகளிர் முன்னேற்றம் ஏற்படவில்லை என்பது என் கருத்து. இயல்பாகவே பெண்கள் கூர்த்த மதி படைத்தவர்கள். கல்வித்துறையில் பெண்களே அதிக மதிப்பெண் பெற்று வருவதைக் கொண்டு இதை உணரலாம். எனவே நம் பெண்களுக்குக் கல்வியறிவை அளிக்க நாம் தயங்கக்கூடாது. இன்று பெண்களுக்கு எல்லா வகையிலும் முன்னுரிமை வழங்கப்படுகிறது. நாம் அந்த உரிமைகளைப் பயன்படுத்தி நம் பெண்களை நன்றாக படிக்கவைப்பதும் சிறந்த பணிகளில் அமர்த்துவதும் நம் கடமைகளாகும். எனவே நம் சமூகத்தினர், பெண்கல்வி பற்றி சிந்தித்து நல்ல முடிவு எடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

ஒற்றுமையோடு அத்தனை நூலும்
ஒழுங்கா வந்தால் வளரும் - அதில்
ஒரு நூல் அறுந்தால் குளறும் - இதை
ஒட்டும் ஏழைக் கூட்டுறவாலே
உலகில் தொழில்வளம் உயரும் - இந்த
உலகில் தொழில் வளம் உயரும்

என்று பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் கூறினார். அதுபோல் நாம் அனைவரும் ஒற்றுமையாய் இருந்தால் நம் சமூகம் உயரும். இதில் ஒருவர் குளறினாலும் நம் நிலை தாழும். நாம் ஒற்றுமையாக இருப்போம். நம்மை நாம் வளர்த்துக் கொள்வோம். உலகில் நெசவுத் தொழிலால் நம் இந்தியாவை உயர்த்துவோம்.

—o—

*With best compliments from:*

# NILGIRI'S

1905



DAIRYMEN, BAKERS, CONFECTIONERS, HOTELIERS, AND GENERAL MERCHANTS.



## THE NILGIRI DAIRY FARM LTD.,

BANGALORE ★ ERODE ★ MADRAS



சென்னை. திரு. M.S. ரெங்கையா செங்குந்தர் B.A., பொருளாளர்

தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம்

புரவலர், தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்

## ரூ.500 நன்கொடை அளித்த அன்பர்கள்:-


மணக்குடி. அமரர்
திரு. N.S. சீனிவாச செங்குந்தர்


கொக்காலடி. திரு.
K. வெங்கடாசல செங்குந்தர்


செங்குந்தபுரம். திரு.
A.N. கலியபெருமாள் செங்குந்தர்


மஞ்சக்கொல்லை. திருமதி.
T. திருநாகவல்லி அம்மாள்


கூறைநாடு. அமரர்
திரு. R. ஆறுமுகம் B.Sc., B.T.


உடையார்பாளையம்.
திரு. M.S. பழனியாண்டி செங்குந்தர்
- திருச்சி மாவட்டத் தலைவர்

# தென்னிந்திய செங்குந்த மகாசன சங்க 16-ஆவது மாநில மாநாடு

### கும்பகோணம் – ஜூலை 27, 28 – 1991



## சமூக மாநாடு — தீர்மானங்கள்

**புதிய அரசுகளுக்குப் பாராட்டு:**

1. அண்மையில் நடந்து முடிந்த பொதுத் தேர்தலில் பாரதத்திலும், தமிழகத்திலும் புதிய அரசுகள் மலர்ந்துள்ளன. மக்கள் ஒரு புதிய நம்பிக்கையுடன் இந்த அரசுகளை நோக்குகிறார்கள். இந்த நம்பிக்கைகள் வீணாகா வண்ணம் முனைப்புடன் செயல்பட்டு, மக்கள் வாழ்வில் வளம் பெறப் புதிய அரசுகள் செயல்படும் என்ற நம்பிக்கை உணர்வுடன் இந்த மாநாடு பாராட்டி வரவேற்று வாழ்த்துகிறது.

**காவிரி — நடுவர் மன்றத் தீர்ப்பை அமுல்படுத்த:**

2. பல்லாயிரம் ஆண்டுகளாக - வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரி - சோழ நாடு சோறுடைத்து - என்ற தொன்மொழியைக் கண்ட காவிரி நாடு வறண்ட பாலைவனமாகக் காட்சியளிக்கிறது. காவிரி நடுவர் மன்ற இடைக்காலத் தீர்ப்புப் பெறப்பட்டு அதனை நடைமுறைப்படுத்த மறுக்கும் கர்நாடக அரசை இம்மாநாடு வன்மையாகக் கண்டிக்கிறது. தீர்ப்பினை மதித்து உடனடியாக தண்ணீர் விடுமாறு இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது. காவிரிப் பிரச்சினையில் உறுதியான நிலை எடுத்து, எந்தவித தியாகத்திற்கும் தம்மை ஆட்படுத்திக் கொள்ளுகின்ற தமிழக முதல்வர் மாண்புமிகு செல்வி ஜெயலலிதா அவர்களை இம்மாநாடு மனமுவந்து பாராட்டி வாழ்த்துகிறது. தமிழக பாராளுமன்ற உறுப்பினர்களும், மத்திய தொழிலாளர் நல இணை அமைச்சர் மாண்புமிகு வாழப்பாடி இராமமூர்த்தி அவர்களும், மற்ற மத்திய அமைச்சர்களும், தியாக உணர்வுடன் பதவியைத் துறக்க அறிவித்ததை இம்மாநாடு மனமுவந்து பாராட்டுகிறது.

**இந்திய ஆறுகளைத் தேசியமயமாக்கல்:**

3. வளம் பெற்ற நாடாக மாற இந்திய நாட்டில் உள்ள ஆறுகளையெல்லாம் தேசியமயமாக்கப்பட வேண்டுமென மத்திய அரசை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

**செங்குந்தர்களை மிகவும் பிற்பட்டோர் பட்டியலில் சேர்க்க:**

4. நெசவுத் தொழிலையே நம்பி வறுமைக் கோட்டிற்குக் கீழ் வாழும் செங்குந்தர்களுக்குக் கல்வி, வேலை வாய்ப்பில் உரிய பங்கு கிடைத்திட செங்குந்தர்களை மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் சேர்க்குமாறு தமிழக அரசை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

**புதுவையில் பிற்படுத்தப்பட்டோர் நல வாரியம் அமைக்க:**

5. மத்திய அரசு அறிவித்துள்ள பிற்படுத்தப்பட்டோர் நல வாரியத்தைப் புதுவை அரசு உடனே அமைக்க வேண்டும் என்று இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

**குலச் சொத்துக்களைப் பாதுகாக்க:**

6. நம் முன்னோர்கள் நம் குல நலனுக்காக தேடித் தந்த கோடிக்கணக்கான சொத்துக்கள் நாடு முழுவதும் இருக்கின்றன. ஆனால் அதை, யார் யாரோ, எப்படி எப்படியோ அனுபவித்துக் கொண்டு நம்மவர்களுக்கு எந்த வகையிலும் பயன்படாத நிலையில் இருந்து வருகிறது. இந்த நிலைகள் மாறி, ஆங்காங்குள்ள நம் குலச் சொத்துக்கள் நம்மவர்களின் முன்னேற்றத்திற்கு பயன்படுகின்ற வகையில் அந்தச் சொத்துக்களைப் பாதுகாக்க அந்தந்த மாவட்டச் சங்கங்கள் உரிய நடவடிக்கை எடுக்க இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

**பாவடிகளைச் செங்குந்தர்களுக்கு பட்டா செய்து கொடுக்க:**

7. பன்னெடுங்காலமாக நம்மவர்கள் நம் குலத் தொழிலுக்குப் பயன்படுத்தி வந்த பாவடி நிலங்களை மற்றவர்கள் ஆக்கிரமிப்பு செய்து, தொழிலுக்கு இடையூறு செய்து வருவதைத் தவிர்க்க, அந்த நிலங்களை செங்குந்தர்களுக்கே பட்டா செய்து கொடுத்து நெசவுத் தொழிலையே நம்பி வாழும் செங்குந்தர்களின் துயர் துடைத்திட வேண்டுமென தமிழக அரசை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

**மண்டல் பரிந்துரையை அமலபடுத்த:**

8. மத்திய, மாநில அரசுகள் ஏழை எளிய பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு புது வாழ்வளிக்கும் மண்டல் கமிஷன் பரிந்துரைகளை முழுமையாகத் தாமதமின்றி அமலாக்கும்படி இம்மாநாடு வேண்டிக் கேட்டுக் கொள்கிறது.

**கூட்டுத் திருமணங்கள் நடத்த:**

9. வறுமைக் கோட்டிற்குக் கீழ் வாழும் நம்மவர்களுக்கு திருமணச் செலவு என்பது பெரும் சுமையாக இருக்கிறது. அப்படிப்பட்டவர்களுக்கு உதவும் வகையில் ஆங்காங்குள்ள சமுதாய அமைப்புகள் கூட்டுத் திருமணங்கள் ஏற்பாடு செய்து நடத்திட வேண்டுமென இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

**சிக்கனத் திருமணம்:**

10. நம்மவர்கள் திருமணம் ஆடம்பரமான முறையில் நடைபெறுவதைத் தவிர்த்து சிக்கன முறையில் ஒரே நாள் திருமணமாக நடத்திட இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

**குடும்ப நிகழ்ச்சிகளில் சமுதாய வளர்ச்சிக்கு உதவிட:**

11. நம்மவர்கள் வீட்டு திருமணம் மற்றும் சிறப்பு நிகழ்ச்சியின் நினைவாக, மாநில சங்கத்தின் பாவேந்தர் பாரதிதாசன் அறக்கட்டளைக்கு நிதி உதவி செய்து நம் குல இளைஞர்கள் கல்விக் கண் பெற்றிட உதவிட இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

**இளைஞர்களுக்கு வழிகாட்டிட:**

12. நம் சமூக அமைப்புகளும், பெரியவர்களும் நம் குல இளைஞர்களை தொழில் கல்வி கற்க ஊக்குவித்து, வழி காட்டி உதவிட இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

**திருப்பூர் குமரன், தில்லையாடி வள்ளியம்மை பெயரிட:**

13. மறைந்த தமிழக முதல்வர் மாண்புமிகு எம்.ஜி.ஆர். அவர்கள் தஞ்சை மாவட்டத்தை மூன்றாகப் பிரிக்கின்ற பொழுது ஒரு மாவட்டத்திற்கு தில்லையாடி வள்ளியம்மை மாவட்டம் என பெயர் சூட்டுவதாக உறுதியளித்ததை நினைவு கூர்ந்து தமிழகத்தில் புதிய மாவட்டங்கள் இனி அமைக்கும் போது, தியாக தீபங்களான தில்லையாடி வள்ளியம்மை, திருப்பூர் குமரன் பெயரைச் சூட்டவும், அதே போன்று போக்குவரத்துக் கழகங்களைப் பிரிக்கும் பொழுதும் இவ்விரு தியாகிகளுக்கும் புகழ் சேர்க்கும் வகையில் அவர்களுடைய பெயரைச் சூட்டுமாறும் பெண் குலத்தின் பிரதிநிதியாக விளங்கும் இன்றைய தமிழக முதல்வரை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

# நெசவாளர் மாநாடு — தீர்மானங்கள்

**நெசவாளர்களுக்கு நூல் கிடைத்திட:**

1. கடுமையான நூல் விலை ஏற்றத்தினால் பாதிக்கப்பட்டுள்ள நெசவாளர்களின் துயர் துடைத்திட நூல் விலையைக் கட்டுப்படுத்த விரைந்து நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டுமென தமிழக அரசை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.
2. பருத்தி நூலை அத்தியாவசியப் பொருட்கள் சட்டத்தின் கீழ் கொண்டு வந்து நெசவாளர்களுக்கு சீரான நூல் விநியோகத்திற்கு வழிவகுக்க வேண்டும் என மத்திய மாநில அரசுகளை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.
3. கைத்தறி நெசவாளர்களுக்கு தட்டுப்பாடின்றி நூல் கிடைத்திட நூற்பாலைகள் 50% சிட்டம் நூல் கட்டாயம் உற்பத்தி செய்திட வேண்டும் என்பதனைச் சட்டமாக்கிட வேண்டும் என மத்திய அரசை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.
4. நூல் விலையைக் கட்டுப்படுத்தவும், நெசவாளர்களுக்கு தொடர்ந்து வேலை கிடைத்திடவும், பஞ்சு ஏற்றுமதியை முழுமையாகத் தடை செய்யும்படியும் மோட்டாரக நூல் ஏற்றுமதியைத் தடை செய்யும்படியும் மத்திய அரசை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.
5. கைத்தறி நெசவாளர்களுக்கு உதவிடும் வகையில் சிட்டம் நூலுக்கு முழு விற்பனை வரி விலக்களிக்க வேண்டுமென தமிழக அரசை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

**வீட்டு வசதி கோரிக்கை:**

6. நெசவாளர்களுக்கு வீடும், தொழிற் கூடமும் ஒன்றே. அவர்களுக்கு தங்கள் வாழ்வில் சொந்த வீடு என்பது பகல் கனவாகவே இருக்கிறது. இன்றைய விலைவாசியில் வீட்டு மனைகள் வாங்குவதோ, வீடுகள் கட்டுவது என்பதோ அவர்களால் எண்ணிக் கூடப் பார்க்க முடியாத ஒன்று. எனவே அரசாங்கமே நிலங்களை ஆர்ஜிதம் செய்து நெசவாளர்களுக்கு இலவச வீட்டு மனைப்பட்டாவும் இலவச வீடு கட்டியும் வழங்க வேண்டுமென தமிழக அரசை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

**முதிய நெசவாளர்களுக்கு பென்ஷன்**

7. 58 வயதான கைத்தறி நெசவாளர்களுக்குக் கேரளாவில் வழங்கப்படுவதைப் போல் மாதம் ரூ. 200/- வீதம் ஓய்வூதியம் வழங்கப்பட வேண்டுமென தமிழக அரசை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

**கைத்தறி நெசவாளர்களுக்கு இலவச மின்சாரம்:**

8. ஒளியிழந்து இருக்கும் கைத்தறி நெசவாளர்களின் வாழ்வில் ஒளியேற்றிட இலவச மின்சாரம் வழங்க வேண்டுமென தமிழக அரசை இம்மாநாடு வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறது.

**விசைத்தறிக்கு மின்சாரம் சலுகை கட்டணம் வழங்கிட:**

9. தமிழகத்தில் விசைத் தறியாளர்களுக்கு யூனிட் ஒன்றுக்கு ரூ. 1-40 மின் கட்டணம் வசூலிக்கப்படுகிறது. ஆனால் ஆந்திர மாநிலத்தில் யூனிட் ஒன்றுக்கு 50 பைசாதான் வசூலிக்கப்படுகிறது. எனவே தமிழக விசைத்தறியாளர்களுக்கும் சலுகை மின் கட்டணமாக 0-55 பைசா மட்டுமே வசூலிக்க உத்தரவிடுமாறு தமிழக அரசை கேட்டுக் கொள்கிறது.

**நெசவாளர்களுக்கு ஷெடியூல்ட் மக்களுக்குரிய சலுகைகள் வழங்கிட:**

10. குஜராத் மாநிலத்தில் நெசவாளர்களுக்கு தாழ்த்தப்பட்ட மக்களுக்கான சலுகைகள் அனைத்தும் வழங்கப்படுகின்றன. அதே போன்று தமிழகத்து நெசவாளர்களுக்கும் வழங்கப்பட வேண்டுமென தமிழக அரசை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

**வேலை வாய்ப்பில் முன்னுரிமை:**

11. மாற்று வேலைக்குப் பழக்கப்படாத நெசவாளர் குழந்தைகளுக்கு, கூட்டுறவு நூற்பாலைகள், கோ-ஆப்டெக்ஸ் போன்ற கைத்தறி துறையுடன் தொடர்புடைய நிறுவனங்களில் வேலை வாய்ப்பில் முன்னுரிமை அளிக்க வேண்டுமென தமிழக அரசை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

# இளைஞர் மாநாடு — தீர்மானங்கள்

**தொழில் கல்வி பயில:**

1. கல்வி பயிலுகின்ற இளைஞர்கள் வெறும் ஏட்டுக் கல்வியைப் படிப்பதால் பயன் இல்லை. எனவே, வாழ்வின் தேவைகளை நிறைவு செய்ய உதவும் தொழிலியல் சார்ந்த கல்வியையே பயிலுமாறு இளைஞர்களை இம்மாநாடு கேட்டுக்கொள்கிறது.

**மாற்றுத் தொழில்களை மேற்கொள்ள:**

2. செய்யும் தொழிலெல்லாம் நெய்யும் தொழிலுக்கு நிகரில்லை என்று நம்பி நெய்து நெய்து நெஞ்சொடிந்து போன இளைஞர்கள் இனி வருங்காலத்தில் வாழ்வில் வளமும் நலமும் காண இப்பழந்தொழிலைக் காட்சித் தொழிலாக ஆக்கிவிட்டு, வேறுவேறு வாய்ப்பான தொழில்களை மேற்கொள்ள வேண்டும் என இளைஞர்களை இம்மாநாடு வேண்டிக் கேட்டுக் கொள்கிறது.

**தொழில் முனைவோர் மேம்பாட்டுக்குழு:**

3. அரசு அறிவிக்கின்ற தொழில் சார்ந்த நிதி உதவிக் கழகங்களை நம் குல இளைஞர்கள் அணுகியும், இன்று இம்மாநாட்டில் தலைவர் அறிவிக்கும் 'தொழில் முனைவோர் மேம்பாட்டுக் குழுவினை அணுகியும் புத்தம் புதிய தொழில்களைத் தொடங்கிப் புது வாழ்வு காணுமாறு செங்குந்த இளைஞர்களை இம்மாநாடு அறைகூவி அழைக்கிறது.

**தீயபழக்கங்கள் விட்டொழிக்க:**

4. வாழ்க்கையின் வளர்ச்சிக்கு அடித்தளமாக இருக்கும் இளமைப் பருவத்தின் இனிய ஆற்றல்களை எல்லாம் பாழ்படுத்தும் தீய பழக்க வழக்கங்களை விட்டொழித்துப் புதுவாழ்வு காண உறுதிகொள்ளுமாறு செங்குந்த இளைஞர்களுக்கு இம்மாநாடு அறிவுறுத்துகின்றது.

**வரதட்சணை வாங்க வேண்டாம்:**

5. திருமணத்தின் போது காண வேண்டிய நல்லன்பை மறந்து, அதற்குக் கூலியாக சொத்து நகைகளை வற்புறுத்திக் கேட்டுப் பெற்றுத் தங்கள் வாழ்க்கையையே சூன்யமாக்கிக் கொள்ளும் கொடுமையை இம்மாநாடு கண்டிப்பதுடன், நம்குல இளைஞர்கள் திருமணத்தின்போது வரதட்சணையாக எதனையும் பெறுவதில்லை என்னும் சூளுரையை மேற்கொள்ளுமாறு இம்மாநாடு இளைஞர்களை வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறது.

# மகளிர் மாநாடு — தீர்மானங்கள்

**கட்டாயக் கல்வி:**

1. பெண்கல்வியைப் பெற்ற சமுதாயமே முன்னேற்றம் அடையும். ஆனால், நம் செங்குந்த சமூகமோ பெண்கல்வியைப் பேணாத சமூகமாக உள்ளது. அவ்வப்போது கிடைக்கின்ற ஆதாயங்களுக்காக வேலைக்கு விடுவது என்பது நடைமுறையாகிவிட்டது. இந்த நிலையை உடனடியாக மாற்றியாக வேண்டும். நம் சமுதாயத்தைச் சார்ந்த பெண்களைக் குறைந்தது எட்டாம் வகுப்பு வரையாவது கட்டாயம் படிக்க வைக்க வேண்டும் என வீரசபதம் நாம் எடுப்போம் என்று இம்மாநாடு தீர்மானிக்கிறது.

**பெண்களுக்கு முழுமையும் இலவசக்கல்வி:**

2. மகளிர் உயர் கல்லூரிக் கல்வி, தொழிற்கல்வி, வேலைவாய்ப்புக் கல்வி எதுவாயினும் முழுமையாக அதனைப் பெற்றிடும் வகையில் அனைத்துக் கல்விச் செலவுகளையும் அரசே வழங்கிடப் பெண்களின் பிரதிநிதியாக விளங்கிடும் தமிழக முதல்வர் மாண்புமிகு செல்வி **ஜெயலலிதா** அவர்களை இம்மாநாடு கனிவுடன் வேண்டுகின்றது.

**திருமண உதவியை உயர்த்திட:**

3. தமிழக அரசு திருமணமாகாத ஏழைப்பெண்கள் எட்டாம் வகுப்புவரை படித்திருந்தால் திருமண உதவி நிதியாக ரூ. 5,000 வழங்கி வருவதை ரூ. 10,000 ஆக உயர்த்தி வழங்குமாறு தமிழக அரசை இம்மாநாடு அன்புடன் வேண்டிக் கொள்கிறது.

**மகளிர் அமைப்பு ஏற்படுத்த:**

4. செங்குந்த மகளிர் அமைப்பு இல்லாத ஊர்களில் எல்லாம் உடனடியாக அத்தகைய அமைப்புகளை ஏற்பாடு செய்து தருமாறு தலைமைச் சங்கத்தை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

தென்னிந்திய செங்குந்தர் 16ஆவது மாநில மாநாடு வெற்றி பெற எங்களது நல்வாழ்த்துக்கள் !

தரமான மளிகை சாமான்கள் வாங்க சிறந்த இடம்:



**சேது ஸ்டோர்ஸ்,**
142, திருநள்ளார் ரோடு, காரைக்கால்.

**சேது & கோ**
285, பாரதியார் வீதி, காரைக்கால்.

சிறந்த ஜவுளி ரகங்களுக்கு:

**சேது கார்மென்ட்ஸ், ஜவுளி**
173/4, திருநள்ளார் ரோடு, காரைக்கால்.



**செந்தில் டெக்ஸ்டைல்ஸ்,**
143, திருநள்ளார் ரோடு காரைக்கால்.



மணம், சுவை நிறைந்த காபி ரகங்களுக்கு:

**ஸ்ரீ கண்ணா காபி & கோ,**
111/1, பாரதியார் வீதி, காரைக்கால்.

அனைத்து ஆங்கில மருந்துகளும் வாங்க:

**ஸ்ரீ லெட்சுமி மெடிக்கல்ஸ்**
144, திருநள்ளார் ரோடு, காரைக்கால்.



# வீரன் - நாராயணரின் பெருமை

புலவர் நா. திருநாவுக்கரசு M.A., B.Ed., சீர்காழி.

எல்லாம் வல்ல முருகப்பெருமானின் அருள்வழி நின்ற வீரவாகு மரபில் வந்த நம் முன்னோர்கள் அரசர்களாகவும், அமைச்சர்களாகவும், புலவர்களாகவும், அருந்திறல் மிக்க வீரர்களாகவும் விளங்கினார்கள் என்பதற்குப் பல சான்றுகள் நம்மிடம் உள்ளன.

குலோத்துங்க சோழன் அவையை அலங்கரித்த கவிச்சக்கரவர்த்தி ஒட்டக் கூத்தர் அவர்கள் நாம் பெருமை கொள்ளும் வகையில் நம் குலத்து உதித்த எழுஞாயிறு ஆவார். அவர் தாம் பாடிய ஈட்டி எழுபது என்னும் நூலில் 'வல்லான் மனைவிக்கு மங்கிலியப் பிச்சை இட்டது' என்னும் செய்தியைக் குறிப்பிடுகின்றார்.

திருசேய்ஞலூர் ஞானப்பிரகாச வள்ளலார் அவர்கள் தாம் பாடிய 'வீரநாராயண விசயம்' என்னும் நூலில் அச்செய்தியை விரிவான வரலாறாகப் பாடியுள்ளார்கள். வீரன், நாராயணன் என்னும் இரு செங்குந்தர் குல வீரர்களின் வீர வரலாற்றை இந்நூல் விளக்கு கின்றது.

சைவ சமயக் குரவர் மூவராலும் பாடப்பெற்ற பெருமையுடைய தலம் பழுவூர் (ஆலந்துறை) ஆகும். அவ்வூரை ஆட்சி செய்த சிற்றரசன் செங்குந்தர் மரபில் தோன்றிய கோமதி என்பவன் ஆவான். மகப்பேறின்றித் தவித்த அவன் நீண்ட நாள் தவங்கிடந்து சிவன் அருளால் இவ்வரலாற்று நாயகர்களாகிய வீரன், நாராயணன் இருவரையும் அரும் பெறற் புதல்வர்களாகப் பெற்று மகிழ்ந்தனன். அவ்விருவரும் உரிய வயதில் அரிய கலைகளைக்கற்றும், வில், வாள், குந்தம் போன்ற ஆயுதங்களில் பயிற்சியும், யானைஏற்றம் குதிரையேற்றம் போன்றனவற்றைக் கற்றும் தேர்ந்தனர்; அனைத்து நலங்களும் சிறந்து விளங்கினர். தஞ்சையை ஆண்ட பராந்தக சோழனின் அமைச்சரும் செங்குந்தர் மரபினரு மாகிய வேம்பன் என்பாரின் அறிமுகத்தினால் அரசனின் வேண்டுகோள்படி தக்க சமயத்தில் இருவரும் சேனைத் தலைவர்களாக அரசர்க்கு உதவி செய்ய அவர்முன் உறுதி கூறினர்.

அந்நாளில் சாலவ தேயத்தை ஆண்டு வந்த இரட்டர் குலத்தலைவன் போகன் என்பவனுக்கு விக்கலன் என்னும் வல்லான் மகனாகப் பிறந்தான்; கல்வி கற்றுப் போர்ப் பயிற்சியும் பெற்றான். ஒரு முனிவரின் அருளால் பஞ்சாட்சரத்தைத் தியானித்துச் சிவ பெருமானிடம் அழியாத கவசம், வச்சிரவாள், மந்திர தந்திரங்களைச் செய்யும் ஆற்றல், மாயத்தேர், மாயக்குதிரை போன்றவற்றை வரங்களாகப் பெற்றான். தீய நோக்கத்தோடு கேட்கப் பட்ட வரங்களை எண்ணிய இறைவன் வல்லானை நோக்கி 'இவ்வரங்கள் நடுவில் நழுவும்' என்றனர். வல்லான் சிவபெருமானை வணங்கி, வரங்கள் நடுவில் அகன்றாலும் உயிருக்கு இடர் வராமல் அருள்க! என்றான். பரமன் 'அவ்வண்ணமே ஆகுக' என்றார்.

மாயக்குதிரையில் வான் வழியே வந்த வல்லான் வளம்மிக்க சோழநாட்டில் கடம்பூர் அருகே இருந்த ஆழமும் அகலமும் மிக்க பெரிய ஏரியின் நடுவே எட்டு இரும்புத் தூண்களை

நாட்டி அதன் மீது மிக உயரத்தில் அழகான கோட்டை, மதில், நந்தவனம், தாமரைக் குளங்கள் போன்றவற்றையும் அமைச்சர் முதலாயினோர் தங்குவதற்கு ஏற்ற மாளிகைகளையும் அமைத்தான்.

பின் தன்நாடு சென்று 'அனங்கவல்லி' என்னும் மங்கை நல்லாளைத் திருமணம் செய்து கொண்டு தாய், தந்தை, உற்றார் உறவினருடன் திரும்பவும் கடம்பூர் வந்து தான் அமைத்த அற்புதங்கள் நிறைந்த கோட்டையில் தங்கினான்.

அங்கே தன் தந்தையைக் கொண்டு மகுடம் புனைந்து கொண்டான். கோட்டையின் உச்சியில் பன்றிக் கொடியைப் பறக்கவிட்டான். இறைவனிடம் பெற்ற வரங்களினால் சேர சோழ பாண்டிய நாடுகளிலும் ஏனைய நாடுகளிலும் இரவில் மாயத்தேர் மூலம் சென்று கொலைகள், கொள்ளைகள் போன்றவற்றைச் செய்து ஆணவத்துடன் கொக்கரித்தான். மங்கையர்க்கும் தீங்கு செய்யத் தவறவில்லை. மாயத்தால் இரவோடிரவாக இவன் செய்யும் தீங்குகளைத் தடுக்க முடியாமல் மக்கள் அல்லற்பட்டு அழுது புலம்பினர். அரசர்களுக்கும் வல்லான் ஒரு வலிய அழிக்க முடியாத பகையாகவே விளங்கினான். பல அரசர்கள் வல்லானுக்கு அடிபணிந்து கப்பங் கட்டி வரலாயினர்.

பராந்தக சோழன் கப்பம் கட்ட மறுக்கவே சோழர் படைக்கும், வல்லான் படைக்கும் கடும்போர் நடந்தது. பகல் முழுவதும் போராடி சோழன்படைகள் சலிப்படைந்து ஊர் திரும்பினர். கோபம் கொண்ட அரசனிடம் அமைச்சன் வேம்பன், "வீர, நாராயணர் இருவரிடமும் வல்லானை அழிக்கும் பணியை ஒப்படைப்போம்" என்றனன்.

வீரர் இருவரும் தஞ்சைக்கு வந்தனர். அரசரின் வேண்டுகோளை ஏற்றனர். அன்றிரவும் வல்லான் தஞ்சையில் புகுந்து மக்களை வதைத்துப் பெருங் கொள்ளைகளைச் செய்தான். வீர நாராயணர் இருவரும் வல்லானைத் தேடிக் கண்டுபிடித்து அவனோடு பெரும் போர் புரிந்தனர் வச்சிரவாளும், கவசமும் இறைவன் அருளால் வல்லான் பெற்றிருந்தமையால் அவனைக் கொல்ல முடியவில்லை. அயர்வடைந்து அவன் தப்ப முயன்றபோது நாராயணன் வல்லானின் குடுமியைப் பிடித்து ஆகாயத்தில் வீசினான். மாயக்குதிரை அவனைத் தாங்கிக் கொண்டமையால் தப்பிப் பிழைத்து ஓடிவிட்டான். கொள்ளையடிக்கப்பட்ட பொருள்கள் திருப்பக் கிடைத்தன. அரசன் மனக்குழப்பத்தில் இருந்தான்.

வீர நாராயணர் அரசர் முன் 'ஐந்தாம் நாள் வல்லான் தலையை அறுப்பதாக' உறுதி கூறினர். அரசனின் படையை வேண்டாம் என மறுத்து வேம்பன் கச்சித்தனியன், ஒற்றி ஊரன், புற்றிடங் கொண்டான், கோளாந்தகன், பள்ளி கொண்டான், கடம்பை நகர் பிணவன் கண்டியூரன், முதுகுன்ற மணியன், களத்தூரரசன் ஆகிய பதின்மருடி நாங்கள் இருவரும் ஆகப் பன்னிரு செங்குந்தர்களுமே வல்லானை அழிக்கப் போதுமான ஆற்றல் மிக்கவர்கள் என விளக்கினான். ஏனைய ஒன்பதின்மருக்கும் முடங்கல் அனுப்பும்படி கேட்டனர். முடங்கல் படி அனைவரும் வந்தனர்.

முரசு முழங்க, பறையறைந்து உமாதேவியின் அருளால் குத்தப்படை பெற்ற நம் குல வீரர்கள் வல்லான் தலையறுக்கப் புறப்பட்டனர்.

வள்ளுவன் கடம்பூர் ஏரி அணையின் மீது நின்று பறைமுழக்கினன். தீயகனவு கண்ட வல்லானும், அவன் மனைவியும் அது பற்றிச் சிந்தித்தனர். அவனுடைய அமைச்சர்களும்

சோழப் பேரரசின் படைபலத்தைக் கூறி ஆராய்ந்து முடிவெடுக்கும்படி வல்லானிடம் வேண்டினர். ஒற்றர்களும் செங்குந்தர் வீரர்களின் பெருமைகளை அவனுக்கு விளக்கினர்; எச்சரித்தனர்.

வல்லான் சிவபெருமானின் வரங்கள் துணை நிற்கும் என நம்பினான். ஆயினும் ஐந்து நாள்களும் கவனமாயிருக்க முடிவெடுத்துத் தன் கோட்டையின் மீது நூறடி உயரமுள்ள உருக்குத் தூணை நிறுத்தி அதன்மீது தன்மனைவியுடன் தங்குவதற்கு ஏற்ற கட்டடம் அமைத்து அதில் தங்கினான். உருக்குத் தூணின் மீது யாரும் பகைவர்கள் ஏறிவர முடியாதபடி மீன்கொழுப்பு, ஆமணக்கு எண்ணெய் ஆகியவற்றைத் தூணின் மீது தடவும் படி செய்தான்.

அரசன் மக்கள் அனைவரும் ஆசி கூறி, வழியனுப்பி வைக்கப்பட்ட செங்குந்த வீரர் பன்னிருவரும் ஆலந்துறையையடைந்து வட மூலநாதரை வணங்கி மூன்று தினம் நோன்பிருந்தனர் 'தம்மில் யாரேனும் போரில் இறந்தாலும் ஏனையோர் வருந்தாமல் முன் நிற்க உறுதி பூண்டனர். இறைவனும் முருகனும் அவர்முன் தோன்றவும் கரங்குவித்து வணங்கி வல்லானை வெல்ல வரம் வேண்டினர். இதற்குள் மூன்றரை நாட்கள் கழிந்தன.

வீரர்கள் வல்லான் கோட்டையை அடைந்த போது அங்குள்ள துர்க்கையின் காவல் பூதம் இவர்களைக் கொல்ல வந்தது. வீரன் அதன் கைகளைத் துண்டித்தான். துர்க்கை இரத்தப்பலியின்றி வழிவிடாது என எண்ணிய கச்சித்தணியன் தன் சிரத்தைத் தன் கையால் வெட்டித் துர்க்கை முன் வைத்தான். துர்க்கை மகிழ்ந்து வழிவிட்டாள். வழியில் இருந்த காளியை மகிழ்விக்க ஒற்றயூரன் தன் தலையை அறுத்து அதன் முன்வைத்து வேண்ட வல்லானை வெல்லக் காளி வரம் தந்தாள். வழியில் இருந்த அகழியைத் தாண்டுதற்குக் கோளாந்தகன் முதுகுன்றமணியன் இருவரும் தம்தம் தலையை வெட்டிக் கொண்டு மிதவையாய் ஏனைய எண்மரும் கடக்க உதவி செய்தனர்.

எட்டுத் தூண்களின் மீதுள்ள கோட்டையை எண்மரும் அடைந்து அதனைக் கண்டு வியநதனர். அவர்களைக் கண்டு சீறிவந்த செந்நாய்களுக்குப் புற்றிடங் கொண்டான் தன் உடலைத் தானே வெட்டிக்கொண்டு அவற்றிற்கு இரையானான். அடுத்த வாயிலில் அவர்களைச் சினந்து வந்த புலிகளுக்குக் களந்தை மன்னன் தன் உடலை மாய்த்து அவைகளுக்கு இரையானான். அதுபோலச் சிங்கங்களுக்குப் பள்ளி கொண்டானும், முதலைகளுக்குக் கண்டியூரனும் இரையாயினர். பிணவன் நெருப்பாற்றைக் கடப்பதற்குத் தான் பிணமானான் எஞ்சிநின்றோர் வேம்பன், வீரன், நாராயணன் ஆகிய மூவரே. வழுக்கும் தூண் மீது ஏறுதற்கு வேம்பன் தன் உடலை மாய்த்து உதிரத்லத வழங்கினான். அதனுடன் மணலைக் கலந்து தூணின் மீது பூசி மற்ற இருவரும் ஐந்தாம் நாள் விடியும்போது கோட்டையை அடைந்தனர். அங்கே வல்லான் உறங்கி கொண்டிருந்தான். அவன் விழித்த போது வீரர் இருவரும் அவன்மீது பாய்ந்து அவனை அமுக்கிப்பிடித்தவர்.

வல்லான் சீறித்திமிறியும் இருவீரர்களின் முன் அவனால் எதுவும் செய்ய முடியவில்லை. வீரன் அப்போது வல்லான் தலையை வெட்டக் கைவாளை ஓங்கினான். அப்போது வல்லான் மனைவி அண்ணா என வீரர்களை அழைத்துக் குறுக்கே விழுந்து மாங்கலியப் பிச்சைக் கேட்கவும் வீரனின் மனம் கரைந்துவிட்டது. நாராயணன் வல்லானின் ஆயுதங்களைப் பறித்து அவனுக்கு விலங்கு பூட்டினான். அப்போது வல்லான் தன் ஆணவம் அழிந்தது என கூறித் தன் செயல்களுக்குக் கழிவிரக்கப்பட்டான்.

'எல்லாக் காலத்திலும் ஒன்று ஏற்பவருக்கு இல்லை எனும்
சொல்லானது கற்றும் சொல்லறியார் ஏந்து குந்தம்
வல்லானைக் கொல்லாமல் மனைவிக்கு மங்கலியம்
உல்லாசத்துடன் அளிக்கும் உதவியது ஒன்று அறிந்தேமால்' (ஈட்டி எழுபது — 59)

என்ற கவிப்பேரரசர் ஒட்டக்கூத்தரின் பாடல் இதை விளக்குகிறது.

வீரர்கள் அவனை விடுவித்துத் தன் நாடு செல்லப் பணித்துவிட்டுச் சோழ மன்னர் முன் வல்லானின் பொய்த்தலையுடன் வந்து சேர்ந்தனர். சோழனும் அவர்களைப் பாராட்டி 'வல்லானின் தலையை எப்படி வெட்டினீர்' என்றான். அது கேட்ட வீரர்கள் முருகனைத் துதித்து 'அரசே' பாரும்! இப்படித்தான் என முழங்கித் தம் தலைகளை அறுத்து அவன் முன் வைத்தனர். அது கண்ட அனைவரும் வருந்த அரசனும் வருந்தித் தன் தவறுக்குப் பிராயச்சித்தமாகத் தன் தலையை வெட்டிக் கொள்ள வாளை உயர்த்தினான். அப்போது பேரொளியாய் முருகப் பெருமான் தோன்றி அரசனைத் தடுத்து வீரநாராயணர் முதலிய பன்னிருவரும் மீண்டும் தோன்றும்படி அருள் செய்தனர். அனைவரும் முருகப் பெருமானை வணங்கி நல்லருள் பெற்றனர்.

பின்னர் வீர நாராயணர் இருவரும் துறவறம் மேற்கொண்டு சிவ சிந்தனையில் வாழ்ந்து பரிபூரணம் அடைந்தனர். அம்மேலோர் சமாதி செய்யப்பட்ட இடத்தில் அரசன் கோயில் எழுப்பி ஒரு நகரம் உண்டாக்கி அதற்கு வீரநாராயணபுரம் எனப் பெயர் வழங்கிச் சிறப்பித்தான். வல்லான் கோட்டை இருந்த ஏரிக்கும் வீரநாராயண ஏரி எனப் பெயரிட்டான்.

இவ்வாறு நம் வீரர்கள் பலர் தன்னலம் கருதாது நாட்டிற்கு நல்ல தொண்டுகளைச் செய்து நல்ல குறிக்கோளுடன் வாழ்ந்து குடிக்கும், குலத்திற்கும் பெருமை சேர்த்துப் பெரு வாழ்வு வாழ்ந்தனர் என்பதை எண்ணி நாமும் நம்வாழ்வை அவர்தம் வழியில் அமைத்துக் கொள்ள நாளும் முயல்வோம்!.


தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் 16ஆவது மாநில மாநாடு சீருடனும் சிறப்புடனும் வெற்றிகரமாய் நடந்திட எங்கள் நல்வாழ்த்துக்கள்.



**ஆத்தூர் செங்குந்த மகாஜன சங்கம்**

76, பாரதியார் தெரு,
ஆத்தூர் அஞ்சல் - 636 141. சேலம் மாவட்டம்.



# நாவினால் மழுவெடுத்த ஞானப்பிரகாசர்

ச. கு. பா. பழனிவேல், பொதுச்செயலர்,
தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்.

இன்றைக்கு 600 ஆண்டுகளுக்கு முன் சான்றோர்கள் நிறைந்த தொண்டை நாட்டின் தலைநகரும் நமது செங்குந்தர் பேரரசின் 72 கிளை நாடுகளின் தலைநாடாகியதும் மகாநாடு என்ற பெயர் பெற்றதுமான காஞ்சியம்பதியில் விசயமார்த்தாண்டன் என்னும் குறுநில மன்னன் ஆண்டுவந்தான். அவன் கொலுச்சபையில் உத்தியோகம் செய்பவருள் ஒரே பெயர் வாய்ந்தோர் இருவர் இருந்தனர். அவர்களில் ஒருவன் செங்குந்தன். மற்றவன் வேளாளன். இவர்களில் ஒருவனை அரசன் அழைக்குங்கால் மற்றொருவன் வந்து எதிரில் நிற்பான். பலகால் இவ்வாறு நிகழ்வதை கண்ட அரசன் இருவரையும் அழைத்துத் தங்கள் இடுகுறி பெயரேனும் சிறப்பு பெயரேனும் வேறுபட மாற்றிக்கொள்ள உத்தரவிட்டான். அது கேட்ட செங்குந்தன் தனது இடுகுறிப் பெயரையோ அல்லது சிறப்புப் பெயரையோ மாற்ற இயலாது என்று கூறினான். இதைக் கேட்ட வேளாளன் தானும் மாற்றிக்கொள்ள இயலாது என மறுமொழி கூறினான். (இருவரும் முதலி என்ற பட்டப் பெயரை தனது பெயருடன் இணைத்து இருந்தனர்.) அரசன் இருவர் இடத்தும் சம நோக்கம் செய்து இந்த சந்தேகத்தினை யாரால் உள்ளபடி உணர்ந்து நிவர்த்திக்கக் கூடும் என்று வினவினான். அதற்கு செங்குந்தன் கையிலாய பரம்பரையில் வந்த சந்தானசிரியர் நால்வருள் உப சுப்ரமணியரான வீரவாகு தேவர் அம்சை பெற்று சனக மகா முனிவர் அவதாரமாய் விளங்கும் சுவேதனப் பெருமாள் என்னும் மெய்கண்டதேவர் ஆதீனத்தின்கண் பூர்வம் ஓர் சிவாநுபூதிமானய்ப் பிரசித்தி பெற்று இருந்த சிற்றம்பல நாடிகளின் பிரதம மாணக்கருள் ஒருவராய் இவ்வூரின்கண் இவ்வேளாளருக்கும் இவரது மரபினருக்கும் ஆசிரியராகி ஞானப்பிரகாச தேசிகர் என்னும் அபிஷேக திருநாமம் வாய்ந்த ஓர் புண்ணிய சொரூபி உள்ளார். அவரை அழைப்பித்துஉசாவின் உள்ளபடி உணரக்கூடும் என்று கூறினான். அப்போது அரசன் அவ்வேளாளனை உமக்கிது சம்மதமா என கேட்டான். அதற்கு வேளாளன் தனக்கு சம்மதம் என்றும் பின்னர் இச்செங்குந்தன் அத் தேசிகர் சொல்லிய உண்மையில் பிறழ்ந்து வேறு ஒருவரை அழைப்பித்தல் கூடாதென மொழிந்தான்.

அதுகேட்ட அவ்வரசன் அத்தேசிகரை சபைக்கு அழைத்துவரச் செய்து தக்க ஆசனத்தில் இருத்தி நடந்த சரிதத்தினை கூறி சந்தேகத்தினை நிவர்த்தியருள வேண்டினான்.

அதற்கு தேசிகர் ''தன் நெஞ்சால் அறிந்ததில் பிறழாது உண்மையே சொல்பவன் தான் தருமாதிகள் செய்வனினும் தலையானவன். ஆதலால் பொய் சொல்லாமைக்கு ஒப்பான புகழ்ச்சி இல்லை. நான் சற்சூத்திர மரபென்னும் வேளாளர் குலத்தில் பிறந்தேனாயினும் அம்மரபினருக்கெல்லாம் சமய தீட்சை செய்வித்தும் ஆசிரியராகியும் அவர்களால் செய்யப் படும் உபகாரத்தினால் சீவிக்கும் தன்மையன். இத்தன்மையுடைய என்னை இருவகை மரபினருக்கும் உண்டான சிறப்பு நாமத்தை பற்றி உண்மையை விளக்க வேண்டும் என்று கேட்டால் சாதி அபிமானமும் அதனால் பெறும் ஊதியத்தினாலும் நான் முறை பிறழ்ந்து பொய் சொல்வேன் ஆயின் என்னாகும்? ஆதலால் உண்மையே பேசுகிறேன்''. கேளும் என்று கூறினார்.

நான்கு வகை வருணபேதம் உண்டான காலத்தில் முதல் மூவகை வருணத்தாருக்கும் ஐய்யர் முதலிய சிறப்பு நாமங்கள் உண்டானபோது நான்காம் வருணத்தாருக்கு பிள்ளை என்னும் சிறப்பு நாமம் உண்டாகி முதல் மூவர் சிறப்பு நாமங்களில் மாற்றம் ஏற்பட்டதுபோல் நான்காம் வருணத்தாருக்கும் சிறப்பு நாமங்கள் பலவாறாயின என்பது எங்கும் பிரசித்த நிச்சயம். ஆனால் இச் சபையில் நிற்கும் முதலியரென்னும் சிறப்பு நாமம் அவற்றை ஒப்பது அன்று. அஃது தேவர்களுக்கெல்லாம் தலைவரான சிவபிரானுக்குரிய சிறப்பு நாமமாதலால் சிவக்குமாரர்களான செங்குந்தர் மரபினருக்கே எப்போதும் சிறப்பு நாமமாய் விளங்கும். இதை வேறு மரபினர் வகித்தல் விளக்கின் ஒளியை மின்மினி வகித்தலுக்கு ஒப்பாகும். அதன் பெருமையை அயன் அரி அரன் என்னும் முத்தேவர்கள் தான் சொல்ல வேண்டும். முனிவர் களில் அகத்திய முனியும் மானிடரில் கல்விச்சக்ரவர்த்தியும் சிரச் சிங்காதனாபதியுமாகிய ஒட்டக்கூத்தரும் விளக்கக் கூடும். ஆதலின் என்னை ஒத்தவர் கூறவல்லேன் அதனை செங்குந்தர் மரபினர் மாற்றி கொள்ள இயலாது. வேளான் மரபினரே மாற்றிக் கொள்ள வேண்டும் என்று கூறி முடித்தனர்.

இவை அனைத்தையும் கேட்டு இருந்த வேளான் முகம் கருகி வியர்த்து விழிசிவப்ப சினந்து ஞானபிரகாச தேசிகரை உருத்துப் பார்த்து, ஓய் தேசிகரே அன்னமிட்டார் வீட்டில் கன்னமிட்டார் கூட்டுள் நீவிர் தலையாவீர் போலும். செங்குத்தர் மரபோர் ஒருவர்க்கே முதலியார் எனும்சிறப்பு நாமம் உரியதென்று சத்தியமாக கூறுவீரா என்றுஉரப்பி க்கேட்டனர். அதற்கு தேசிகர் எனது நாவினால் மழுவெடுத்துக் கூறினேன் எனக் கூறினர்.

அரசன் வியந்து தேசிகரைப் பார்த்து உண்மை அறிய வேண்டும் என்பது என் கருத்து. நாவினால் நீவிர் மழுவெடுத்து கூறவல்லேன் என்று கூறியதால் அவ்வாறு செய்யற்கியல்வீரோ என்று கேட்டனன். அதற்கு தேசிகர் இன்னும் ஒரு சாமத்திற்குள் இவ்விராசசபையில் எரிமூட்டி ஓர் மழுவை அமைத்திரும் நான் சிவபூசை செய்து முடித்துக் கொண்டு வருகிறேன் என்று பூசாமண்டப பூங்காவிற்குச் சென்றார்.

உடனே வேந்தன் தனது நண்பராய் உள்ள பிரபுக்களையும் சில தூதரால் அழைப்பித்து நிகழப் போகின்ற அற்புத நிகழ்ச்சியை நகர் முழுதும் வள்ளுவனைக் கொண்டு முரசறைவித்தான். சிவாச்சாரியார்களும் செங்குந்தர்களும் புறவருணத்தாரும் புறச்சமயத்-தினரும் இராசசபையில் வந்து அமர்ந்தனர். அரசனானவன் தனது சபைக்கு நேரே உள்ள வெள்ளிடை வாசல் மத்தியில் ஓர் நீக்குண்டம் சமைப்பித்து அதில் ஓர் மழுவை அமைக்குமாறு மந்திரிகளுக்கு ஆணையிட்டான். அவர்களும் அவ்வாறு முடிப்பதில் முயன்றிருந்தார்கள்.

தேசிகர் நீராடி மறஉரி முதலியன உடுத்து விபூதி ருத்திராக்கம் முதலிய சின்னங்-களைத் தரித்து ஆன்மார்த்த பூசையை விதிப்படி நிறைவேற்றி ஸ்ரீசண்முக கடவுளுடைய திருவுருவத்தை மனதில் இருத்தி யோகம் செய்து நமது நியம நிட்டைகளை முடித்துக் கொண்டு கவிச்சக்கரவர்த்தியாகிய ஓட்டக்கூத்தரை மனதில் தியானித்து அவரது பிரபாவத்தை துதித்து ஐயனே பூர்வம் குலோத்துங்க சோழ மகாராசனுடைய கொலு மண்டப வாலின்கண் தனது மரபினரால் அமைத்த சிரச்சிங்காதனத்தில் இருந்து.

''இந்திர னயன் மாறேவர் யாவர்க்கு முதன்மையாக
வந்த பான்மை யினாற்குல மழுப்படை யத்தனார்க்கு
முந்திய நாமந் தானு முதலிய ராகையாற் செங்
குந்தர் சந்ததிக் குமப் பேர் முதலிய ரென்று கூறும்''

என்று தேவரீர் மொழிந்தது சத்தியமேயன்றோ? இத்தகைய சத்திய வாக்கினை நம்பி இவ்விஜய மார்த்தாண்ட மகாராசனுடைய கொலு மண்டபத்தில் யான் நடத்தப் பாகின்ற பிரமாணிக்கத்திற்கு யாதொரு இடையூறும் வராமல் தேவரீரே முன்னின்று

காத்தருள வேண்டும் என்று பிரார்த்தித்து, பூசா மண்டபத்திலிருந்து, கொலு மண்டபத்தை நோக்கி வந்த தேசிகர் கொல்லரால் ஏந்தப்பட்ட மழுவுக்கெதிரில் ஊங்காரம் செய்து வந்து நாவை நீட்டி ஏந்தப் பாய்ந்தனர். அதுகண்ட அரசன் ஓடி தடுத்து ஓ! சுவாமி தங்கள் வாய்மையை நிலை நிறுத்த பிரமாணம் செய்யவும் வேண்டுமா? தங்கள் தரிசனத்தால் சிவாநந்த வாழ்வு பெற்றோம். யாங்கள் நரகிற்காளாவண்ணம் இந்நிலைக் கண் வரச் செய்த எங்களை மன்னித்தருள் வேண்டுமென்று பிரார்த்தித்தான். அதற்கு அவர் சம்மதியாது முன் சொன்னபடி என்னாவினால் சிறிதளவேனும் தீண்டாது விடேன் என்று கூடி யாக்கிரமித்து மீண்டும் அம்மழுவில் எதிரே நாவை நீட்டிப் பாய்ந்தார்; அந்நாவின் பரிசம் அதன் மீது பட்ட மாத்திரத்தில் அம்மழுவானது வீபூதி குண்டம்போல் வெளுத்து நிராகித்தகரு கொண்டு பறந்தது. அதுகண்ட மக்கள் ஜயஜயவென்று கூறிக்கொண்டு கைகொட்டி ஆர்ப்பாரித்தார்கள். அந்தணராகிய பெரியோர்கள் மலர்தூவி ஆரவாரித்தார்கள்.

அரசனானவன் சகல வாத்திய கோஷம் முதலிய சம்பிரமங்களுடன் ஞானப்பிரகாச தேசிகரை சிவிகையில் ஏற்றி தானும் சதுரங்க சேனைகளாகிய பரிசனங்களுடன் அவரை கூடி நகரியை வலமாக வந்து அவரை அவரது மடாலயத்தில் இறக்கி பணிந்து அளவற்ற திரவியங் களை பரிசாகத் தந்து விடைபெற்று தனது இருக்கையை அடைந்தனன். அன்று முதல் இன்று காறும் அத்தேசிகரை யாவரும் நாவினால் மழுவெடுத்த ஞானப்பிரகாச வள்ளலார் என்னும் சிறப்பு நாமத்தால் துதி செய்வராயினர்.

இதனைக் கண்டிருந்த வேளாண் மரபினர் அவரை சன்மானித்தலும் அவர் பால் உபதேசம் பெறுதலும் அற்று அழுக்காறு அடைந்த மனத்தினராய் அகல நின்றார்கள். அது கண்டு செங்குந்த மரபினர் அவரை சன்மானித்து அவரது மடாலய விருத்திக்கு குறை நேராத படி காத்து வருவாராயினர். அதுபோலவே நாளது காறும் அம்மடாலய பரிபாலணங்கள் செங்குந்த மரபினரே நிறைவேற்றி வருகின்றனர். இத்தகையை பிரபாவத்தை அடைந்த ஞானப்பிரகாச வள்ளலார் தம்மைச் சன்மானித்த செங்குந்த மரபினரைச் சிறப்பித்து 6000 செய்யுளில் ஓர் புராணமும் பல பிரபந்தங்களும் இவ்வுலகுள்ள வரையில் நிகழ்வதாக அருளிச் செய்தனர்.

வள்ளலாரைப் போலவே பலர் தங்கள் இட்ட சித்தியாக வேண்டி கவிச்சக்கரவர்த்தி-யாகிய ஒட்டகூத்தரை பூசித்தும் தியானித்தும் அதனைப் பெற்ற சரிதங்கள் பலவாம்.

பின்குறிப்பு: இஃது 1895-ஆம் ஆண்டு சென்னை இந்து தியலாஜிக்கல் அச்சு இயந்திர சாலையில் ஸ்ரீ காரணீஸ்வரம் திரு. தி. தருமலிங்க முதலியார் அவர்களால் பதிப்பிக்கப்பட்ட கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர் சரித்திரம் முலமாகும். இவர் இயற்றிய 6000 செய்யுள்கள் அடங்கிய கந்தபுராண ஓலைச் சுவடி தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச்சங்கத்தில் இருக்கிறது.



தலைவர்

தஞ்சை ஜில்லா செங்குந்த மகாசன கல்விச்சங்கம்



திரு. R.N.சந்தான ராஜகோபால செங்குந்தர்

புரவலர்

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

## ரூ.5000 வழங்கிய தம்பதிகள்



திரு. C.K.குமாரசாமி திருமதி. பூமாகுமாரசாமி

# கவிப்பேரரசர் ஒட்டக்கூத்தர்

ஆர். என். சந்தானராஜகோபாலன், மன்னார்குடி.

தென்றமிழ் நாட்டுத் தண்டமிழ்ப் புலவருள் இடைக்காலத்து மிகச் சிறப்புடன் வாழ்ந்த புலவர் நம் ஒட்டக்கூத்தர். நம் செங்குந்த குல கவியரசர்; கலைவாணியின் கருணைக் கனிவுக்கு இலக்கான அருட்கவிஞர்; சிவபூசைச் செல்வர்; சைவத்தில் திளைப்புடையவர்; தமிழ்க் கருவூலமாகத் திகழ்ந்தவர். ஏறத்தாழத் தொண்ணூற்று ஏழு ஆண்டுகள் வாழ்ந்த அற்புதக் கவிஞர்.

இப்புலவர் பெருமான் பிறந்த ஊர் தஞ்சை மாவட்டம், வேதாரணியம் வட்டத்திலுள்ள திருவாய்மூருக்குக் கிழக்கில் மணக்குடி. இவ்வூர் சைவத் திருப்பதிகளில் ஒன்றான உள்ளது. கூத்தரின் மரபினர் எனக் கருதப்படும் ஒரு குடும்பத்தினர் இந்த ஊரில் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் வீட்டிற்குக் 'கூத்தன் வீடு' எனப் பெயர். இந்த ஊரில் உள்ள பிடாரி கோயிலில் தான் நம் கூத்தர், அம்மையின் அருள் பெற்றார் என்று ஒரு செவிவழிச் செய்தியும் இங்குக் கூறப்படுகிறது. இப்பழங்கோயில் இன்றும் இங்கு உள்ளது. இங்குள்ள கூத்தரின் குடும்பத்தினர் ஆண்டுதோறும் வருடப்பிறப்பன்று இவ்வம்மனுக்கு 'ஒட்டக் கூத்தன் பள்ளயம்' என்ற பெயரில் படையல் ஒன்று அமைத்து வழிபட்டு வருகின்றனர். அத்துடன் இந்தக் குடும்பத்தினரைச் சார்ந்த மரபினர் ஒவ்வொரு தலைமுறையிலும், தமது சந்ததியாரில் மூத்த மகனுக்கு ஒட்டக்கூத்தன் என்ற பெயரிட்டு இன்றுவரை போற்றி வருகின்றனர். தண்டியலங்கார மேற்கோள் பாடலொன்றின் பின்னிரண்டு அடிகளில்

"மணமமரும் கூந்தலர் மாதர் நோக்கொன்று
மணவை வரும் கூத்தன்தன் வாக்கு"

என இருக்கின்றது. மணவை என்பது மணக்குடி என்ற ஊரைக் குறிப்பதாகும். இந்த ஆதாரங்களை மையமாக வைத்தும், கல்வெட்டுகளின் துணைகொண்டும் ஆராய்ந்த நமது காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்கள் நம் ஒட்டக்கூத்தர் பிறந்த ஊர் மணக்குடியே என்று உறுதி செய்துள்ளார்கள்.

சோழ மன்னர்களால் ஆதரிக்கப் பெற்றவரும், அவர்களின் பேரவைகளில் 'கவிச் சக்கரவர்த்தி' என்ற பட்டத்துடன் அவைக்களப் புலவராகத் திகழ்ந்தவரும் ஆகிய இம் மாபெரும் புலவரின் பெருமையை உணர்ந்த சோழ மன்னர்கள் தஞ்சை மாவட்டம் நன்னிலம் தாலூக்கா பூந்தோட்டம் அண்மையில் அரசிலாற்றங்கரையில் அமைந்த 'கூத்தனூர்' என்ற சிற்றூரை இறையிலி நிலமாக அவருக்கு வழங்கிப் பெருமை செய்திருக்கிறார்கள். இவ்வூரில் கலைவாணிக்கு என ஒரு தனிக்கோயிலை நம் ஒட்டக்கூத்தர் அமைத்துள்ளார்.

இத்துணைச் சிறப்போடு மிக நீண்ட காலம் வாழ்ந்த நம் தெய்வீகப் புலவர் ஒட்டக் கூத்தர் குலோத்துங்கச் சோழன் உலா, விக்கிரமச் சோழன் உலா, இராசராசச் சோழன் உலா, குலோத்துங்கச் சோழன் பிள்ளைத் தமிழ், காங்கேயன் நாலாயிரக் கோவை, தக்கயாகப்பரணி, ஈட்டி எழுபது, எழுப்பெழுபது, அரும்பகைத் தொள்ளாயிரம், பல தனிப் பாடல்கள் எனப் பற்பல அரிய நூல்களைச் செய்து செங்குந்தர் குலத்தில் தோன்றி மூவேந்தர்க்கு ஆசானாகவும், தந்தைபோலவும் வழிகாட்டியாக வாழ்ந்து கவிப்பேரரசர் என்ற சிறப்புப் பெயர் பெற்றுத் தமிழ் வளர்த்த இந்தத் தெய்வீகப் புலவரின் சந்ததியார் எனச் செங்குந்தர் குலமக்கள் அனைவரும் போற்றிப் பெருமை அடைகிறோம். இத்தகைய சிறப்பு வாய்ந்த தமிழ் வளர்த்த சைவப் பெருந்தகைக்கு நினைவு ஆலயம் எழுப்ப வேண்டியது நம் தலையாய கடமை என்பதைச் சென்னையில் 1990 மே 12, 13-ஆம் தேதிகளில் நடந்த 15-ஆவது மாநில மாநாட்டில் வலியுறுத்தித் தீர்மானம் செய்திருக்கின் றோம். அப்போது தமிழ்நாட்டை ஆட்சி செய்தவர்கள் செந்தமிழுக்குச் சிறப்புத் தேடித் தந்த கவியரசரின் பிறந்தகமான மணக்குடியில் நினைவாலயம் ஒன்று நிறுவப் பெருந் துணையாக இருப்பார்கள் என்று நம்பினோம். இனிவரும் ஆட்சியாளர்களாவது தமிழைக் கண்ணென மதித்து நம்குல மக்கள் விருப்பத்தை நிறைவு செய்வார்கள் என ஆவலுடன் எதிர்பார்க்கின்றோம்.




வெல்க செங்குந்தம்!

துவக்கம்: 1967

# ஜோதி பால மந்திர்
# ஜோதி மெட்ரிகுலேஷன் ஸ்கூல்

(இங்கிலீஷ் மீடியம்)

(தமிழ்நாடு அரசு அங்கீகாரம் பெற்றது)

காமராஜ்நகர் காலனி, அம்மாபேட்டை, சேலம் - 636 014.

L,K.G. U.K.G. மற்றும் 1 முதல் 10ம் வகுப்பு வரை மாணவ, மாணவியர் சேர்க்கப்படுகிறார்கள். வெளியூர் பிள்ளைகளுக்கு ஹாஸ்டல் வசதி உண்டு.

T. தேவராஜன், B.Sc.,B.T.
Principal.

O. சிவராமன், M.A.,M.Ed.,
Director.

M.N. சிவப்பிரகாசம்,
Correspondent

# படிக்காசுப் புலவர்

கி.பி. பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்களிலே படிக்காசுப் புலவர் தலைமை யானதோர் சிறந்த இடத்தினை இலக்கிய உலகில் பெறுகின்றார். சைவப்பற்றிலும். மொழிப் புலமையிலும் சிறந்து விளங்கிவரும் செங்குந்தர் மரபிலே தோன்றியவர். தொண்டை மண்டலத்தில் உள்ள தென்களத்தூரே இவர் பிறந்த ஊர். இவ்வூர் பொன் விளைந்த களத்தூர் என இன்று வழங்குகிறது. இவரது இயற்பெயர் தெரியவில்லை. சைவராக விளங்கியவர்; பல கோயில்களுக்கும் சென்று உமையொரு பாகனாரை வணங்கி யிருக்கிறார். தில்லையில் நடராசப் பெருமானை வணங்கி அம்மை சிவகாமியை வழி பட்டார். அப்போது அம்மையின் பெருங்கருணையால் அவரது அன்றைய செலவிற்கு ஐந்து பொற்காசுகளைப் பஞ்சாக்கரப்படியில் பெற்றார். இந்நிகழ்ச்சி காரணமாக படிக்காசுப் புலவர் என்ற பெயரை இவர் பெற்றார்.

இலக்கண விளக்கம் என்ற நூலை இயற்றிய திருவாரூர் வைத்தியநாத தேசிகரிடம், இலக்கண இலக்கியங்களைக் கற்றார். பெரும்புலவராகத் திகழ்ந்தார். சொல்லழகு, பொருளழகு, நடையழகு போன்ற பாநலங்களெல்லாம் பொருந்தி கேட்பவருக்கு இனிமை யான நிலையில் இவரது பாடல்கள் அமைந்தன. வல்லைநகர் காளத்தி பூபதியைப் பாடி பசுவும் கன்றும் பரிசிலாகப் பெற்றார். சிவந்தெழுந்த பல்லவரையர் என்ற குறுநில வள்ளல்மீது 'சிவந்தெழுந்த பல்லவன் பிள்ளைத் தமிழ்' என்னும் நூலைப்பாடி பரிசு பெற்றவர்; திருநெல்வேலி மாதைத் திருவெங்கடேச ஐயர், அரியலூர் மழவரங்க பூபன், கவசை மசக்காளி மன்றாடி முதலியவர்கள் மீது பாடல்கள் புனைந்து பரிசு பெற்றிருக்கிறார். மோரூர் வள்ளல் குமரசாமிக் காங்கேயன், சேதுநாடு இரகுநாத சேதுபதி, கீழக்கரை சீதக்காதி வள்ளல் ஆகியவர்களைப் பலவாறு புகழ்ந்து பாடியிருக்கிறார். மதுரைத் திருமலைராயனால் சிறைப்படுத்தப்பட்ட இவர் அவரைப் பாடி விடுதலையும் விருந்தும் பெற்றார். மாவண்டூர் கறுப்ப முதலியார் வேண்டுகோளுக்கிணங்க 'தொண்டை மண்டல சதகம்' பாடினார். திருச்செங்கோட்டு சிவபிரான்மீது 'உமைபாகர் பதிகம்' பாடினார்.

தருமபுர ஆதினம் ஒன்பதாம் பட்டத்து திருநாவுக்கரசு தேசிகரிடம் துறவு பெற்றார். இவரது ஆணைப்படி புள்ளிருக்கு வேளூருக்குக் கட்டளைத் தம்பிரானாகச் சென்றிருந்த போது 'புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகம்' பாடினார். சிவந்தெழுந்த பல்லவன் உலா, பாம்பலங்காரர் வருக்கக் கோவை போன்ற நூல்களையும், பல தனிப்பாடல்களையும் யாத்துள்ளார். பல பட்டடைச் சொக்கநாதப்புலவர் இவரது பாடல் நயத்தைப் புகழ்ந்துள்ளார். 'பகர் சந்தம் படிக்காசலாதொருவர் பகரொணாதே' என்ற தொடரால் இவர் சந்தக்கவி பாடுவதில் வல்லவர் என்பது விளங்கும். படிக்காசுப் புலவர் நமக்குக் கிடைத்த இன்றமிழ்ப் புலவராவார்.

# இரட்டையர்கள்

(புலவர் மாணிக்க கணபதி எம்.ஏ., பி.ஓ.எல்., பி.எட்., மன்னார்குடி)

சோழவள நாட்டில் ஆமிலந்துறை என்னும் ஊரில் சிலம் நிறைந்த செங்குந்தர் மரபில் உதித்தவர்கள் நம் இரட்டையர்கள். இரட்டையர்கள் என்ற சொல் ஒருவரல்லர்; இருவர் என உணர்த்தி நிற்கிறது. இருவரும் பிறந்த ஊர் ஒன்றே. ஆனால் பெற்றோர்கள் வெவ்வேறானவர். அத்தை மகன் ஒருவன்; அம்மான் மகன் மற்றொருவன். இளஞ் சூரியர், முதுசூரியர் என்பன இவர்களது பெயர்களாக அமைந்திருந்தன என்று தமிழ் நாவலர் சரிதையால் அறிகிறோம். ஒருவர் முடவர்; ஆனால் அறிவு முடம் இல்லை. மற்றொருவர் குருடர்; ஆனால் அகக்கண் குருடில்லை. முடவர் குருடர் தோள்மீது அமர்வார்; முடவர் வழிகாட்டுவார்; குருடர் செல்வார். தலங்கள்தோறும் சென்று இறைவனைப் போற்றி பரவுவர். இடையிடையே பெருஞ்செல்வந்தர்களைப் பாடிப் பரிசில் பெற்று தங்கள் வாழ்வை நடத்தினர்.

சோழர்களுக்குட்பட்ட சோழநாடு, தொண்டை நாடுகளில் சிலப் பகுதிகளை ஆட்சி செய்த மல்லிநாதன் எனப்பட்ட இராஜநாராயண சம்புவராயன் காலமாகிய கி.பி. 14 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி அல்லது பிற்பகுதியில் இரட்டையர்கள் வாழ்ந்திருக்கலாம் என்று மு. இராகவையங்கார் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். 'கோவை உலா அந்தாதிக்கு ஒட்டக் கூத்தன்' எனவும், 'சந்தக் கவிக்கு' படிக்காசுப் புலவர்' எனவும் பாராட்டப்பட்டதைப் போல நம் இரட்டையர்களும், திருவாமாத்தூர் கலம்பகம், தில்லைக் கலம்பகம், மாதைக் கலம்பகம் என ஒரே வகையான இலக்கண அமைதியில் மூன்று நூல்கள் யாத்து, பொருட்சிறப்பாலும் பாடல் அழகாலும் 'கலம்பகத்திற்கு இரட்டையர்கள்' என்று பாராட்டப்பட்டனர்.

செருக்குடையவர்களைத் தம் பாடல் மூலம் செருக்கடக்கினர்; புலமை அறியாது புண் படுத்தியவர்களை வசைப்பாடி நல்வழிப் படுத்தினர்; பெரிதும் பாதுகாத்த வள்ளல்களை நெஞ்சாரப் புகழ்ந்துள்ளனர். வறுமையோடு தாங்கள் வாழ்ந்த காலத்தில் அதனை எண்ணி எண்ணி வேதனைப்பட்டிருக்கிறார்கள். இவர்களது பாவன்மை கற்றவர்கள் உள்ளத்தைக் கவரும்; செறிந்த பொருளோடு அமைந்திருக்கும். இரண்டு வேறுபட்ட பொருளைத் தரும் சொல்லொன்றை ஒரே வரியில் இரண்டு இடங்களில் அமைத்து நகைச்சுவை மிளிரப் பாடுவர். சுருங்கச் சொன்னால் இவர்கள் ஒரு சொற்களஞ்சியமாகத் திகழ்ந்தனர்.

இரட்டையர்கள் ஒவ்வொரு நூலையும் சேர்ந்தே பாடினர்; தனிப்பாடல்கள் ஒவ் வொன்றையும் முற்பாதியை ஒருவர் பாடுவார் — பிற்பாதியை மற்றொருவர் பாடுவார். முன்னவர் பாடியதை ஒட்டியே சொல்லமைப்புகள், பொருள் அமைப்புகள் எதுவும் மாறாமல் பின்னவர் பாடுவார். வாழ்நாள் முழுவதும் இணைபிரியாமல் ஒருவருடன் ஒருவர் கலந்து பாடி — நூல்யாத்து அரும்புலமையால் பெரும் புகழுற்றனர். ஒரு தாய் வயிற்றில்-ஒரே நேரத்தில் பிறக்கவில்லை என்றாலும் இரட்டையர் என்றே அழைக்கப்பெற்றனர்.

இவர்களது கலம்பகங்களோடு, ஏகாம்பரநாதர் உலாவும், மற்றும் தனிப்பாடல்களும் என்றும் ஆரா இன்பம் தரும் அழகிய பாக்களாக அமைந்துள்ளன. செங்குந்தர் குலம் பெற்ற சிறப்புகளில் நம் இரட்டையர்களின் பிறப்பும் ஒன்று.

# திருப்பூர் குமரன்

— கவிஞர் தென்னவன், செம்பொன் —

திருப்பூர் குமரன் — குந்தர்
தினம்தொழு அமரன்;
விருப்பார் வத்தால் — இந்திய
விடுதலை வேண்டினன்.

கருப்பா யினும் — தமிழ்க்
கண்மணி ஈன்றனள்;
திருக்குல நாச்சிமுத்(து) — அவன்
தந்தை யாகுமே!

காந்தியின் அறப்போர் — அவன்
கருத்தைக் கவர்ந்ததால்
சாந்தம் துறந்தனன்; — விடுதலைச்
சமரில் குதித்தனன்.

அன்னியர் பொருட்களை — அவன்
அறவே வெறுத்தனன்;
மன்னிய 'சுதேசி' — பொருளையே
மதிக்க வேண்டினன்.

பேரணி என்னில் — தனியொரு
பேரவா கொள்வான்;
தாரணி வீரனாய் — முன்னே
தருக்கிச் செல்வான்.

அப்படி ஒருநாள் — வீரர்
அணியாய்த் திரண்டனர்;
முப்பது வயதும் — நிரம்பா
குமரனும் எழுந்தனன்.

முன்னே கொடியை — உயர்த்தி
முழக்கிச் சென்றனன்;
என்னே கொடுமை; — காவலர்
எதிரில் மடக்கினர்.

தடியைக் கொண்டே — வீரரைத்
தாக்கிப் புடைத்தனர்;
அடியைத் தாங்கியே — ஆங்கிலர்
ஆட்சியை எதிர்த்தனர்.

குருதியும் சொட்டவே — வீரர்
கூடியே முழக்கினர்;
பருதியும் கூட — இதைப்
பார்த்துக் கூசினன்.

குமரன் தலையில் — ஒரு
கொடுமனக் காவலன்
தமரவன் எணாமே — கொடுந்
தடியினால் அடித்தனன்.

விழுந்தனன் குமரனும் — அவன்
விரும்பிப் பிடித்த
செழுங்கொடி தனையே — காவலன்
திமிராய்ப் பறித்திட

ஆனவ ரையிலும் — தன்
அரிய முயற்சியை
ஈனம் எணாமல் — செய்தும்
ஏதும் பலனிலை.

மருத்துவ மனையில் — அவன்
மாணுயிர் பிரியவே
விருப்புடன் பிடித்த — அந்த
வியன்புகழ்க் கொடியைப்

பறித்தனர் காவலர் — எனில்
பார்புகழ் குமரன்
குறிக்கொள் மறத்தை — எங்ஙனம்
கூறியே புகழ்வோம்?

கொடியினைக் காத்தான் — நம்
குலத்தினை உயர்த்தினான்;
படியினில் அவன்புகழ் — ஓங்கப்
பாடிநாம் போற்றுவோம்.

# தில்லையாடி வள்ளியம்மை

முத்துலெட்சுமி இராமலிங்கம், ஆக்கூர்.

**முன்னுரை:**

உலக நாடுகள் பல; அவற்றுள் தென்னாப்பிரிக்காவும் ஒன்று. தமிழர்களாகிய நாம் அந்நாட்டை நினைக்கின்ற போது நம் கண்முன்னே அந்நாட்டு நிறவெறிக் கொடுமையின் கோரத் தாண்டவம் தோன்றுகின்றது. அக்கொடுமைகளைக் களைந்தெறியத் தென்னாப்பிரிக்க அரசை எதிர்த்து சத்தியாகிரகப் போர் நடத்திய காந்தியடிகள் தோன்று கின்றார். அச்சத்தியாகிரகப் போரில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு உயிர்த் தியாகம் புரிந்த தில்லையாடி வள்ளியம்மை தோன்றுகின்றார்.

**காந்தியடிகள் உள்ளம்:**

தென்னாப்பிரிக்காவில் காந்தியடிகள் நடத்திய பல போராட்டங்களில் அஞ்சா நெஞ்சுடன் ஆருயிர் ஈந்தவர்கள் பலர். என்றாலும் வள்ளியம்மையைப் போன்று அவர் உள்ளத்தைத் தொட்டவர்கள் யாருமிலர். இதனைக் காந்தியடிகள் உள்ளமே நமக்குத் தெளிவு படுத்துகின்றது. அவர் சொல்லுகிறார், "தென்னாப்பிரிக்காவில் எவருடைய தியாகம் ஆண்டவனுக்கு உகந்ததாய் இருந்தது; பயனளித்தது; என்று ஒருவரும் சொல்ல முடியாது. ஆனால் வள்ளியம்மையின் தியாகமும் மற்ற சகோதரிகளின் தியாகமும் பயனைப் பெற்றது என்பது நிச்சயம்".

— காந்தி நூல்கள் முதல் தொகுதி — பக்கம் 371.

**தோற்றமும் வளர்ச்சியும்:**

வள்ளியம்மையின் தந்தையார் ஆர். முனுசாமி முதலியார். இவர் புதுச்சேரி முதலியார். ஜோகன்ஸ்பர்க்கில் தின்பண்டங்களும் பலசரக்குகளும் விற்பனை செய்யும் கடை வைத்திருந்தார். தாயார் மங்களத்தம்மாள் என்று அழைக்கப்பட்ட ஜானகியாவார். இவர் தஞ்சை மாவட்டத்திலுள்ள தில்லையாடி கிராமத்தில் பிறந்தவர். இருவரும் நமது செங்குந்தர் குலத்து தோன்றிய தூயவர்கள். நமது வள்ளியம்மை அவ்விருவருக்கும் ஜோகன்ஸ்பர்க்கில் 1898-ஆம் ஆண்டில் மூத்த மகளாகப் பிறந்தார். வள்ளியம்மை பெற்றோரால் நாகரிகமான முறையில் வ்ளர்க்கப் பெற்றாள். அவள் அங்கிருந்த அரசினர் பள்ளியில் படித்தாள்.

**உள்ளக் கொதிப்பு:**

அப்பொழுது வள்ளியம்மைக்கு வயது பதினாறுதான் ஆகியிருந்தது. உலகத்தைச் சரியாகக்கூட புரிந்து கொள்ள இயலாத இளமைப் பருவம். சத்தியாகிரகம் என்றால், அது என்ன என்றே அறியாதவள். என்றாலும் அந்த வயதிலேயே அந்த இளநங்கையின் உள்ளம் கொதித்தெழும்படியாக, தென்னாப்பிரிக்க நீதி மன்றம் "தென்னாப்பிரிக்காவில் இந்திய

முறைப்படி நடைபெற்ற திருமணங்கள் செல்லா'' என்று அறிவித்தது. எனவேதான் வள்ளியம்மையின் உள்ளமும் நெருப்பாயிற்று; சொற்கள் கனலைக் கக்கின.

**போரில் குதித்தாள்:**

இந்தியர்களுடைய மானமே இப்புதிய சட்டத்தினால் அழிந்துவிடும் நிலை ஏற்பட்டது. எனவே இந்தியர்கள் அனைவரும் ஒன்று திரண்டனர். தம் உயிர் கொடுத்தேனும் மானம் காக்க முன்வந்தனர். சத்தியாகிரகப்பேரணி நடத்தத் திட்டமிட்டனர். 1913-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 29-ஆம் நாள் ஜோகன்ஸ்பர்க்கிலிருந்து நியுகாசிலுக்குப் புறப்பட்ட சத்தியாகிரகப் பெண்கள் பேரணியில் சேர்ந்து கொண்டனர். வீராங்கனை வள்ளியம்மையும் அவள் தாயாரும் அப்பேரணியில் கலந்து கொண்டு நடந்தே சென்றனர். சார்லஸ் டவுன், டண்டி, லேடிஸ் மித், மாரிட்ஸ் பர்க், டர்பன் போன்ற முக்கிய இடங்களில் எல்லாம் சத்தியாகிரகப் படையினர் தங்கிச் சென்றனர்.

**சிறைப்பட்டாள்:**

வள்ளியம்மை சென்ற குழு நியூகாசிலிலிருந்து புறப்பட்டு டிரான்ஸ்வாலுக்குள் நுழைந்தது. அப்பொழுது அந்நாட்டு அரசினர், அவளையும் அவளது அன்னையையும், மற்ற பெண்களையும் 'வால்க்ஸ்ரஸ்ட்' என்ற இடத்தில் 1913-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 22-ஆம் நாள் கைது செய்தனர். அவர்களுக்கு மூன்று மாதக் கடுங்காவல் தண்டனை விதித்து 'மாரிட்ஸ்பர்க்' சிறையில் அடைத்து வைத்தனர்.

**உடல் நலம் கெட்டாள்:**

சிறைச் சாலையில் அடைக்கப்பட்ட உடனேயே வள்ளியம்மையின் உடல் நலம் பாதிக்கப்பட்டுவிட்டது. சிறைக்குள் படுத்த படுக்கையாக இருந்தாள். இடையே காந்தியடி களுக்கும் ஸ்மட்சுக்கும் ஏற்பட்ட தற்காலிக உடன்·பாட்டின்படி அவளுடைய தண்டனை முடிவதற்கு முன்னமேயே 11—2—1914-இல் விடுதலையானாள்.

**பரிதாப நிலை:**

விடுதலை பெற்ற வள்ளியம்மை தள்ளாடி, தள்ளாடி சிறையின் வாயிற்புறம் வந்தாள். அப்போது காந்தியடிகளும், அவரது நண்பர் 'போலக்'கும் அவளைப் பார்க்க அங்கு வந்தனர். அப்பொழுது அவள் மயக்கம் போட்டு விழக்கூடிய நிலையில் இருந்தாள். ஒரு சமுக்காளத்தை விரித்து அதில் வள்ளியம்மையைப் படுக்கவைத்து, வள்ளியம்மையின் தாயாரும், போலக்கும், காந்தியடிகளும் மெதுவாகத் தூக்கி வந்தார்கள். தம்மால் இவ்வாறு வள்ளியம்மையும், அவள் தாயாரும் கவலையும் பரபரப்பும் அடையவேண்டிய ஒரு நிலை ஏற்பட்டுவிட்டதே என்று காந்தியடிகள் வருந்தினார்.

**உயிர்த் தியாகம்:**

படுத்த படுக்கையாக இருந்த வள்ளியம்மையின் உடல் நாளுக்கு நாள் மெலிந்து வந்தது. 22—2—1914 அன்று வள்ளியம்மை இவ்வுலகவாழ்வை நீத்தாள். ஆம் எலும்பாலும், தோலாலும் ஆன உடம்பைவிட்டுப் புகழுடம்பைப் பெற்று விட்டாள்.

**காந்தியடிகள் இரங்கல் உரை:**

காந்தியடிகள் வள்ளியம்மை இறந்ததும் 'இந்தியன் ஒப்பினியன்' என்னும் இதழில்,

> "இந்தியாவின் புனித மகள் ஒருத்தியை இழந்து விட்டதற்காக வருந்துகிறோம். ஏன்? எதற்கு? என்று கேட்காமல் தனது கடமையை உணர்ந்து ஆற்றிய காரிகை அவள். மாதர்களுக்கு அணிகலன்களான துன்பத்தை சகிக்கும் மனோபலம், தன்மானம், நல்லொழுக்கம் ஆகியவற்றிற்கு இன்னுதாரணமாகத் திகழ்ந்தவள். அவளுடைய உதாரணம் இந்திய சமுதாயத்தில் வீணாகப் போகாது என்று நம்புகிறேன்."

என்று அவள் இறந்ததற்காக வருந்தியும் அவளது தியாகத்தைப் புகழ்ந்தும் எழுதியுள்ளார்.

**முடிவுரை:**

அன்று காந்தியடிகள் வள்ளியம்மைக்கு நினைவு மண்டபம் கட்டவேண்டும் என்று விரும்பினார். அவரது எண்ணம் ஈடேற இன்று தமிழக அரசு அவர்தம் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு காந்தியடிகள் 'ஆன்மா' அவளைக்குறித்து அமைதியடையும் பொருட்டு, அவள் தாயார் பிறந்த தில்லையாடியில் 'வள்ளியம்மை மன்றம்' எழுப்பி இருக்கின்றது.

வாழ்க வள்ளியம்மை! வெல்க அவள் தம் தியாகம்!




With best compliments from:

Phone: 72556

**S. PASUPATHY & SONS.**

(CLOTH MERCHANTS)

103, Brindha Street, **ERODE - 1.**

Branch: **S.P. & Sons,**
Vizianagaram.



★

# பாவேந்தர் பாரதிதாசன்

★

புலவர் செக. தியாகராசன், பி.லிட்., பி.எட்.,
செம்பொன்.

**முன்னுரை:**

எடுப்பான தோற்றம் - மிடுக்கான நடை - பரந்த முகம் - விரிந்த நெற்றி - அடர்த்தெழுந்த மீசை - தூக்கிப் பின்னோக்கி வாரிவிடப்பட்ட கன்னங்கறுத்த தலைமயிர் - அகன்ற கண்கள் - குறுகுறுத்த பார்வை - முகத்திற்குப் பொலிவூட்டும் மூக்கு - மயிரடர்ந்த புருவம் - மூக்கின்மேலே கண்ணாடி - கறுத்த மேனி - மடித்துக் கட்டப்பட்ட வேட்டி - நீண்டு தொங்கும் முழுக்கைச் சட்டை - மார்பிலே குறுக்கே போர்த்தப்பட்ட பொடிநிறப் போர்வை - காலிலே தொடுகோல் - இந்தத் தோற்றத்தோடு மனக்கண்முன் தோன்றிப் பூரிப்பும் பெருமையும் பெருமிதமும் அளிப்பவர்தாம் புரட்சிக் கவிஞர் பாவேந்தர் பாரதி தாசன் அவர்கள் ஆவார்கள்.

தேசியக்கவிஞர் சுப்பிரமணிய பாரதியார் பாட்டுப் பரம்பரையிலே தோன்றி, இருபதாம் நூற்றாண்டின் ஈடு எடுப்பும் அற்ற ஒரு பெரும் புரட்சிக் கவிஞராய்த் திகழ்ந்தவர்தாம் பாரதிதாசன். தமிழால் அவர் புகழ் பெற்றார்; அவரால் தமிழ் பொலிவு பெற்றது.

**தோற்றம்:**

இவரது இயற்பெயர் சுப்புரத்தினம். சுப்புரத்தினம் அவர்கள் புதுவையில் பெரு வணிகராக விளங்கிய கனகசபை செங்குந்தர்க்கும் இலக்குமி அம்மையாருக்கும் 1891-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 29-ஆம் நாள் நன்மகனாகப் பிறந்தார். இவருக்கு இளமையிலேயே நல்ல தமிழார்வமும் இயல் - இசை - கூத்து ஆகியவற்றிலே நல்ல ஈடுபாடும் இருந்து வந்தன. அவர் புதுவையில் பிரெஞ்சு மொழிப் பள்ளியில் பயிற்றுவிக்கப் பட்டாலும் அவருக்குத் தமிழ் மொழியினிடத்து நீங்காத பற்றும் தணியாத ஆர்வமும் இருந்து வந்ததால் தக்க புலவர்களிடத்தில் முறைப்படி முத்தமிழைப் பயில்வதிலே மிகவும் நாட்டம் கொண்டார். ஆர்வத்தோடு தமிழ்க்கல்வி பயின்றார். 1908-ஆம் ஆண்டில் புதுவைக் கல்வே கல்லூரியில் நடந்த புலவர் வகுப்புத் தேர்வில் கல்லூரியிலேயே முதல் மாணவராகத் தேர்ச்சி பெற்றார். சுப்புரத்தினம் தாம் பள்ளியில் பயிலும் காலத்திலேயே அகவல் முதலிய வகையில் கவிதை எழுதும் ஆற்றல் பெற்றிருந்தார். முதன் முதல் காரைக்காலுக்கு அருகிலுள்ள நிரவியில் தமிழாசிரியராகப் பணியாற்றினார். நாளடைவில் அவர் கல்வே கல்லூரிக்கே தமிழ்ப் பேராசிரியராக வந்தார்.

**பாரதியாரும் பாரதிதாசனும்:**

புலவர் சுப்புரத்தினம் அவர்கள் பாரதியாரிடத்தில் அளவுகடந்த பற்றும், மதிப்பும், நட்பும் கொண்டிருந்தார். பாரதியார் அவர்கள் புதுவையைப் புகலிடமாகக் கொண்டு வாழ்ந்து வந்த காலத்தில், அவரோடு பத்து ஆண்டுக் காலம் நெருங்கிப் பழகும் வாய்ப்பு அவருக்கு ஏற்பட்டது. பாரதியாரின் தேசியப்பாடல்களும், நாட்டு விடுதலைக் கொள்கையும் சமூக சீர்திருத்தக் கருத்துகளும் அவரைப் பெரிதும் கவர்ந்தன. சுப்புரத்தினம் அவர்கள் பாரதியாரிடம் கொண்டிருந்த அளவுகடந்த பற்றுக் காரணமாகவும், மதிப்பின் காரண மாகவும் தம் பெயரைப் பாரதிக்குத் தாசன் என்று பொருள்படும்படி **பாரதிதாசன்** என்று மாற்றி அமைத்துக் கொண்டார். தமிழையும் பாரதியையும் போற்றிப் பாராட்டுவதில் பாரதிதாசன் தனி இன்பம் கண்டார்.

> ''தமிழகம் தமிழுக்குத் தகும் உயர் வளிக்கும்
> தலைவனை எண்ணித் தவங்கிடக் கையில்
> இலகு பாரதிப் புலவன் தோன்றினான்''.

என்று தமிழையும் பாரதியையும் நன்கு இணைத்து அழகுற மொழிகிறார் பாரதிதாசன்.

**பாரதிதாசன் படைப்புகள்:**

பாரதிதாசன் அவர்கள் ஏறத்தாழ 64 நூல்கள் வெளியிட்டிருக்கிறார். பலகோடிகள் இருக்கும் இவர் எழுதியுள்ள கவிதை வரிகள். அவர் கவிதைகளின் மூலம் சமுதாயத்திலே நிலவி வந்த குருட்டு நம்பிக்கைகளையும் மூடப்பழக்க வழக்கங்களையும் கண்டித்தொதுக்கி, பகுத்தறிவு நெறிக் கருத்துக்களை மிகத் தீவிரமாகப் பரப்பத் தொடங்கினார். அவர் அரசியலிலே விடுதலை வேண்டும், சமூகவியலிலே சமத்துவம் வேண்டும், பொருளியலிலே சம தர்மம் வேண்டும் என்று முழங்கினார். இவருடைய கவிதைகள் அத்தனையும் தித்திக்கும் தேன் சுளைகள். இவருடைய படைப்புகள் பல. அயர்ந்த தமிழர்களை விழிப்பூட்டியது **தமிழியக்கம்**; இயற்கையின் எழிலை அள்ளிப்பருகச் செய்கிறது **அழகின் சிரிப்பு**; உயர் தமிழ்ச் சொல்லை உணர்த்துவது **பாண்டியன்** பரிசு; என்றும் இனிமை தரும் இல்வாழ்வைக் காணச் செய்கிறது **குடும்ப விளக்கு**; ஒன்றெனும் உணர்வு ஊட்டுகிறது **அமைதி**. குயில் என்ற மாத இதழ் ஒன்றையும் நடத்தி வந்தார்.

**புரட்சிக் கவிஞர்:**

புரட்சிகரமான கருத்துகளை அஞ்சா நெஞ்சத்துடன் பாவேந்தர் எடுத்துரைக்க முன் வந்த இந்தக் காலத்திலேதான் 29—7—46-இல் புரட்சிக்கவி என்று போற்றப்பட்டு ரூ 25,000 கொண்ட பொற்கிழியை, நாவலர் சோமசுந்தர பாரதியார் தலைமையில் பொன்னாடை அணிவித்து, **பேரறிஞர் அண்ணா** அவர்கள் வழங்கினார்கள். தமிழகப் பேரறிஞர்கள் அனைவரும் வாழ்த்திப்பேசினர்.

**புரட்சிக் கவிஞரின் தமிழ்ப்பற்று:**

கவிஞர் அவர்கள் தமிழினிடத்தில் காட்டியிருக்கும் அன்பையும், ஆர்வத்தையும், பற்றையும், மதிப்பையும், அவ்வளவு அழகாக, அருமையாக, இனிமையாக, எழுச்சிமயமாக, சிறப்பாக எடுத்துக் காட்டியவர் அண்மைக் காலங்களில் வேறு யாருமே இல்லை.

> ''நல்லுயிர் உடம்பு செந்தமிழ் மூன்றும்
> நான் நான் நான்''

என்று அழுத்தந் திருத்தமாகக் கூறுகிறார்.

"செந்தமிழே! உயிரே! நறுந்தேனே
செயலினை மூச்சினை உனக்களித் தேனே!
நைந்தாய் எனில்நைந்து போகுமென்வாழ்வு!"

என்றும்,

"தமிழரின் மேன்மையை இகழ்ந்தவனை என்
தாய்தடுத் தாலும் விடேன்"

என்றும்,

"தமிழுக்கு அமுதென்று பேர்! - அந்தத்
தமிழ்இன்பத் தமிழ் எங்கள் உயிருக்கு நேர்"

என்றும்,

"தமிழ் எங்கள் இளமைக்குப் பால்! - இன்பத்
தமிழ் நல்ல புகழ்மிக்க புலவர்க்கு வேல்"

என்றும்,

"எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு"

என்றும்,

"தமிழுக்குத் தொண்டு செய்வோன் சாவதில்லை"

என்றும் வரும் கவிதைகள் மூலம் அவரது தமிழின் ஈடுபாட்டை அறியலாம். இவை அவர் வடித்திறக்கிய செந்தமிழ்த் தேம்பாகு வெள்ளத்தில் ஒரு சில சொட்டுக்களேயாகும்.

**முடிவுரை:**

பாவேந்தர் அவர்கள் 1964 ஏப்ரல் 21-இல் இயற்கை எய்தினார். புதுவையில் 1965-இல் பாரதிதாசன் நினைவு மண்டபம் எழுப்பப்பட்டது. சென்னையில் நடைபெற்ற இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டில் பாவேந்தரின் முழு உருவச்சிலை கடற்கரையில் திறந்து வைக்கப் பெற்றது. 1971 முதல் பாவேந்தரின் பிறந்தநாள் விழாவைப் புதுவை அரசு கொண்டாடி வருகிறது. பாவேந்தரின் இல்லம் அரசுடைமையாக்கப்பட்டு, அங்கே புரட்சிக் கவிஞர் நினைவு நூலகம் - காட்சிக் கூடம் நடந்து வருகிறது. 1972-இல் புதுவை அரசால் பாவேந்தரின் முழு உருவச் சிலை திறந்து வைக்கப் பெற்றது. 1977 முதல் தமிழக அரசு 'பாவேந்தர் விருது' வழங்கி வருகிறது. 1982-இல் தமிழக அரசு திருச்சியில் "பாரதிதாசன் பல்கலைக் கழகம்" நிறுவியுள்ளது. 1991-இல் பாரதிதாசன் படைப்புகள் அனைத்தையும் அரசுடைமையாக்கியுள்ளது தமிழக அரசு.

புரட்சிக் கவிஞர் பாவேந்தர் பாரதிதாசன் அவர்கள் தொடாத கருத்து எதுவும் இல்லை. அவர் தொட்டதெல்லாம் துலங்கவே செய்தன. தமிழகத்தில் ஈடும் எடுப்புமற்ற ஒரு பெரும் புரட்சிக் கவிஞராய் விளங்கினார் பாரதிதாசன். வாழ்க அவர் பெயர்! ஓங்குக அவர் புகழ்!

வரலாற்றுக் காவியங்கள் வளமாய்த் தந்தார்;
வறுமையினால் வாடுவோரின் நிலையை எண்ணித்
தரமான கவிதைகளைத் தகவாய்ச் செய்தார்;
தனையீன்ற தாய்நாட்டின் பற்றால், கொட்டும்
முரசொலியோ எனுமாறு மொழியை நாட்டை
மூண்டெழுந்த உணர்ச்சியுடன் பாடிச் சிறந்தார்;
உரமற்ற ஒருவனையும் ஊக்கப் பாடிய
ஒப்பற்றப் புரட்சிக்கவி உயர்புகழ் வாழியே!

— கவிஞர் தென்ன

தென்னிந்திய செங்குன்ற மகாஜன சங்க துணைத்தலைவர்



தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்வி சங்க
பொது செயலாளர்

திரு. ச.கு.பா. பழநிவேல் செங்குந்தர் கூறைநாடு

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க
முதலாவது தலைவர் 29.04.1927 — 19.01.1929.



சென்னை இந்துமத அறநிலை துறை ஆணையர்.,
அமரர் P.V. நடராஜ செங்குந்தர் BA.B.L. சென்னை.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க
இரண்டாவது தலைவர் 20.1.1929 — 23.2.1936.



அமரர் : ஆ.வே முத்தைய செங்குந்தர் BA.BL.
பிரஞ்ச் இந்திய முன்னாள் முதல் மந்திரி,பாண்டிச்சேரி

★

## கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர்

# க. வெள்ளைவாரணனார்

★

தி. பொன்னம்பலம், M.A., M.Phil., M.Ed., சிதம்பரம்.

திருநீறு இலங்கும் நெற்றி! நரைத்ததலை! வெண்மையான ஆடை! ஒளிபடைத்த கண்கள்! நாலரை அடிக்கும் குறைவான உயரம்! புன்முறுவல் தவழும் முகம்! இன்னுரை நல்கும் நாக்கு! தமிழ்நிலை பெற்ற நெஞ்சம் — இவர்தான் பேராசிரியர் க. வெள்ளை வாரணனார்.

பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் மாண்புயர்ந்த செங்குந்த குலத்தில், தஞ்சை மாவட்டம் திருநாகேச்சரத்தில் திரு. கந்தசாமி முதலியாருக்கும், அமிர்தம் அம்மை யாருக்கும் திருமகனாய், தமிழ் செய்த தவப்பயனாய், மிகுசைவத்துறை விளங்கவும், சித்தாந்தச் செந்நெறியே உலகமெலாம் நனிசிறக்கவும் 14—01—1917-ல் தோன்றினார்கள். திருப்பெருந்துறை தேவாரப் பாடசாலையில் பயின்று, பின்னர் தண்ணார் தமிழ் வளர்க்கும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் கற்று, தமிழ் வித்துவான் தேர்வில் முதல் வகுப்பில் முதல் மாணாக்கராகத் தேர்ச்சி பெற்றார்கள். இல்லற விளக்காகிய பொற்றடங்கண்ணி அம்மையாரை மணந்து நல்லறம் நடத்தி மேன்மை பெற்றார்கள்.

முதலில் கரந்தைப் புலவர் கல்லூரியில் விரிவுரையாளராகப் பணியாற்றிய வெள்ளை வாரணனார், பின்னர் 1943 ஆம் ஆண்டு முதல் 1979 ஆம் ஆண்டு முடிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பணிபுரிந்தார். அப்பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவ ராகவும் விளங்கினார். பின்னர் இரண்டு ஆண்டுகள் மதுரை, காமராசர் பல்கலைக் கழகத்தில் தமிழியற்புலத்தலைமை நடாத்தினார். அடுத்து இரண்டு ஆண்டுகள் தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் இலக்கியத்துறைத் தலைவராகவும் மொழிப்புல முதன்மைய ராகவும் விளங்கினார்கள்.

அவர்தம் வாழ்வே தமிழ் வாழ்வு! பாடஞ் சொல்லும் தெளிவைப் போற்றுவதா? அளவையியல் முடிபுகட்கு ஏற்ப ஆய்வு பூர்வமாகக் கருத்தினை எடுத்தியம்பும் துணிவைப் பாராட்டுவதா? கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பாய், நல்லார்க்கும், பொல்லார்க்கும் நடுநின்ற நடுவாய் விளங்கிய சான்றாண்மையை எண்ணி வியப்பதா? பிறர் சீரெல்லாம் போற்றிச் சிறுமை புறங்காக்கும் மேன்மையை எண்ணி மெச்சுவதா? செந்தமிழ்க்கும், சைவநெறிக்கும் இடர் வருங்கால் சிங்கமென ஆர்த்து எழும் பேராண்மையை எண்ணிப் பெருமிதப் படுவதா?

ஆகா! அவர் ஒரு நிறைமொழி மாந்தர். அவர் பெருமை தமிழுள்ளளவும் நின்று பொலியும்.

தில்லைத் திருக்களாஞ் செடியுடையார் திருக்கோயில் திருப்பணிக்கும், குடமுழுக்கு விழாவிற்கும் சிதம்பரம் மௌன சுவாமிகள் திருமடத்தின் ஆதீனகர்த்தர்களாகிய தவத்திரு சபாபதிச் சுவாமிகள், தவத்திரு. சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகியவர்களோடு இணைந்து அவர் உழைத்த உழைப்பு சொற்களால் அளவிடற்கரிய பெருமைமிக்கது. அம்மட்டோ! தில்லைப் பெருங்கோயில் திருக்குட முழுக்கு விழாவிற்கும், மலர் வெளியீட்டிற்கும் அவர் ஆற்றிய பணி அளப்பரியதாகும். தில்லையம்பலத்தில் திருமுறை முழங்க வேண்டும் என்ற கோரிக்கைப் போரின் வெற்றியிலும் இவர்தம் பங்கு பணி மிகுதியாகும்.

**பட்டங்கள்:**

பேராசிரியர் க. வெள்ளை வாரணனார் அவர்களின் சைவப்பணியைப் பாராட்டித் தருமையாதீனம் "திருமுறை ஆராய்ச்சிக்கலைஞர்" என்ற பட்டம் வழங்கிப் பெருமை செய்தமை இவண் நினையத் தக்கது. தமிழக அரசு 'கலைமாமணி' என்ற விருதளித்துப் பெருமை செய்ததை மறக்க முடியுமா? காஞ்சி காமகோடி பீடம் 'திருமுறை உரைமணி' என்றும், தேவார ஓதுவார்கள் சங்கம் 'சங்கநூற் பெரும்புலமைச் சான்றோர்' என்றும், மதுரை திருஞான சம்பந்தர் ஆதீனம் 'திருமுறைத் தெய்வத்தமிழ்மணி' என்றும், குன்றக்குடி ஆதீனம் 'தமிழ்ப் பெரும் புலவர்' என்றும் கரந்தைத் தமிழ்ச் சங்கம் 'செந்தமிழ்ச் சான்றோர்' என்றும் விருது வழங்கிப் பாராட்டியமை நினைந்து மகிழத்தக்கதாம். "பன்னிரு திருமுறை வரலாறு" என்ற இவரின் ஆய்வு நூலின் இரண்டாம் பாகத்திற்கும், "திருவருட்பா சிந்தனைகள்' என்ற நூலுக்கும் தமிழ் வளர்ச்சி இயக்ககம் முதற்பரிசு அளித்துச் சிறப்பித்துள்ளது

யாழ்நூல் நுனித்தெழுதி ஏழிசை காத்த விபுலானந்தர்க்கும், நாவலர் ச. சோமசுந்தர பாரதியார்க்கும் மாணாக்கராக விளங்கிய இவர் 'சங்ககாலத் தமிழ் மக்கள்' முதலிய பல நூல்களை இயற்றியுள்ளார். 'திருவருட்பயன்' முதலிய நூல்களுக்கு உரையெழுதியுள்ளார். 'பரதசங்கிரகம்' முதலிய நூல்களை ஏடுபார்த்துப் பதிப்பித்துள்ளார்.

"பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறு"

"கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர்"

"நூலறி புலவர்" 'சான்றாண்மைச் செல்வர்'

என்றெல்லாம் பாராட்டத்தக்க செங்குந்தர் குலச் செம்மல், பேராசிரியர் க. வெள்ளை வாரணனார் அவர்கள் 13—6–1988 ஆனி உத்திர தரிசன விழாத் தொடக்கமாகிய செங்குந்தர் கொடியேற்ற தினத்தன்று அம்பலவாணர் திருவடி நீழலை அடைந்தார்கள். குந்தர் குலத்துக்குப் பெருமைசேர்த்த அவர்தம் வாழ்வு வணக்கத்துக்குரிய பெருவாழ்வாகும்.

---

ஏழைகள், துன்புற்றோர், பலவீனர்கள் இவர்கள் அனைவரும் தெய்வத்தின் வடிவங்களே. இந்த ஏழைகளைப்பற்றி சிந்தியுங்கள்; இவர்களுக்குத் தொண்டு செய்யுங்கள்; அப்போது ஆண்டவன் உங்களுக்கு வழிகாட்டுவான்.

— சுவாமி விவேகானந்தர்.

வண்டமிழ் வேந்தர்

# வாரியார் சுவாமிகள்

மீனாட்சி தென்னவன், செம்பொன்னார்கோயில்.

இருபதாம் நூற்றாண்டின் அப்பரடிகள் என்று போற்றத்தக்கச் சிறப்புக்குரியவர் நம்மோடு வாழ்ந்து கொண்டிருக்கும் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் ஆவர்.

**தோற்றம்:**

நம் குந்தர் குலச் செல்வமான வாரியார் அவர்கள் 1906-ஆம் ஆண்டு, ஆகஸ்ட் திங்கள் 25-ஆம் நாள் வேலூரை அடுத்துள்ள காங்கேய நல்லூரில் சிவத்திரு மல்லையதாஸ் பாகவதர் அவர்கட்கும் திருமதி கனகவல்லி அம்மையார்க்கும் இரண்டாவது மகனாராகப் பிறந்தனர்.

**கல்வியும், பயிற்சியும்:**

வாரியார் அவர்கட்கு அவரின் தந்தையாரே எழுத்தறிவித்த இறைவன் ஆவர். இவர், தம் தந்தையாரிடமே மூன்று வயது முதல் கல்வி கற்கத் தொடங்கி இலக்கண இலக்கியங்களில் தேர்ச்சி பெற்றனர். அதுமட்டுமல்ல, இசைக் கலையிலும் ஆர்வம் கொண்டு தந்தையிடமே பயிற்சி பெற்று இன்னிசையோடு கூடிய விரிவுரையாற்றும் ஆற்றலையும் பெற்றனர்.

அமைப்பு முறையிலான பள்ளிக்கூடத்தில் பயிலாத நம் வாரியார் அவர்கள் 12-வயதிற்குள்ளாகவே பதினாயிரம் அருட்பாடல்களை மனப்பாடம் செய்து, 'நடமாடும் பல்கலைக் கழகம்' எனுமாறு விளங்குகின்றார்.

இவர் தமது 13-ஆவது வயதில் ஆனைகவுனி எனும் இடத்தில் வசித்த திரு. வரதாச்சாரியார் என்பவரிடம் வீணை மீட்டும் பயிற்சியைப் பெற்றுச் சிறந்தார்.

**திருமணம்:**

இவர் தமது 12-ஆவது வயதில் சைவ 'தீக்கை' பெற்றுக் கொண்டார். அக்கால வழக்கப்படி தமது 19-ஆவது வயதில் அமிர்தவல்லி என்னும் பெண் திருவை மணந்து கொண்டு இல்லற வாழ்வில் ஈடுபட்டார். தமது 30-ஆவது வயதில் வயலூர் முருகன்பால் பெருங் காதல் கொண்டு தமது வீட்டில் அப்பெருமானை எழுந்தருளச் செய்து "ஆத்மார்த்த பூசை"யை மேற்கொண்டார். இவர் தமது வழிபடு கடவுளாக திருமுருகனையே தொடர்ந்து வழிபட்டு வருவதால் இவர் பெயருக்கு முன்னே 'திருமுருக' எனும் அடைமொழி இயற்கையாகவே இடம் பெற்று விட்டது எனலாம்.

**இன்னிசைச் சொற்பொழிவு:**

இவரது இன்னிசைச் சொற்பொழிவு "கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப" அமையும் சிறப்புடையது. இடையிடையே நகைச்சுவைகள் நிறைந்து இன்பம் பயப்பது.

இவரது இன்னிசை விரிவுரையைக் கேட்க ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் ஆயிரக் கணக்கில் கூடுவர். அனைவர்க்கும் ஏற்ப உரை ஆற்றும் 'கடவுட் கொடை' பெற்றவர். இவர் பேச்சின் இடையே அருணகிரியாரின் திருப்புகழ் அடிக்கடி வந்து நடனமிடும்; கந்தபுராணம், திருவிளையாடல் புராணம், பெரியபுராணம் ஆகியவற்றின் அருட்பாடல்கள் தலை காட்டும்; திருக்குறளும், நாலடியாரும், ஔவைப்பாடல்களும் ஓடி வந்து குரல் கொடுக்கும். இவர் மேடையில் அமர்ந்து பேசத் தொடங்கியவுடன் எங்கிருந்து தான் இத்தகைய ஆற்றலைப் பெற்றாரோ எனும்படியாக கடல்மடை திறந்தாற்போல — சொற்களும், பாட்டுக்களும், கதைகளும் வந்து வந்து கேட்போரை மயங்க வைக்கும்; வியக்க வைக்கும்.

**நூலாசிரியர் :**

இவர் சிறந்த விரிவுரையாளர் மட்டுமல்ல; இசைவாணருமாவார். இவ்விரண்டு திறமைகளோடு மிகச்சிறந்த எழுத்தாற்றலையும் பெற்ற அருட்செல்வர் இவர் என்றால் அது மிகையன்று. ஆம்; இவர் 'திருப்புகழமிர்தம்' எனும் திங்கள் இதழை நடத்தி வருகின்றார். அவ்வப்போது அதில் பல கட்டுரைகள் எழுதி வருகின்றார்; விநாயகர் பற்றியும் முருகன் பற்றியும் சிறந்த ஆய்வு நூல்கள் எழுதியுள்ளார். அருணகிரியாரின் கந்தரனுபூதி, கந்தரலங்காரம் ஆகியவற்றுக்குத் தெளிவான உரை வகுத்துள்ளார். திருப்புகழ்ப் பாடல்கள் அனைத்தையும் தொகுத்து அனைவர்க்கும் பயன்படும்படியாக மலிவு விலைப்பதிப்பாக வெளியிட்டுள்ளார். அறுபடை வீடுகள் பற்றி அருணகிரியார் பாடியுள்ள திருப்புகழ் பாக்களை தலமுறையாகத் தொகுத்து மிகச் சிறந்த முறையில் விரிவுரை எழுதியுள்ளார். இவர் உரைநடை மட்டுமல்லாமல் இலக்கண மரபு பிழையாத மரபுப் பாடல்கள் பலவும் இயற்றியுள்ளார். இவரது எழுத்துத் தொண்டை விரிக்கின் இன்னும் பெருகும் எனலாம்.

**நிலையான பணிகள்:**

வாரியார் அவர்கள் பேச்சுப் பணி, எழுத்துப் பணி மட்டுமல்ல; இன்னும் பல அருட் பணிகளையும் உள்ளன்போடு செய்து வருகின்றார்கள். இத்தமிழ் நாட்டில் உள்ள பலப்பல திருக்கோயில்களின் திருப்பணிகளை ஏற்று நிறைவு செய்து குடமுழுக்குகளைச் செய்து திருப் பணிச் செல்வராக விளங்குகின்றார்.

இவர் தாம்பிறந்த காங்கேயநல்லூரிலும், திருப்பராயத்துறை இராமகிருஷ்ணா குடிலுக்கும் கல்விப் பணிகள் பல ஆற்றியுள்ளார்.

இவர்தம் விரிவுரைப் பணியை நம்மாநிலத்தில் மட்டுமல்ல; பிறமாநிலங்களிலும் செய்தவர். இந்தியாவில் மட்டுமல்ல, ஈழ நாட்டிலும், மலேயா, சிங்கப்பூர், பர்மா, ஆப்பிரிக்கா, அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்சு முதலிய வெளிநாடுகளிலும் செய்து புகழ் பெற்றவர்.

**பெற்ற சிறப்புகள்:**

வாரியார் சுவாமிகளின் பணிகளைப் பாராட்டி அவ்வப்போது நல்லார் பலர் கூடி பட்டங்கள் வழங்கிச் சிறப்புகள் செய்துள்ளனர்.

மதுரையாதீனம் 'அருள்மொழி அரசு' என்று பட்டம் சூட்டி மகிழ்ந்துள்ளது. தருமையாதீனம் 'அமுதமொழிக் கொண்டல்' என்று பாராட்டிப் பெருமை பெற்றது; தமிழக அரசு 'கலை மாமணி' எனும் விருது வழங்கி தன் கடமையைச் செய்துள்ளது; அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 'டாக்டர்' எனும் பட்டத்தை வழங்கி சிறப்பு கொண்டது. இவ்விருதுகள்

எல்லாம் வாரியார் அவர்களை நாடிவந்தனவே தவிர — இவரே தேடிச்சென்று பெற்றவை யல்ல என்பதுவே வாரியாருக்குள்ள மிகச் சிறப்பு எனலாம்.

**முடிவுரை:**

வாரியார் சுவாமிகள் ஓர் ஆத்திகர்; சைவ சமயத்தைப் போற்றி வளர்க்கும் ஒரு சமயப்பெரியார். எனினும் பிற சமயத்தாரும், நாத்திகரும் கூடப் போற்றி வணங்கும் பண்பாளர். தமிழ்நாட்டில் இவரது திருவடிபடாத ஊர்கள் இல்லை; இவர் சென்று சொற்பொழிவாற்றாத கோயில்கள், சமய மன்றங்கள் இல்லை. இவர்க்குக் கடிதம் எழுதினால், அப்படி எழுதுவோர்க்கு உடனுக்குடன் தாமே தம் கைப்பட கடிதம் எழுதும் வழக்கமுடையவர். இவர் தமக்கு வரும் திருமண அழைப்பிதழ்களைக் கண்டு உடனே மணமக்களை வாழ்த்தி 'வெண்பா' ஒன்றை எழுதியனுப்பி மணமக்களை மகிழ்விக்கும் நிறை குணம் உடையவர். இவரால் மணிவிழா வாழ்த்துக்கள் பெற்ற பெரியார்கள் பல்லாயிரவர்; சான்றுகள் பெற்றப் புலவர்களோ கணக்கில் அடங்கார்.

இப்படிப்பட்ட திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் அவர்கள் நம்செங்குந்த மரபினர் என்பதிலே நமக்கோர் பெருமையுண்டு; மகிழ்ச்சியுண்டு. அதனால்தான் இவரை நம் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் தம் புரவலர்களுள் ஒருவராக ஏற்று இவர் தம் சமுதாயத் தொண்டைச் சிறப்பித்துள்ளது.

வாரியார் சுவாமிகள் அவர்கள் நூறாண்டின் மேலும் வாழ நாமனைவரும் திருமுருகன் திருத்தாள்களை இறைஞ்சுவோமாக; அவர் வழிநின்று தொண்டு செய்வோமாக.


*With best compliments from:*





**M/s JAYARAM FURNISHERS.**

**Quality Furniture Manufacturers**

Show Room 573, Anna Salai.



*14-16. Kamaraj Bhavan, Teynampet.*

MADRAS - 600 006.

செங்குந்தர் குலத் தந்தை

# வள்ளல் சபாபதியார்

திருவாரூர் நாகப்ப சபாபதி செங்குந்தர் அவர்கள் வியஆண்டு சித்திரைத் திங்கள் 18ஆம் நாள் (1886) தோன்றினார். தம் இளம் பருவம் தொட்டே கொழும்பு நகரோடு கைத்தறித் துணி வாணிபம் பல ஆண்டுகளாகத் திறமையுடன் நடத்தி வந்த தம் தந்தையாருக்குப் பெருந்துணையாயிருந்து வாணிப நுணுக்கங்களையெல்லாம் நன்கு அறிந்து கொண்டார்.

மஞ்சக்கொல்லை, திருமலைராயன் பட்டினம், காரைக்கால் ஆகிய ஊர்களைச் சேர்ந்த நம் சமூக வியாபாரிகள் கொழும்பில் கைத்தறித்துணி வாணிபம் நடத்தி வந்தார்கள். நம்மவர்களுக்குள்ளேயே நிலவிய போட்டியையும் அதனால் விளைந்த மனக்கசப்பையும் பொருள் விரயத்தையும் கண்ட இளைஞர் சபாபதியார், தம்மையும் தம் சமூகத்தவரையும் எதிர்நோக்கி நின்ற பிரச்சினையைச் சந்தித்த முறையே தனிச்சிறப்பு வாய்ந்தது.

1945-ஆம் ஆண்டு மார்ச்சு 17-ஆம் நாளன்று கூறைநாட்டிலே தஞ்சை மாவட்ட செங்குந்தர்களின் முதல் மாநாடு சீரும் சிறப்புமாக நடைபெற்றது. "செங்குந்தர்களுக்குள் கூட்டுறவு வேண்டுமானால். ஒரு கிராமத்தார்களோ, பல கிராமத்தார்களோ ஒன்று கூடி, கூட்டாகப் பெரும்பொருள் போட்டு வியாபாரத்தைத் துவக்க வேண்டும். அவ்வியாபாரத்தை எத்துறையிலாயினும் பயன்படுத்திக் கொண்டு, எனக்கென்ன உனக்கென்ன என்ற எண்ணத்தை அறவே ஒழித்து, அவரவர்களும் தங்கள் தங்களதாகக் கருதி உழைத்துப் பெரும் பொருளைத் தேட வேண்டும். இதற்கு எத்தனையோ முட்டுக் கட்டைகள் ஏற்பட்டு மனச் சோர்வடையும்படி நேரிடும் அக்காலத்தில் தளராத ஊக்கத்துடன் கருமமே கண்ணாக உழைக்க வேண்டும். அவ்வாறு நடந்து கொள்வீர்களானால் பெரும் பொருள் திரட்டலாம்'' என அம்மாநாட்டில் வள்ளல் சபாபதியார் பேசினார்.

இந்த இனிய பேச்சுக்கு ஏற்ப 1926-இல் ஆறுகடைகளை ஒன்றாக இணைத்து மதராஸ் பளயகாட் கம்பெனி என்ற வாணிப நிலையத்தை உருவாக்கினார். பின்னர் 1930-இல் பதினாறு கூட்டாளிகளுடன் சேர்ந்து மதராஸ் பளயகாட் கம்பெனியைப் பெரிய அளவில் உருவாக்கினார். இத்துடன் கொழும்பு நகரில் கொட்டைப் பாக்கு வாணிபம் செய்துவந்த மூன்று கம்பெனிகள் இணைந்து 'கொழும்பு கொட்டைப்பாக்கு கம்பெனி' என்ற பெரியதொரு கம்பெனி உருவாகுவதற்கு மூலகாரணமாயிருந்தார்.

வட ஆர்க்காடு மாவட்டத்தில் திருவத்திபுரத்தில் நடைபெற்ற தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் ஐந்தாவது மாநில மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட முடிவுக் கிணங்க, பல ஊர்களிலும் உள்ள செங்குந்தர்களின் பொருளாதார நிலையை உயர்த்த வேண்டும் என்ற நல்லெண்ணத்தால் பெரும்பாலும் செங்குந்தர்களையே பங்குதாரர்களாகச் சேர்த்து, குடியேற்றத்தில் 'திருமகள் நூல் ஆலை' யைத் துவக்குவதற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்தார் வள்ளல் சபாபதியார்.

சபாபதியாரின் அறச் செயல்கள் பலப்பல. முசுகுந்தப் பேரரசருக்கும் செங்குந்த சமூகத்தவருக்குமுள்ள தொடர்பை நன்கு அறிந்திருந்த இவர் திருவாரூர்ப் பங்குனி உத்திரப் பெருவிழாவின் போதும், பக்த காட்சித் திருவிழாவின் போதும் நடைபெறும் முசுகுந்தர் ஆயிரம் போற்றி வழிபாடும், புரட்டாசி பௌர்ணமியில் நடைபெறும் முசுகுந்தர் ஆயிரம் போற்றி வழிபாடும் என்றென்றும் ஒழுங்காக நடைபெறுவதற்கு ஏதுவாக நான்கு ஏக்கர் நஞ்சை நிலத்தையும், இரண்டு வீடுகளையும் முதற் பொருளாக எழுதி வைத்திருக்கிறார்.

சபாபதியார் தம் தொழிலின் காரணமாகப் பல ஊர்களுக்கும் சென்றபோதெல்லாம், தம் சமூக ஏழை நெசவாளர்களையும் அவர்களின் வறிய வாழ்க்கையையும், பலப்பல கிராமங்களில் கட்சிப் பூசல்களின் காரணமாக ஏற்பட்டிருந்த பிளவுகளையும் கண்டு மனம் நொந்தார். சோழர்கள் ஆட்சியில் சீரும் சிறப்புடனும் விளங்கிய கைக்கோளப் பெரும் படையார் சோழர்களின் வீழ்ச்சிக்குப் பிறகு கலைந்து தமிழகமெங்கும் பகுதிபகுதியாகப் பிரிந்து சென்று குடியேறி நெசவுத் தொழிலை மேற்கொண்டு வாழ்ந்தனர். நாளடைவில் ஒரு பகுதிக்கும் மற்றொரு பகுதிக்கும் தொடர்பு அற்றுப்போய் வேறுபாடுகள் மலிந்தன.

இந்த அவல நிலையை மாற்றிச் செங்குந்த சமூகத்தவரிடையே மறுமலர்ச்சியும் புத்துணர்ச்சியும் ஏற்படச் செய்தவர் வள்ளல் சபாபதியார். 1927-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 29-ஆம் நாள் 'தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்' என்ற மாபெரும் ஸ்தாபனம் ஒன்றை நிறுவி, தம் உடல் பொருள் ஆவி ஆகிய அனைத்தையும் அதன் வளர்ச்சிக்குப் பயன்படுத்தி, நாடெங்கும் சிதறுண்டு கிடந்த எழுபத்திரண்டு கிளைநாட்டுச் செங்குந்தர்களையும் தாங்கள் பழம் பெருமை வாய்ந்த ஒரு பாரம்பரியத்தின் வாரிசுகள் என்பதை உணரச் செய்தவர் வள்ளல் சபாபதியார்.

தேனை மறந்துவிட்ட வண்டும், வானை மறந்து விட்ட பயிரும், ஒளிச்சிறப்பை மறந்து விட்ட பூவும் இந்த வையகம் முழுவதும் இல்லாததைப் போல வள்ளல் சபாபதியாரின் அரும்பெரும் தொண்டுகளை, நன்றி மறவாத செங்குந்த சமுதாயம் என்றென்றும் எண்ணி எண்ணி இறும்பூது எய்துவதுடன் அவர் காட்டிய நன்னெறியில் இனிதே நடந்து நலம்பல காணும் என்பது உறுதி. வள்ளல் சபாபதியாரின் கனவுகள் எல்லாம் நனவாக நாளெல்லாம் உழைப்போமாக!


With best compliments from:

R.C. 720683

Phone: Off: 74390
Resi: 74750



VIJAY PRINTS,
CLOTH MERCHANTS.

77, Chokkanatha Street, Post Box No. 620, ERODE.

தியாகச் செம்மல்

# மன்னைப் பெருமகனார்

R. விசுவநாதன், தினமலர் நிருபர் - மன்னார்குடி.

அஞ்சாமை, அறிவு நுட்பம், பிறர்க்குதவும் பெருந்தன்மை, தம்மின் வலியாருடன் மோதி வெற்றி பெறுதல், தம்மின் எளியாரை இகழாதிருத்தல், சான்றாண்மை, சமயோசிதம் வீரம் ஆகிய உயர் தனிப்பண்புகளின் மொத்த உருவமாகத் திகழ்ந்தவர்தான் மன்னைப் பெரியவர் அமரர் பெரி. ராம. நடராஜ செங்குந்தர் ஆவார்.

அமரர் நடராஜ செங்குந்தர் அவர்கள் 28—12—1887–இல் மன்னார்குடியில் இராமலிங்க செங்குந்தர்-விநாயகத்தம்மாள் தம்பதியரின் மூன்றாவது மகனாய்ப் பிறந்தார்.

அக்கால வழக்கப்படி இவர் தம் பதினாறாம் வயதில் திருமணம் செய்து கொண்டார். சில ஆண்டுகளில் மனைவியை இழந்தார். எனினும் மறுமணம் செய்து கொள்வதில் நாட்டம் கொள்ளாமல் நாட்டு மருந்துகள் தயாரிக்கும் பணியில் ஈடுபட்டு நாட்டு வைத்திய ராகவே ஆகிவிட்டார்.

பின்னர் இவரது தமையனார் திரு. பழநியாண்டி செங்குந்தர் அவர்களின் வற்புறுத்தல் காரணமாக இரண்டாவது முறை திருமணம் செய்து கொண்டு இல்வாழ்க்கைப் பயணத்தைத் தொடர்ந்தார்.

அக்காலத்தில் தஞ்சை மாவட்ட காங்கிரஸ் இயக்கத்தில் முக்கிய புள்ளியாக விளங்கிய, காலஞ்சென்ற குன்னியூர் கே. எஸ். சாம்பசிவ அய்யரின் தந்தையாருடன் நட்புக்கொண்ட நடராஜ செங்குந்தர், பின்னர் காங்கிரஸ் இயக்கத்தில் முனைப்புடன் ஈடுபட்டு உழைக்கலானார்.

மன்னை நகர்மன்ற உறுப்பினராக 30 ஆண்டுக்காலமும், நகர்மன்றத் தலைவராக 7 ஆண்டுக்காலமும் பொறுப்பு வகித்து பல அரும்பணிகள் ஆற்றியுள்ளார்.

ஆரூர் வள்ளல் தி. நா. சபாபதி செங்குந்தர் அவர்களுடன் தொடர்புகொண்டு அவரது அறிவுரைப்படி தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம் 5—6—1944 இல் கூறைநாட்டில் தோற்றுவித்து இச் சங்கத்தின் முதல் தலைவராகப் பொறுப்பேற்று வெற்றி கரமாக நடத்திவந்தார் நமது நடராஜ செங்குந்தர்.

''செய்வன திருந்தச் செய்'' என்ற சொற்றொடருக்கு இலக்கணமாகத் திகழ்ந்தார். தொண்டு என்பது வீட்டுத் தொண்டிலிருந்து துவங்க வேண்டும் என்பார் தமிழ்த் தென்றல் திரு. வி. க.

அதுபோல தான் சார்ந்த செங்குந்தர் சமூகம் கல்வி மற்றும் உத்தியோக வாய்ப்பு போன்ற துறைகளில் நல்வாய்ப்பு பெறவேண்டும் என்ற பெருவிழைவோடு உழைத்த நமது மன்னைப் பெரியவர், உள்ளூரில் இருக்கும் செங்குந்த பெருமக்களின் நாட்டாண்மைக் குழுத் தலைவராக இருந்து சீரிய பணிகள் ஆற்றியுள்ளார்.

தம்முடைய ஊரில் நம்மவருக்குச் சொந்தமான, குளம், தோட்டம் முதலானவை வேறு ஒரு கோயிலுக்குச் சொந்தமானது என்று சிலர் உரிமை பாராட்டினார்கள். அப்போது நம்குலப் பெரியவரான நடராஜ செங்குந்தர் அவர்கள் தம் சொந்த பொருட் செலவில் பெருமுயற்சி மேற்கொண்டு சென்னை உயர்நீதி மன்றம் வரை சென்று வழக்காடி உரிமையை நிலை நாட்டி நம்மவர்க்காக உழைத்திருக்கிறார்.

300 ஆண்டுகளுக்கு முன் சித்தி அடைந்த மகான் குட்டுக்கோல் இராமலிங்கரின் சமாதியைப் புதுப்பித்து அக்கோயிலுக்குக் குடமுழுக்கு நடத்தினார். அங்குள்ள குளம் மற்றும் மலர்த் தோட்டத்தைச் சீர்திருத்தியும் சிறப்புச் செய்தார்.

செங்குந்தர் குலத்துக்குச் சொந்தமான குளத்தை ஆழப்படுத்தி 40 அடி அகலப்படுத்தி படித்துறைகள் கட்டி, கரைகளில் தென்னை பயிரிட்டு மிக்க பொலிவுறச் செய்தார். நகர மக்களுக்குப் பெரிதும் பயன் தரும் குளமாக இது விளங்குகிறது. தெருவில் தம் சொந்தச் செலவில் பிள்ளையார் கோயில் கட்டி நித்யபூஜையும் நடத்திவரச் செய்துள்ளார்.

''அன்பர் பணி செய்ய எனை
ஆளாக்கி விட்டு விட்டால்
இன்பநிலை தானே வந்து
எய்தும் பராபரமே''

என்றார் தாயுமானவர்.

நகரில் உள்ள சாதாரண ஏழையிலிருந்து பெரும் செல்வந்தர் மற்றும் பெருமக்கள் பலருக்கும் நம் நடராஜ செங்குந்தர் பண உதவி லேவாதேவி மூலம் செய்துள்ளார். மிகக் குறைந்த வட்டி மட்டுமே வாங்கியிருக்கிறார்.

கதவின் வழியாக அநியாயமாக வரும் செல்வம், ஜன்னல்களின் வழியாக வெளியே செல்கிறது என்பது பழைய எகிப்திய பழமொழி. இதை நம் பெரியவர் உணர்ந்ததாலோ என்னவோ லேவா தேவி மூலம் அதிகம் பொருள் ஈட்டுவதில் அவர் நாட்டம் கொள்ளவே இல்லை.

மகாத்மா காந்தி அடிகளின் கொள்கைகளில் ஈடுபாடு கொண்டு 50 ஆண்டுகளுக்கு முன்னரே தீண்டாமை ஒழிப்பில் ஈடுபட்டார் நம் பெரியவர். அரிசனங்கள் வாழும் சேரிப் பகுதியில் தம் சொந்த மனைகளை எல்லாம் விட்டுக் கொடுத்துள்ளார். அங்குப் பல புதிய தெருக்களை அமைத்துக் கொடுத்துள்ளார்.

பெரும் சண்டை சச்சரவுகள் வழக்கு வியாச்சியங்கள் இவற்றை எல்லாம் அவர் மிக எளிதில் தீர்த்து வைத்து விடுவார். ஒரு பெரிய தீர்க்கதரிசிக்கு உள்ள முன்யோசனை சமயோசித அறிவு எல்லாம் இவரிடம் உண்டு.

இன்று அவர் அமரர் ஆகிவிட்டாலும் சிறந்த பண்பும் ''செல்வர்க்கு அழகு செழுங் கிளைத் தாங்குதல்'' என்ற நெறிக்கு இணங்கத் திரு. ஆர்.என். சந்தானராஜகோபாலன் என்ற அருமையான புதல்வரைத் தமது வாரிசாக விட்டுச் சென்றுள்ளார்.

''மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்எனுஞ் சொல்''

என்ற குறட்பாவின் பொருளுக்கு இலக்கியமாகத் திகழ்ந்து, இன்று தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கத்தின் மூன்றாவது தலைவராக இருந்து தந்தை வழியில் அரும்பணி ஆற்றி வருகிறார். திரு. ஆர்.என். சந்தானராஜகோபாலன் அவர்கள்.

ஒட்டக்கூத்தர் பரம்பரையில் வந்த செங்குந்தர் குலத்தின் வீரம்மிக்க பெருமகனார் வரிசையில் அமரர் பி.ஆர்.ஆர்.எம். நடராஜ செங்குந்தர் அவர்களுக்கு என்றும் அழியாத இடம் உண்டு.






தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க 16ஆவது மாநில மாநாடு
வெற்றிபெற வாழ்த்துகிறோம்.

**தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்**

தாரமங்கலம் கிளை - 636 502. சேலம் மாவட்டம் பதிவு எண் 9/38

**பி.மே.வை. செல்லப்ப செங்குந்தர்,**
தலைவர்.

**இளங்கவிமணி சண்முக கந்தசாமி,**
செயலாளர்.

K.A.P. **தங்கவேல் செங்குந்தர்,**
பொருளாளர்.

V.A. **கந்தசாமி செங்குந்தர்,**
துணைத்தலைவர்.

S.T. **நாகராஜன்,**
துணைச்செயலாளர்.

T.A. **இராதாகிருஷ்ணன்,** தலைவர்.
தாரமங்கலம் செங்குந்தர் இளைஞர் பேரவை.





தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் 16ஆவது மாநில மாநாடு
வெற்றிபெற வாழ்த்துக்கள்.

**செங்குந்தமித்திரன் வளர்ச்சிபெற ஆயுள் சந்தாதாரராகி ஆதரவு தாரீர்.**

தங்கள் அன்புள்ள,
**K.S. காவேரி செங்குந்தர்,**

**மீனாட்சி ஏஜன்சீஸ்,**

227, அம்மாப்பேட்டை மெயின் ரோடு, சேலம் - 636 001.




நல்வாழ்த்துக்கள்



# கந்தகிரி நூற்பாலை லிமிடெட்

## உடையாப்பட்டி — சேலம் 636 140.

தமிழ்நாடு.

தொலைபேசி எண்: 65111, 68161 டெலக்ஸ்: 0450-254 SS.ML.IN

தந்தி: ''சூப்பர் ஸ்பின்''



| | | |
|---|---|---|
| சேர்மன் | : | திரு. எஸ்.பி. ரத்தினம் |
| நிர்வாக இயக்குனர் | : | திரு. கே.ஆர். மாணிக்க முதலியார் |
| இணை நிர்வாக இயக்குனர் | : | திரு. எஸ்.பி. சம்பந்தம் |
| இணை நிர்வாக இயக்குனர் | : | திரு. எஸ்.பி. ராஜேந்திரன், பி.காம் |
| அங்கீகரிக்கப்பட்ட கதிர்கள் | : | 25000 கதிர்கள் |
| நிறுவப்பட்ட கதிர்கள் | : | 24524 கதிர்கள் |
| டபுளிங் கதிர்கள் | : | 8704 கதிர்கள் |

20ல் விருந்து 80 ல்/வரை, 2/20ல் விருந்து 2/80ல் வரை

**ஹாங்க் & கோன் மிகத் திடமான பாவு நூல் தயார்செய்கிறோம்.**

தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கத்தை நிறுவியவரும்,
தஞ்சை ஜில்லா செங்குந்தர் கல்வி நிதியின் பரம்பரை
உறுப்பினரும், முன்னாள் தலைவருமாகிய



வள்ளல் திரு. T.N. சபாபதி முதலியார்
மடப்புரம் - திருவாரூர்.
தலைமைச் சங்க மூன்றாவது தலைவர் - 23—2—1936 - 24—9—1953




நம்குல கவிச்சக்ரவர்த்தி

**ஒட்டக்கூத்தர்**

✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲

## கைத்தறிக் காவலர்

# பத்மஸ்ரீ நாச்சிமுத்து

✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲

P. செல்வமுத்துக்குமரசாமி, B.Sc., சென்னிமலை.

பெரியார் மாவட்டம் சென்னிமலையில் திரு. மு. பழனியப்ப செங்குந்தர் அவர்களின் ஒரே புதல்வராகத் தோன்றிய நமது பத்மஸ்ரீ அவர்கள் செல்லப் பிள்ளையாக வளர்ந்து அப்பகுதி செங்குந்தர் குலத்தில் முதலாவது அட்வகேட் பட்டம் பெற்றவரானார்கள். பட்டம் பெற்றவுடன் சில ஆண்டுகளே வக்கீலாகத் தொழில் நடத்தினார்கள். கல்வியாளர்களிடமும் வணிகப் பெருமக்களுடனும் தொடர்பு கொண்ட இவர் சிறந்த குண நலன்களுடனும் உயர் பண்பாடுகளுடனும் பொதுவாழ்வில் ஈடுபட்டார்கள்.

அன்று சென்னை மாநில நெசவாளர் கூட்டுறவு சங்கத் தலைவர் கோவை திவான் பகதூர் சி.எஸ். இரத்தின சபாபதி முதலியார் நம் தலைவர் அவர்களை கூட்டுறவுத் துறையில் ஈடுபடுத்த விரும்பி இவரைத் தலைவராகக் கொண்டு சென்னிமலை கூட்டுறவு நெசவாளர் சங்கத்தை 1941-இல் துவக்கி வைத்தார். இப்பதவி இவர் ஆயுட்காலம்வரை இருந்தது நாம் அறிந்த ஒன்றாகும். தொடர்ந்து இவரது புதல்வர் திரு. எம்.பி.என். ஜெகநாத செங்குந்தர் பி.இ., அவர்களை நெசவாளர் கூட்டுறவு சங்கத்தினர் ஏகமனதாக சென்டெக்ஸ் நிறுவனத்தின் தலைவராகத் தேர்ந்தெடுத்துள்ளார்கள் என்பது நாம் மகிழ்ச்சியடையும் செய்தியாகும். பல நெசவாளர் கூட்டுறவு சங்கங்கள் நஷ்டமடைந்தும் சில தேக்க நிலையிலும் இருந்ததை உணர்ந்த இவர் 1952 முதல் படுக்கை விரிப்பு, தலையணை உறைகள், வண்ணமிகு திரைச்சீலைகள் முதலிய புதிய ரகங்களை உற்பத்தி செய்யத் தொடங்கி நெசவாளர்கள் வளம்பெற வாழ்நாள் முழுவதும் செயலாற்றி சென்டெக்ஸ் என்ற வியாபாரக் குறியுடன் உயர்தரக் கைத்தறித் துணிகளை உலகெங்கிலும் ஒளிவிட்டுப் பிரகாசிக்கச் செய்தார்கள். **கைத்தறிக் காவலர்** என்ற பட்டம் பெற்ற பத்மஸ்ரீ அவர்கள் நெசவாளர்களுக்குக் குடியிருப்பு நகரை நல்ல முறையில் தோற்றுவித்து அது இன்றும் எம்.பி. நாச்சிமுத்து நகர் என்ற பெயரில் சிறந்து விளங்குகிறது. அரசியலில் பதவி வகிக்கவில்லை என்றாலும் நம் நாட்டின் ஜனாதிபதிகளும், பிரதமர்களும், மாநில முதலமைச்சர்களும், அமைச்சர்களும் அரசியல் தலைவர்களும் இவருடன் நெருக்கமான அன்புத் தொடர்பு கொண்டிருந்தார்கள். கைத்தறித் துறையில் அரிய பல கருத்துக்களை அரசுக்கு வழங்கும் அறிஞராய் விளங்கினார்கள்.

கல்வித் துறையில் குமரப்பா செங்குந்தர் உயர்நிலைப் பள்ளியை நிறுவி அப்பள்ளியின் தாளாளராகவும் சென்னிமலை செங்குந்தர் கல்விக் கழகத்தில் பங்கு பெற்றும் கல்வித் தொண்டு ஆற்றினார்கள்.

நமது சமூக இயக்கத்தில் பற்று கொண்டு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தில் செயலாளராகவும், உப தலைவராகவும், தலைவராகவும் செயலாற்றிச் சிறப்படைந்தார்கள். சென்னையில் வள்ளல் சபாபதி செங்குந்தர் நினைவாகக் கட்டத் தொடங்கி முற்றுப் பெறாமல் இருந்த கட்டிடத்தைத் தமது முயற்சியில் கட்டத் தொடங்கிச் சீர்பெறச் செய்து அவ்வளாகத்தில் வள்ளல் சபாபதி மெட்ரிக்குலேஷன் ஆங்கிலப் பள்ளியைத் தனது சீரிய தலைமையில் தொடங்கி வைத்தார்கள். இன்று அஃது சென்னை சேத்துப்பட்டு ஆரிங்டன் சாலையில் கௌரவ தாளாளர் திரு. சி.கே. குமரசாமி செங்குந்தர், M.A., அவர்கள் முயற்சியில் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

சென்டெக்ஸ் நிறுவனத்தின் தலைவர் பொறுப்புடன் முன்பு ஆந்திரம், கேரளம், தமிழ்நாடு மூன்றும் சேர்ந்திருந்த சென்னை மாநில நெசவாளர் கூட்டுறவு சங்கத்தின் துணைத் தலைவராகவும் பின்னர் தனித்து இயங்கிவரும் தமிழ்நாடு நெசவாளர் கூட்டுறவு சங்கத்தின் (கோ ஆப்டெக்ஸ்) தலைவராகவும் பொறுப்பேற்றுத் தமிழக நெசவாளர் சமுதாயம் பெரிதும் நலம்பெற அரும்பணி ஆற்றினார்கள். அகில இந்திய கைத்தறி நிறுவனத்தில் துணைத் தலைவராகப் பொறுப்பேற்றுக் கைத்தறித் தொழிலுக்குப் பல்வேறு வகை உதவிகளை மத்திய அரசிலிருந்து பெறுதற்கு உறுதுணை புரிந்தார்கள். அவரது இடையறாத தொண்டினால் இன்று கைத்தறி நெசவாளர்கள் ஓரளவு வாழ்க்கை நடத்துகிறார்கள் என்பதில் ஐயமில்லை.

கைத்தறித் துணிகளுக்கு அயல் நாடுகளில் சிறந்த விற்பனைச் சந்தைகளைப் பெறுதற்கு தூரகிழக்கு நாடுகளுக்கும், ஐரோப்பா, ஆப்பிரிக்கா, அமெரிக்கா முதலிய நாடுகளுக்கும் சென்ற தூது கோஷ்டிகளுக்குத் தலைமை தாங்கிச் சென்று நிறைந்த வர்த்தகத் தொடர்புகளை மேற்கொள்ளச் செய்தார்கள். இதனால் பல ஊர்களில் வரவேற்றுக் கைத்தறித் தந்தை என்றும், கைத்தறிக் காவலர் என்றும் போற்றிப் பாராட்டியுள்ளார்கள். இத்தகைய சிறப்புமிக்க நமது பத்மஸ்ரீ அவர்களை அமரர்கள் நேருஜி, ராஜாஜி, பெரியார், அண்ணாதுரை, ஜீவா, பி.டி. ராஜன் முதலிய சர்வ கட்சித் தலைவர்களும், ம.பொ.சி., டாக்டர் ராதாகிருஷ்ணன், மைசூர் மகாராஜா, வி.வி. கிரி, சி. சுப்பிரமணியம், சோமப்பா, டாக்டர் பி. நடேசன், ஜி டி. நாயுடு முதலானோரும் பாராட்டியுள்ளனர். இன்றைய ஜனாதிபதி ஆர். வெங்கட்ராமன் அவர்களுடன் உற்ற நண்பராகப் பழகிய சிறப்பு பெற்றிருந்தார்கள்.

'தோன்றில் புகழொடு தோன்றுக' எனும் பொய்யாமொழிக்கேற்பத் தோன்றி வாழ்நாள் முழுதும் கைத்தறி நெசவாளர்களின் சமுதாய, கல்வி முன்னேற்றத்திற்கும், தாம் பிறந்த செங்குந்தர் சமுதாயம் எல்லா சமுதாயங்களுடன் சரிநிகர் சமமாகப் பொருளாதாரம், கல்வி, அரசியலில் முன்னேற்றம் பெறவும் பணியாற்றி அமரரான நம் தலைவர் பத்மஸ்ரீ எம்.பி. நாச்சிமுத்து செங்குந்தர் அவர்களின் பெயரும் புகழும் நமது நெஞ்சிருக்கும்வரை நினைவிருக்கும் என நிறைவு செய்கிறோம்.

---

விரிந்த உள்ளம் படைத்தவர்கள் தொலைதூரத்தில் இருப்பவர்களையும் அருகே இணைத்துக் கொண்டு அன்பு செலுத்த முடியும். — மாக்சிகம் கார்க்கி

# பத்மஸ்ரீ M. P. நாச்சிமுத்து B.A., B.L.

## வாழ்க்கைக் குறிப்புகள்

—o—

பிறந்த நாள் : 28—6—1913.

பெற்ற சிறப்புகளும், வகித்த பதவிகளும்:

1) 2—4—1983 ல் டெல்லியில் நடைபெற்ற சிறப்பு விழாவில் பாரத குடியரசு தலைவர் அவர்களால் கூட்டுறவு துறையிலும் கைத்தறி நெசவாளர்களுக்கும், ஆற்றிய தொண்டிற்காக பத்மஸ்ரீ பட்டம் வழங்கப் பெற்றது.
2) 5—5—1980 சென்னையில் நடைபெற்ற அகில இந்திய கைத்தறி விழாவில் சென்னிமலை நெசவாளர் கூட்டுறவு சங்கத்தில் 25 ஆண்டுகள் தொடர்ந்து தலைவராக இருந்து பணியாற்றியதை சிறப்பித்து கேடயம் வழங்கப்பட்டது.
3) 15—11—82 சென்னையில் நடைபெற்ற கூட்டுறவு வார விழாவில் தமிழ்நாடு கூட்டுறவு யூனியன் கூட்டுறவு சங்கங்களின் 1980—81-ல் தமிழ்நாடு முழுமைக்கும் சிறந்த தலைவருக்கான கேடயம் வழங்கப் பட்டது.
4) கைத்தறி துறையில் ஆற்றிய சிறப்புப் பணிகளுக்காக ஐதராபாத்தில் 19—12—81-ல் தங்கப் பதக்கமும் 23—5—82-ல் சென்னையில் தங்க பதக்கமும் 9—4—83-ல் பம்பாயில் வைர பதக்கமும் Institute of self defence and National character (Academy) Delhi அவர்களால் வழங்கப்பட்டது.
5) தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கத்தில் வகித்த பதவிகள்:
   1. உறுப்பினர் : 1942 முதல் 1950.
   2. துணைத் தலைவர் : 1950 முதல் 1952.
   3. தலைவர் : 1952 முதல் 1969.
6) தென்னிந்திய கூட்டுறவு நூற்பாலைகளின் சேர்மனாக 1953 முதல் 1969 வரை.
7) அகில இந்திய கைத்தறி வாரிய உறுப்பினர் 1953 முதல் 1985 வரை.
8) இந்திய வங்கியின் இயக்குனராக 1977 முதல் 1982.
9) இந்திய அரசு நியமித்த குழுவில் கைத்தறி மற்றும் விசைத்தறி விசாரணை குழு உறுப்பினராக 1972-73.
10) கைத்தறிக்கான அகில இந்திய திட்டக்குழுவின் உறுப்பினர் 1969.
11) Reserve-Bank ஆலோசக உறுப்பினராக 2 ஆண்டுகள்.
12) கௌரவ ஆயுள் உறுப்பினர் : உலக வியாபாரம் மற்றும் தொழில் வளர்ச்சி மையம், டெல்லி.

# அருமைத் தலைவர் ஆக்கூர் அண்ணலார்

புலவர் செ. தட்சிணாமூர்த்தி, எம்.ஏ., பி.எட்.,

1981-ஆம் ஆண்டு 'மே' திங்களில் ஒருநாள்; காலைநேரம்; உடல் நலம் குன்றி நோய் வாய்ப்பட்டிருந்த ஆக்கூர் அண்ணல் சு. இராமலிங்கனார் அவர்களைப் பார்க்க அவரது இல்லம் சென்றிருந்தேன்.

எனக்கு முன்னால் அங்கே மஞ்சக்கொல்லையிலிருந்து அன்பர்கள் மூவர் அவரைக் கண்டு அவரது உடல் நிலை பற்றி விசாரித்துக் கொண்டிருந்தனர்.

அப்போது அண்ணலாரின் அழகான-பருத்த-கம்பீரமான-உடல், காய்ந்த குச்சி போல மெலிந்திருந்தது, சதைப்பற்று மிக்கிருந்த அவரது உடலில் எலும்புகள் தெரிந்தன; பளபள என்றிருந்த அவரது கன்னங்களில் சுருக்கங்கள் விழுந்திருந்தன; ஒளி மிகுந்திருந்த அவரது கண்கள் ஒளி குன்றி காணப்பட்டன. ஆம்; காண்பாரைத் தம்பால் ஈர்க்கும் அவரின் அழகுத் திருமேனி பொலிவின்றி காணப்பட்டது. ஒரு சின்னக் குழந்தைபோல கட்டிலில் கூனிக் குறுகி சுருண்டு கிடந்தார்.

வந்திருந்தவர்கள் அவரிடம் விடை பெறக் கைகூப்பினர். நமது அண்ணலார் எழுந்து வந்து விடை கொடுக்க முடியாத நிலையில் அவர்களின் கைகளை தம் கைகளால் பற்றிக் கொண்டு, "நமது சங்கத்தைத் தொடர்ந்து காப்பாற்றுங்கள்; இயன்றவரை நமது குல ஏழை மாணவர்களுக்கு உதவி செய்யுங்கள்" என்று பேச முடியாத நிலையிலும் மெல்லிய குரலில் அன்புடன் கேட்டுக் கொண்டார்.

வந்திருந்தவர்கள் இவ்வுரை கேட்டுக் கண்கள் கலங்கினர்; "உங்கள் எண்ணத்தை நிச்சயம் நிறைவேற்றுவோம்" என்று உறுதி கூறி விடை பெற்றனர்.

ஆம்; நமது அண்ணலார் தன்னலம் கருதாத் தகைமையாளர்; மற்றவர் வாழ்வு வளம் பெற உழைத்தப் பெருந்தன்மையாளர், அவரது வாழ்வும் வாக்கும் நமக்கெல்லாம் வழி காட்டிகள் என்றால் அவை மிகையாகா.

**தோற்றம்:**

தேவார மூவாசிரியர்களாலும் பாடப் பெற்றத் தலங்கள் மொத்தம் 44. அவற்றுள் தஞ்சை மாவட்டத்தில் காவிரியின் தென்கரையில் தரங்கம்பாடி வட்டத்தில் அமைந்துள்ள திருவலம்புரம் என்னும் திருத்தலம் மிகச்சிறப்புடையது. இத்தலம் பட்டினத்தடிகளாரோடு தொடர்புடையது. இத்தலத்தில் நமது அண்ணலார் குந்தர் குலச் செம்மல் சுப்பிரமணிய செங்குந்தர்க்கும் தைலம்மையார்க்கும் 1911-ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 8-ஆம் நாள் நான்காவது மகனாய்த் தோன்றினார். இவர்க்கு முன் பிறந்த மூவரும் பெண்மக்களாவர். "கடைக்குட்டி படுசுட்டி" என்பதற்கேற்ப இவர் இளமையிலேயே சுறுசுறுப்பும் ஊக்கமும் கொண்டு வளரலானார்.

**ஆக்கூர் வருகை:**

அண்ணலாரின் 7-வது வயதில் அவரது தந்தையார், திருவலம்புரத்திற்குத் தென் மேற்கில் அமைந்துள்ள ஆக்கூர் என்னும் திருத்தலத்தில், தமது மாமனார் வேண்டுகோட் கிணங்கி குடும்பத்தோடு மாமனார் இல்லிலேயே குடி புகுந்தார். அண்ணலார் தொடக்கக் கல்வியை ஆக்கூரிலும், உயர்நிலைப் பள்ளிக் கல்வியை பிறையாறிலும் பெற்றார். அவரது 14-ஆம் வயதில் தந்தையார் இயற்கை எய்த, தமது கல்வியை 9-ஆம் வகுப்போடு முடித்துக் கொண்டார்.

**திருமணம்:**

அண்ணலார் தமது 19-ஆம் வயதில் தில்லையில் வாழ்ந்தத் தமது தமக்கையார் சின்னம்மாள் அவர்களின் திருமகளார் சிவகாமியை முதல் மனைவியாகவும், நீண்டநாள் மகப்பேறு வாய்க்காமையால், பின்னர் ஆக்கூர் நாட்டு மருத்துவர் சுப்பு செங்குந்தர் திருமகள் முத்துலட்சுமி எனும் பெண் திருவை இரண்டாம் மனைவியாகவும் திருமணம் செய்து கொண்டார். அவரது முதல் மனைவியார் 1964-ஆம் ஆண்டு இயற்கை எய்தி விட்டார். இரண்டாம் மனைவியார்தாம் அண்ணலாரின் வாழ்நாள் முழுதும் அவரது நோக்கறிந்து, குணமறிந்து, அவர் பணிகளுக்குத் துணை நின்று, செல்விருந்து ஓம்பி, வருவிருந்து காத்து அகமும் முகமும் மலர இல்லறக் கடமைகள் அனைத்தையும் ஆற்றினர். அண்ணலாரின் மறைவுக்குப் பின்னரும் அண்ணலார் ஏற்றிருந்த அறப்பணிகள் அனைத்தை யும் இன்றும் முழு நிறைவோடு செய்து வருகிறார்.

அண்ணலார் தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைவராய் இருந்து ஆற்றியப் பணிகளை எண்ணி இச்சங்கம் தற்போது இவரைத் துணைத் தலைவர்களுள் ஒருவராகத் தேர்வு செய்து சிறப்பளித்துள்ளது. அம்மையார் அவர்களும் தமது பெயருக் கேற்ப நம்மவரின் முத்தாக — நாம் போற்றும் லட்சுமியாக — மகளிர் குல மாமணியாக விளங்குவதால் நமது மாநிலச் சங்கமும் இவரை மகளிர் அணி அமைப்பாளராகத் தேர்வு செய்து, இவரது ஆற்றலைப் பயன்படுத்திக் கொண்டு வருகிறது.

**அரசியல் தொண்டு:**

அண்ணலார் தமது தந்தையார் வழி நின்று, காந்தியடிகள் பால் பற்று கொண்டு, நாட்டு விடுதலையில் ஆர்வம் கொண்டு 1929-ஆம் ஆண்டு இந்திய தேசிய காங்கிரசு கட்சியில் ஓர் உறுப்பினராகச் சேர்ந்து ஊக்கமுடன் உழைக்கலானார்.

இவரது அரசியல் நுழைவால் ஆக்கூரைச் சுற்றியுள்ள திருக்கடையூர், செம்பொன்னார் கோவில், தில்லையாடி, பிறையாறு போன்ற ஊர்களில் எல்லாம் அடிக்கடி பொதுக்கூட்டங் கள் கூட்டி, தேசியத் தலைவர்கள் பலரையும் அழைத்துப் பேசச் செய்து, தாமும் வீர முழக்க மிட்டு விடுதலை வேட்கை எனும் கனலை மக்களிடையே மூட்டி எழுச்சி பெறச் செய்தார்.

**சிறை வாழ்க்கை:**

1930-ஆம் ஆண்டு இந்தியச் சுதந்தரப் போராட்ட வரலாற்றில் ஒரு முக்கியமான ஆண்டாகும். அந்த ஆண்டில்தான் வடக்கே தண்டியிலும், தெற்கே வேதாரணியத்திலும் **உப்புச் சத்தியாக் கிரகம்** நடைபெற்றது. நமது அண்ணலார் வேதாரணியத்தில் நடை-

பெற்ற உப்புச் சத்தியாகிரகப் போரில் பங்கு கொண்டு சட்டத்தை மீறி உப்பு காய்ச்சியதால் அன்றைய ஆங்கில அரசு அவரை முதன் முறையாகக் கைது செய்து ஒரு திங்கள் வரை சிறையில் அடைத்து மகிழ்ந்தது. மீண்டும் அவர் 1940-இல் நடைபெற்ற **தனிநபர் சத்தியாக் கிரகத்தில்** ஈடுபட்டு, சென்னைவரை நடந்து சென்று 'சூளை' பகுதியில் மேடையில் பேசியதால் ஆறு திங்கள் சென்னை மத்தியச் சிறையில் அடைக்கப் பட்டார்.

பின்னர் 1942-இல் நடைபெற்ற **"வெள்ளையனே வெளியேறு"** எனும் இயக்கத்தில் ஈடுபட்டதனால் ஒரு திங்கள் பாதுகாப்புக் கைதியாக மயிலாடுதுறை கிளைச் சிறையில் அடைத்து வைக்கப்பட்டார்.

**கட்சிப் பணி:**

அண்ணலார் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர், தாலுகா காங்கிரஸ் கமிட்டித் தலைவர், மாவட்ட காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர் போன்ற பொறுப்புகளை ஏற்றுத்திறம் படச் செயலாற்றினர். இவர் தமது அயராத பணியால் தம் தொகுதியில் தொடர்ந்து 1962-வரை சட்டமன்றம் மற்றும் நாடாளுமன்றத் தேர்தலில் காங்கிரஸ் வேட்பாளர்களே வெற்றிவாகைச் சூடச் செய்தனர்.

**பொதுப் பணி:**

இவர் ஆக்கூர் ஊராட்சி மன்றத் தலைவராக 1945-ஆம் ஆண்டு முதல் மறைவு எய்தும் காலம் வரையிலும் தொடர்ந்து 35 ஆண்டுகளுக்கு மேலாகப் பணியாற்றி ஆக்கூர் வாழ் மக்களுக்கென அரசு பொது மருத்துவமனை, கால்நடை மருத்துவமனை, உயர்நிலைப்பள்ளி, பேருந்து நிலையம் போன்றவற்றை அரசின் உதவியுடன் கொண்டு வந்துள்ளார். ஊராட்சி மன்றத்திற்கென அழகான கட்டடம் ஒன்றினையும் உருவாக்கி அளித்துள்ளார்.

செம்பொன்னார் கோயில் ஊராட்சி ஒன்றியப் பெருந் தலைவராக இருமுறை தேர்ந் தெடுக்கப்பட்டு 1961 முதல் 1970 வரை பத்தாண்டு காலம் பணியாற்றி செம்பொன் வட்டாரத்தில் அரிய பல சாதனைகளைப் படைத்துள்ளார்.

அண்ணலார் ஒன்றியப் பெருந்தலைவராக இருந்த போதுதான் காந்தியடிகள் நூற்றாண்டு விழா வந்துள்ளது. அதன் நினைவாக அப்போதைய தமிழக முதல்வர் மாண்புமிகு மு. கருணாநிதி அவர்கள் தமிழ்நாட்டில் காந்தியடிகள் வரலாற்றோடு தொடர்புடைய ஒரு இடத்தில் சிறப்புற விழா எடுக்கத் திட்டமிட்டார். அவரது நினைவில் தென்னாப்பிரிக்காவில் காந்தியடிகளின் சத்தியாக்கிரகப் போரில் ஈடுபட்டுச் சிறை சென்று தமது 16-வது வயதிலேயே உயிர்த் தியாகம் செய்த வள்ளியம்மையும், அவர் பிறந்தத் தில்லையாடியுமே தோன்றின.

எனவே தில்லையாடி என்னும்பெயரை **வள்ளியம்மை நகர்** என்று மாற்றம் செய்து, அங்கே தென்னாப்பிரிக்காவில் அமைக்க முடியாத **'வள்ளியம்மை நினைவு மண்டபம்'** எழுப்பி, வள்ளியம்மை பெயரால் **மகளிர் உயர்நிலைப் பள்ளியையும்** அமைக்க முதல்வர் திட்டமிட்டார். முதல்வரது எண்ணத்தை முழுமையாக நிறைவேற்றிக் கொடுத்தப் பெருமை நம் அண்ணலாரையே சாரும். அவ்விழா 22—10—1969-இல் முதல்வர் முன்னிலையில் அமைச்சர்கள் பலர் கலந்து கொள்ள மிகச் சிறப்பாக நடைபெற்றது.

**சமூகத் தொண்டு:**

அண்ணலார் தாம் பிறந்த செங்குந்த குல பெருமக்கள் கல்வி, பொருள், அரசியல், வணிகம், தொழில் ஆகிய பல துறைகளிலும் சிறந்து விளங்க வேண்டும் என்று எண்ணி வாழ்நாள் முழுதும் பாடுபட்டார்கள். அவர் எண்ணம் ஈடேறும் வண்ணம் மயிலாடுதுறை கூறைநாட்டில் — ஆசிரிய நல்லார் — செங்குந்த செம்மல் — ச.கு.பா. பழநிவேலனார் அவர்கள் பெரு முயற்சியால் தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன சங்கம் எனும் ஓர் அமைப்பு 1944-ஆம் ஆண்டு தோற்றுவிக்கப் பட்டது. தொடக்கத்தில் அதன் தலைவராக மன்னைப் பெருமகனார் பெரி. ராம. நடராச செங்குந்தர் அவர்கள் பொறுப்பேற்று அரும் பணியாற்றினார்கள். அவர்க்குப் பிறகு அதன் அடுத்தத் தலைவராக நமது அண்ணலார் 1947-ஆம் ஆண்டு பொறுப்பேற்றுக் கொண்டார். பின்னர் நம்குல ஏழை மாணவர்கள் கல்வியில் முன்னேற்றம் பெற வேண்டும் என்று கருதி, **செங்குந்த மகாஜன சங்கக் கல்வி நிதி** என்று ஓர் அமைப்பு தோற்றுவிக்கப் பட்டது. இந்த இரு அமைப்புகளும் திரு. ச.கு.பா. பழநிவேலனார் அவர்களையே பொதுச் செயலாளராகக் கொண்டு சிறப்புறச் செயல்பட்டன.

பல ஆண்டுகளின் நடைமுறைகளின் பின்னாலே இவ்விரு அமைப்புகளும் வேறு வேறாக இயங்குவதில் சிக்கல்கள் ஏற்படுவதை எண்ணி இவற்றை ஒருங்கிணைத்து 1977-ஆம் ஆண்டு முதல் **தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்** எனும் ஒரே பெயரில் தாமே அதன் தலைவராகவும் பொறுப்பேற்று இயங்கச் செய்தார். அதுமட்டுமல்ல; இச் சங்கத்தை அரசின் சட்ட திட்டங்கட்கு உட்பட்ட பதிவுற்றச் சங்கமாகவும் பதிவு அலுவல கத்தில் பதிவு செய்தார். இன்று இச்சங்கம் ஆல் போல் தழைத்து அருகு போல் வேரோடி நிலை பெற்றதற்கு நமது அண்ணலாரின் உழைப்பும், திறமையுமே காரணம் எனலாம்.

இவர் தலைவராக இருந்த காலத்தில்தான் 1951-இல் நன்னிலம் வட்டம் திருமருகலிலும், 1957-இல் குடந்தை வட்டம் சுந்தரப் பெருமாள் கோயிலிலும், 1970-இல் திருவாரூரிலும் முறையே மூன்றாவது நான்காவது மாவட்ட மாநாட்டையும், வெள்ளி விழாவையும் மிகத் திறம்பட மாற்றுச் சமூகத்தாரும் வியக்கும் வண்ணம் நடத்திக் காட்டினார்.

இவைமட்டுமல்ல; நமது மாநிலச் சங்கம் நடத்திய மாநாடுகள் பலவற்றிலும், விழாக் களிலும் கலந்து கொண்டு அரிய பல தலைப்புகளில் பொருளுள்ள நல்லபல கருத்துக்களை வழங்கியுள்ளார்.

**இறைப் பணி:**

அண்ணலார் தேசியப் பணியையும் இறைப் பணியையும் இருகண்களாகப் போற்றியவர். அவர் ஆக்கூர் தான்தோன்றீசுவரர் ஆலயத்தின் அறங்காவலராகப் பல்லாண்டுகள் பணி ஆற்றியுள்ளார்; அக்காலத்தில் அவ்வாலயத்தின் குடமுழுக்கு விழாவையும் மிகச் சிறப்பாக நடத்திக் காட்டியுள்ளார். இரு முறைகள் வட இந்தியச் சுற்றுப் பயணத்தை மேற் கொண்டு பற்பல திருத்தலங்களை யெல்லாம் வழிபட்டுத் திரும்பியுள்ளார். கோயில் விழாக்கள் பலவற்றிலும் பங்கு கொண்டு சொற்பொழிவாற்றியுள்ளார். செம்பொன்னார் கோயில் திருத்தலத்தில் கவிஞர் தென்னவன் எழுதியுள்ள **'மருவார் குழலி விருத்த மணி மாலை'** எனும் நூல் வெளியீட்டு விழாவிற்குத் தலைமை ஏற்றுச் சிறப்பு செய்துள்ளார்.

**மணி விழா:**

அண்ணலார் தமது 60-ஆம் ஆண்டு நிறைவு மணிவிழாவைத் தாம் மேற் கொண்ட வட இந்திய யாத்திரையின் இடையில், புனித கங்கை பொங்கிப் பெருகும் **அரித்துவாரம்** எனும் புண்ணிய பூமியில் 7—6—71 அன்று தமது துணைவியார் முத்துலட்சுமி அம்மையாருடன், உடன் வந்த யாத்திரைச் சுற்றம் வாழ்த்த நடத்திக் கொண்டார். அவ்விழாவின் தொடர்ச்சியாக ஆக்கூரில் 8—8—71 அன்று நமது தஞ்சை மாவட்டச் செங்குந்த மகாஜன சங்கம் காங்கிரஸ் தலைவர் திரு. ஜி.கே. மூப்பனார் தலைமையில் மிகச் சிறப்பான பாராட்டு விழா ஒன்றினை எடுத்து மகிழ்ச்சி கொண்டது; விழாவின் நினைவாக **மணிவிழா மலர்** ஒன்றையும் வெளியிட்டுப் பாராட்டுத் தெரிவித்துச் சிறப்பு செய்தது.

**பிற சிறப்புகள்:**

நமது அண்ணலார் கூட்டுறவுத்துறை அமைப்புகள் பலவற்றிலும் பங்கு கொண்டு தம் கடமைகளைச் செய்துள்ளார். இவர் தமிழிலக்கியங்களிடத்தும், தமிழறிஞர்களிடத்தும், தமிழ்க் கவிஞர்களிடத்தும் பெரிதும் ஆர்வம் கொண்டவர். ஆக்கூரில் **பாரதி சங்கத்தைத்** தோற்றுவித்து பல சிறந்த அறிஞர்களைக் கொண்டு சொற்பொழிவாற்றச் செய்து ஆக்கூர் வாழ் மக்களிடையே இலக்கிய ஆர்வத்தை வளர்த்தார். இவர் மேடைப் பேச்சில் வல்லவர்; கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழியும் ஆற்றல் மிக்கவர். அதுபோலவே இவர் எழுத்தாற்றலிலும் சிறந்தவர்; **தில்லையாடி வள்ளியம்மையைப்** பலரும் ஓர் அரிசனப் பெண் எனவே எண்ணியிருக்க, இவர் அவள் நம் குந்தர்குலத் தோன்றல் என்பதைத் தக்கச் சான்றுகளோடு தஞ்சை மாவட்டச் செங்குந்த மகாஜன சங்க வெள்ளிவிழா மலரில் கட்டுரை ஒன்று எழுதி வெளியிட்டு உண்மையை விளக்கியதும், தாம் மேற்கொண்ட வட இந்தியச் சுற்றுலாவைப் பற்றி நமது **செங்குந்த மித்திரன்** இதழில் தொடர்க் கட்டுரை எழுதியதும், இவர் ஒரு சிறந்த எழுத்தாளர் என்பதை மெய்ப்பிக்கும் சான்றுகளாகும்.

**இறுதி நாட்கள்:**

அண்ணலார் தம் வாழ்நாள் முழுதும் எண்ணம், சொல், செயல் ஆகியவற்றில் தூய்மையைக் கடைபிடித்தார்; ‘காபி’யோ, தேநீரோ அருந்த மாட்டார்; பால்தான் அருந்துவார் அல்லது மோர் குடிப்பார். எனவே அவரை அவர்தம் 68-ஆம் வயது வரை எந்த ஒரு நோயும் அணுகியதில்லை; தலைவலிக்குக் கூட மாத்திரையோ, மருந்தோ உண்டதில்லை. உணவிலும் கட்டுப்பாட்டைக் கவனமுடன் கடைப் பிடித்தார்.

ஆயினும் அவரது இறுதி நாட்களில் எதை உண்டாலும் செரிமானம் ஆகாமல் அவதிப் பட்டார்; அவரால் ஒரு நாளைக்கு ஒரு ‘இட்லி’ கூட உண்ண முடியாத நிலைமை ஏற்பட்டு விட்டது. சென்னைவரை சென்று தம் உடலை சிறந்த பல மருத்துவர்களிடம் காட்டிச் சோதனை செய்து கொண்டார். அவரைச் சோதித்த மருத்துவர்கள் யாவரும் உடலில் எந்தவித நோயுமில்லை என்று கூறிவிட்டார்கள். எனினும் நாளுக்குநாள் அவரது உடல் இளைக்கத் தொடங்கி துரும்பு போல் ஆகி விட்டது. ஜீரண உறுப்புகள் சரியாகச் செயல் படவில்லை என்பதுதான் அவருக்குள்ள ஒரே குறைபாடு.

**மறைவு:**

1978-ஆம் ஆண்டு முதலே அவர் தமது உடல் நிலையில் அதிகம் கவனம் செலுத்தினார். வெளியூர்ப் பயணங்களைக் குறைத்துக் கொண்டார். அவர் தம்மைக் காண வந்தவர்களிடம் தமக்கு ஏற்பட்டுள்ளச் செரிமானக் கோளாறுப்பற்றிப் பேசினார்; நாட்டு நடப்புகள் குறித்தும் அரசியல் நிலைமைகள் குறித்தும் அன்புடன் விவாதித்தார். இப்படியே நாட்கள் பல கடந்தன.

1981-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 6-ஆம் நாள்; அண்ணலார் அன்று காலையில் பேச்சிழந்தார்; பின்னர் நினைவிழந்தார்; மதியம் 1-45 மணிக்கு நம்மையெல்லாம் துயர்க் கடலில் மூழ்கச் செய்து எல்லாம் வல்ல இறைவன் திருவடி நீழலை அடைந்தார்.

**முடிவுரை:**

ஆக்கூர் அண்ணலார் வாழ்க்கையும் வரலாறும் நம்முள்ளத்தைத் தொட்டு உணர்ச்சியூட்டும் தன்மையன. அவர் குந்தர் குலத்திலே தோன்றினாலும் நாட்டு மக்கள் அனைவர்க்கும் தம் வாழ்நாளை அர்ப்பணித்த அருந் தொண்டர்; நறுந்தலைவர். அவரது தூய வாழ்க்கை நெறிகளை நாமும் பின்பற்றி வாழ்வாங்கு வாழ முயல்வோமாக.




*மாநாடு சிறப்புற எங்கள் நல்வாழ்த்துக்கள் !*



Phone: **6218437**

**K. தாமோதரன்**

S. K. L. S. லாரி சர்வீஸ்,
231-*A*, *G.N.T.* ரோடு, செங்குன்றம்.
சென்னை - 600 052.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க
நான்காம் தலைவர் 25.9.1953 — 1955



சைவசமய காவலர், சான்றோர்
அமரர் : இராம. ச. சம்பந்தமூர்த்தி செங்குந்தர்
மஞ்சக்கொல்லை

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க
ஐந்தாவது தலைவர்.




அமரர் : கா.அ. சண்முக செங்குந்தர்
திருமகள் மில்ஸ், குடியாத்தம்
1955 — 25.12.76

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க
பிரசாரகர்



அமரர் : தி. அ. சண்முக செங்குந்தர், சென்னை
தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க செயலாளர்
(மற்றும்) செங்குந்த மித்திரன் ஆசிரியர்

சென்னை, சேத்துபட்டு, ஹாரிங்டன் சாலையில் (வள்ளல் சபாபதி மெட்ரிகுலேஷன் பள்ளி) மனைகள் கிரயத்திற்கு வாங்க தமிழக முன்னாள் முதல்வர் பேரறிஞர் அண்ணா அவர்களுடன் இணைந்து துணைபுரிந்த மூத்த சமுதாய தொண்டர், காஞ்சி அமரர் பி.செ. மாணிக்கவாசக செங்குந்தர் (மணி மொழியார்)



பி. செ. மாணிக்கவாசக முதலியார்,
தலைச்சங்க பிரசாரகர், 1927—1934,
துணை அமைச்சர், 20-1-29—26-12-31.
மித்திரன் ஆசிரியர், 1934—1941.

# மாயூரம் தந்த மாமணி

(T. இராமலிங்கம், M.A., M.Ed., கூறைநாடு)

உலகெலாம் உணர்ந்தோதற்கரியவனை உள்ளத்தில் இருத்தி வழிபடும் உத்தமர்கள் நிறைந்த ஊர் மயிலாடுதுறை. கங்கையின் புனிதமாய காவிரியின் கரையில் அமைந்த இவ்வூரின் ஒரு பகுதி தனியூர் எனும் பகுதி. பழம் பெரும்பதியான தனியூர் நெசவுத் தொழிலின் காரணமாகச் சிறப்புற்று விளங்கியது. கூறைச் சேலைகள் மிகுதியாக நெய்யப் பட்டதால் கூறைநாடு எனவும் அழைக்கப்பட்டது. அவ்வூர் இசை விளங்கும் பெருங்குடி களில் ஒன்றாகத் திகழ்ந்து விளங்கியது வீரப்ப முதலியாரது குடும்பம். திருமணக் கோடி நெய்து கொடுத்ததால் இன்றும் அவரது வீட்டைக் கோடி வீடு என்று அழைப்பர்.

அவரும் அவர்தம் இல்லத்தரசியார் மாரிமுத்து அம்மையாரும் ஆற்றிய நற்றவப் பயனால், அவர்களுக்கு 21—11—1903இல் ஓர் ஆண் மகவு பிறந்தது. இரத்தினம் எனப் பெயரிட்டு அழைத்தனர்.

**இளமையும் படிப்பும்:** ஜவஹர் என்றாலே மாணிக்கம் என்று பொருள். தனது பெயருக் கேற்ப மனித குல மாணிக்கமாகத் திகழ்ந்தார், ஆசிய ஜோதி, பண்டித ஜவஹர்லால் நேரு. அதைப் போன்றே இவரும் இரத்தினம் என்ற பெயருக்கேற்ப, செங்குந்த குலத்தில் தோன்றி ஒளி வீசிய இரெத்தினங்களுள் ஒன்றாகத் திகழ்ந்தார். இளமையிலிருந்தே ஊக்கம் குன்றாமல் கருமமே கண்ணாகக் கொண்டு தொடக்கப்பள்ளி முதல் பட்டப் படிப்பு வரையில் கல்வியில் கருத்தூன்றிக் கற்று அவ்வட்டாரத்திலேயே நம் குலத்தவரின் முதல் பட்டதாரி ஆனார்.

**இல்லறம்:** இவர்தம் மூத்த மனைவியார் ஒரு பெண் மகவை ஈன்று உயிர் நீத்தனர். அதன் பின் தம் சகோதரியின் மகளான இராசம்மாள் அம்மையாரை மணந்து இல்லறமாம் நல்லறத்தை இனிது நடத்தி, பண்புடை மக்களைப் பெற்று இனிது வாழ்ந்தார்.

அவரது மூத்த மைந்தர் திரு. R. சண்முகம், பி.ஏ., பி.எல்., அவர்கள் "குலவிச்சை கல்லாமற் பாகம் படும்" என்பதற்கிணங்க தந்தையாரின் தொழிலனுபவத்தைப் பெற்று சென்னை உயர்நீதி மன்றத்தில் வழக்குரைஞராக பணியாற்றுகிறார். குடும்பத்தினரால் "மணி" என்று அன்புடன் அழைக்கப்படும் அவர் தம் தொழிலிலும் மணியாகத் திகழ்கிறார். இரண்டாவது மகனார் திரு. R. வீரபாகு, M.B.B.S., M.D பட்டம் பெற்றவர். தற்பொழுது மதுரை மருத்துவக் கல்லூரி மருத்துவமனையில் "Dean" ஆகப் பணியாற்றி வருகிறார். தந்தையின் தோற்றப் பொலிவையும், தேர்ந்த அறிவையும், இனிய குணத்தினையும் தனக்கே உரியதாக அமைத்துக் கொண்டவர். அன்பும் பண்பும் நிறைந்த அவர் எல்லோரிடத்திலும் பாசத்தோடும் பரிவோடும் பழகக் கூடியவர். நண்பர்களை அவர் சந்திக்கும் பொழுது இன்முகத்தோடு இரத்தினச் சுருக்கமாக கூறும் அவரது சொற்கள் பிறர் நலம் பேணும் தன்மையுடையதாகவும், நம்பிக்கையூட்டக் கூடியதாகவும் விளங்கும். "துரை" என்று அன்போடு அனைவராலும் அழைக்கப்படுபவர் அவர்.

**தொழில்:** இரத்தின முதலியார் சென்னை உயர்நீதி மன்றத்தில் 1928-ஆம் ஆண்டு தொடங்கி 1935 வரையில் வழக்கறிஞராகப் பணியாற்றினார். பின்னர் 1955 வரையில் நம் மாநிலத்தில் மன்னார்குடி, வேலூர், முதுகுன்றம் போன்ற பல்வேறு நகரங்களில் மாவட்ட 'முன்சீப்' பாகவும், உதவி நீதிபதியாகவும், மாவட்ட மாஜிஸ்டிரேட்டாகவும் சிறந்த தொண்டாற்றினார்.

"சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல், அமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி"

என்னும் பொய்யாமொழிக்கிணங்க நீதி வழங்கிய சான்றாண்மையினால் நாடும் ஏடும் அவரைப் போற்றிப் புகழ்ந்தது. பின்னர் மூன்றாண்டு காலம் மாவட்ட செஷன்ஸ் நீதிபதியாகச் செவ்வனே பணியாற்றிய பின் 1958-ஆம் ஆண்டு "பப்ளிக் சர்வீஸ் கமிஷனின்" தலைவராகப் பணியாற்றும் அரிய பேறு கிட்டியது. பெரும் புகழுடன் மாநிலத்தின் மிகப் பெரிய பதவியில் நடுவு நிலை தவறாது செங்கோலோச்சினார். 1963-இல் ஓய்வு பெற்றார். சென்னை உயர் நீதி மன்றத்தில் மீண்டும் வழக்குரைஞராகப் பணியாற்றினார்.

**சமயம்:** சைவ சமயத்தில் ஊறித் திளைத்த அவரது முன்னோர்கள் வைத்தீஸ்வரன் கோவிலுக்கு வரும் செங்குந்த யாத்திரிகர்களும் பிற இனத்தவர்களும் தங்குவதற்கு வசதி களுடன் கூடிய அன்ன சத்திரம் ஒன்று ஏற்படுத்தியுள்ளனர். மேலும் அவர்தம் முன்னோர் கள் கூறைநாடு செங்குந்தர்களுக்குச் சொந்தமான சிவ சுப்ரமணியர் ஆலயத்தில் நடை பெறும் விழாவிற்கு அறக்கட்டளை ஒன்றை ஏற்பாடு செய்துள்ளனர்.

தமிழும் சைவமும் ஒருங்கு வளர் தருமையாதீனக் குரு மகாசந்நிதானம் அவர்கள் ஆண்டுதோறும் நிகழ்த்தி வரும் "குருபூஜை" பத்துநாள் விழாவில், இவர்களைப் பன்முறை தலைமை தாங்கப் பணித்தும், சொற்பொழிவாற்றச் செய்வித்தும் தக்க மரியாதைகள் செய்து பாராட்டி ஆசியுரை வழங்கியுள்ளார்.

**எளிமையும் பரிவும்:** எளிமையான வாழ்க்கையை மேற்கொண்டவர். பெரும்பாலான வழக்குகளை சமரச முறையில் தீர்த்து வைத்தவர். ஏழைகளிடத்து இரக்கம் காட்டும் தன்மையுடையவர். இதனை உணர்ந்த அரசு அரியலூர் ரயில் விபத்தில் பாதிக்கப்பட்ட குடும்பத்தினருக்கு உதவித் தொகை நிர்ணயிக்க அவர்களை அரசு தரப்பு அதிகாரியாக நியமித்தது.

**சமூகத்தொண்டு:** தென்னிந்திய மகாஜன சங்கத்துடன் தொடர்பு கொண்டு செயலாளராக 1935 வரை தொண்டாற்றியுள்ளார். தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்க தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் இரத்தின மணி அவர்களே முதன்மையானவர். ஏழை நெசவாளர் குடும்பத்தினரின் இன்னல்களை அரசாங்கத்திற்கு இதமாக எடுத்துக் கூறி துயர் துடைக்க முனைந்து வெற்றி பல கண்டவர். நம் குல மக்கள் சலுகைகள் பெற அரசாங்கத்திற்கு தக்க சமயத்தில் அறிவுறுத்தி நம்மவருக்குரிய இடத்தை வாங்கித்தந்த பெருமை இவருக்குமுண்டு.

**முடிவுரை:** மாயூரம் தந்த மாமணியாக விளங்கிய இரத்தின மணி 5—6—83ஆம் நாள் விண்ணுலக வாழ்வையடைந்தார். பருவுடல் மறைந்தாலும் அவர்தம் புகழுடல் நம் செங்குந்த குல மக்களுக்கு வழிகாட்டியாக உள்ளது. அவரது கடமையுணர்வு, இறையுணர்வு, எளிமை, நேர்மை, ஊக்கம், உழைப்பு, அனைத்துக் குண நலன்களும் அனைவராலும் பின் பற்றத் தக்கன. குறிப்பாக இளைஞர்களுக்கு ஓர் எடுத்துக் காட்டாகவும், கலங்கரை விளக்காகவும் திகழ்கிறார் அவர்.

அலைகடலில் மாறாத அமுதமாக விளங்கும் அபிராமி அம்மையின் அருள் பெற்ற வராகத் திகழ்ந்தார் அவர். அபிராமியின் கடைக் கண்கள் அருளக் கூடிய நோயின்மை, கல்வி, தனம், தானியம், அழகு, புகழ், பெருமை, இளமை, அறிவு, சந்தானம், வலி, துணிவு, வாழ்நாள், வெற்றி, நல்லூழ், நுகர்ச்சி, ஆகிய பதினாறு பேறுகளையும் பெற்று வாழ்ந்தவர் மாயூரம் தந்த மாமணி இரத்தினம் ஆவார்.

With best compliments from:



Tel: GOMATHIMIL
Phone: 216 & 217
Ambasamudram.

Telex: 0433-246 AVRM IN
FAX: 04634-553

**THE GOMATHI MILLS**

VIRAVANALLUR 627426
(Tamil Nadu)
(Government Recognised Export House)

Number of spindles:

RING: 26720  DOUBLING: 5504  CONE: 900

We spin best warp quality Cone Yarn for Exports and for Power looms. We produce 2/36s, 2/40s, 40s Combed and special 60s, 80s, 90s, & 100s combed yarn in cones.

ALWAYS INSIST ON GOMATHY YARN,

**A.V.Rm.V. SANKARANARAYANAN,** Managing Partner
**V.S. VELAYUTHAM,** Partner-cum-General Manager

Under the same Management

M/s. Subadra Textiles Pvt. Ltd,,
Magadi Road, Dasarahalli,
BANGALORE - 560 079
Installed: 24500 Spindles
Phone: 351237 & 352337
Telex: 0845-8119 YARN-IN
V.S. RAJAGOPAL, M.A.,
Director

M/s. Andal Flour Mills Pvt. Ltd.,
5-A, Pandit Jawaharlal Nehru Street,
SRIVILLIPUTTUR - 626 125.
Manufactures of Best Quality
"SRI ANDAL BRAND"
Maida, Sooji, Atta, Rough Bran/Flakes
S. SUNDARARAMAN, B.Sc.,(Memphis)
R. SANKARASUBBIAH, B.E.,
Directors-in-Charge

GOMATHY COMPRINT PRIVATE LTD.,
54H & 1 Badrappa Estate, Kamashipalya
Magadi Road, Bangalore - 560 079.

Phone:
353797 / 356786

**Products:**
Blank, EZR-Ruled & Banded, Pre-printed. Clean-Edged Letter Heads Invoices, Pay-Slip, Bus Tickets, Mark Certificates And Many more forms to suit your needs-All supplied in Re-Usable Carton Boxes.

**Gram: 'COMPRINT'**
Telex: (PP) 0845-8119 YARN IN
Fax: 0812-351592.

**V. S. MURUGAN** M.B.A.,
Director.

தலைச்சங்க அமைச்சர்

# சி. நடராசனார்

டாக்டர் சி. பாலசுப்ரமணியன், M.A., M.Lit., Ph.D.,
துணைவேந்தர்,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

சென்ற நூற்றாண்டின் இறுதியில் "கல்வியில் கரையில்லாத காஞ்சி மாநகர்" என்ற திருநாவுக்கரசப் பெருமானால் பாராட்டப்பட்ட காஞ்சிபுரத்தில் செங்குந்தர்கள் வாழும் — திருஞான சம்பந்தர் பெயரில் விளங்குவதாகக் குறிப்பிடப்படும் பிள்ளையார் பாளையம் எனும் ஊரில் செல்வமும், செல்வாக்கும் நிறைந்த ஒரு குடும்பத்தில் திருவாளர் நடராஜ முதலியார் 3—11—1907 அன்று பிறந்தார். காஞ்சிபுரம் பச்சையப்பர் உயர்நிலைப் பள்ளியில் பெரும் பள்ளி இறுதி படிப்புவரை (S.S.L.C.) படித்தார், சென்னை பச்சையப்பர் கல்லூரியில் (Intermediate) படிப்பை படித்து முடித்தார். சிதம்பரத்தில் வள்ளல் அண்ணாமலை அறவோர் தொடங்கிய ஸ்ரீ மீனாட்சிக் கல்லூரியில் சேர்ந்து B.A. தேறினார். பி.ஏ. தேறியவுடன் சட்டத்துறைக்குச் செல்ல இவர் விரும்பினார். அதனால், சென்னை சட்டக் கல்லூரியில் சேர்ந்து சட்டம் பயின்று 1934-ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்களில் ஒரு வழக்கறிஞராகத் தன்னைப் பதிவு செய்து கொண்டார்.

தம்முடைய வாழ்க்கை நடத்துவதற்கு வழக்கறிஞர் தொழிலை மேற்கொண்டாலும், பிறருக்காகவே உழைக்கும் அவருடைய பெருமனம் சமுதாய நலப் பணிகளில் சென்றது. 1935-ஆம் ஆண்டு இவர் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் மதிப்புறு செயலாளராகத் (Honorary Secretary) தேர்ந்தெடுக்கப்பட்டார். செங்குந்தர் சமுதாயம் பொருளாதாரத் துறையிலும் கல்வி துறையிலும் முன்னேற வேண்டுமென்று கருதி 1927-ஆம் ஆண்டு தொடங்கப் பெற்ற தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தில் சமுதாய வளர்ச்சிக்கு ஏற்கனவே பார்த்து வந்த அப்பதவியை 1960-ஆம் ஆண்டுவரை இடையீடு எதுவும் இன்றி வகித்தார். 1960-ஆம் ஆண்டில் இருந்து செங்குந்தர் துணைத்தலைவர் பதவியை வகித்தார். ஏறத்தாழ 20 ஆண்டுகள், அதாவது 1940–1960 வரை இவர் செங்குந்த மன்றத்திற்காகத் தொடங்கப்பெற்ற 'செங்குந்த மித்திரன்' எனும் திங்கள் இதழுக்கு மதிப்புறு ஆசிரியர் (Hon. Editor) ஆனார். இதுகாறும் துணைத்தலைவர் பதவி வகித்து வந்த இவர், அதன் பணியேற்று 64-வது நாயன்மார் என்று சமய உலகம் போற்றும் திருமுருக கிருபானந்த வாரியார் அவர்களோடு மேற்படி சங்கத்தின் காப்பாளர் (Patron) ஆனார்.

தமிழ்த் தென்றல் திரு. வி. கல்யாணசுந்தரனார் 1953-ஆம் ஆண்டு இராயப்பேட்டையில் தொடங்கிய பாலசுப்ரமணிய பக்த ஜன சபையின் துணைத்தலைவர் ஆனார். மேலும்,

இராயபேட்டை, புதுப்பாக்கம் என்னும் பகுதியில் அமைந்து இருக்கும் ஸ்ரீ சிவசுப்ரமணிய பக்த ஜன சபையின் தலைவராகப் பொறுப்பேற்று, 1970-ஆம் ஆண்டு தொடங்கி 1984-ஆம் ஆண்டுவரை வகித்தார்.

45 ஆசிரியர்களோடும், 1750 மாணவர்களோடும் சைதாப்பேட்டை அன்னபூரணி அம்மாள் அறக்கட்டளை நடத்திவந்த, அரசாங்கத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட நடுநிலைப் பள்ளியின் சிறப்புக்கெல்லாம் காரணமாக இருந்த அந்த அறக்கட்டளையினை வழிநடத்திச் செல்லும் சான்றோராகத் துலங்கினார். பத்தாண்டிற்கும் மேற்பட்ட ஆண்டுகள் இவர் CO-OP-TEXஇல் சட்ட ஆலோசகராகப் பணி புரிந்துள்ளார். தென் இந்திய செங்குந்த மகாஜன சங்கத் தலைவராகவும் கைத்தறி தலைவராகவும் திகழ்ந்த பத்மஸ்ரீ எம்.பி. நாச்சிமுத்து அவர்களின் நெருங்கிய நண்பராக விளங்கினார்.

சமுதாயத்தில் பெண்கள் முன்னேற வேண்டும் என்ற குரல் கொடுத்த வள்ளல் சபாபதி முதலியார் அவர்களோடு சேர்ந்து இவருடைய குரலும் ஒலித்தது. திருமணத்தின் பொருட்டு ஏராளமாகவும் ஆடம்பரமாகவும் செலவு செய்யும் செயலை இவர் வெறுத்தார்; அதற்கு எதிராகவும் திகழ்ந்தார். இவ்வாறு பெருவாழ்வு வாழ்ந்த தொண்டர் திரு. சி. நடராஜ முதலியார் 18—4—1984 அன்று சிவனடி சேர்ந்தார்.

தக்கார் தகவுஇலர் என்பது அவரவர்
எச்சத்தால் காணப் படும்

என்னும் திருக்குறளுக்கு ஏற்ப நான்கு நன்மக்களைப் பெற்றுள்ளார்.

முதல் மகன் சி என். விஸ்வநாதன், M.A.B.L. பயின்று தொழிலாளர் கல்வி நிறுவனத்தில் இயக்குநராக விளங்குகின்றார்.

இரண்டாவது மகன் டாக்டர் சி.என். சொக்கநாதன், மருத்துவப் படிப்பை (M.B.B.S.,) முடித்து, சென்னையில் குடும்பநலத் துறையில் இணை இயக்குநராகப் பணியாற்றி வருகின்றார். மூன்றாவது மகன் சி.என். சிவகுமார், B A.B.L. தந்தைதம் பணியினை ஏற்று வழக்கறிஞராகவும் மற்றும் நோட்டரி பப்ளிக் ஆகவும் தற்போது பணியாற்றி வருகின்றார். நான்காவது மகனார், டாக்டர் சி.என். ரவீந்திரன், எம்.டி. பட்டம் பெற்று அரசாங்க மருத்துவராக பணியாற்றி வருகின்றார்.

இவ்வாறு புகழ் பூத்து வாழ்வாங்கு திக்கெல்லாம் சமயத் தொண்டாற்றிய செங்குந்தர் குலவிளக்கு சி. நடராஜ முதலியார் அவர்களுடைய திருப்பெயர் என்னென்றும் நினைவில் நிற்பதாகுக.

*With best compliments from:*



Off: 76640, 73294, 77529
Resi: 73861, 73169

**M. SENGODU**

YARN BROKER,

23, Eswaran Koil Street, ERODE - 638 001.

குடந்தையில் 16-ஆவது செங்குந்தர் மாநில மாநாடு வெற்றியடையவும், செங்குந்தர்கள் கல்வியிலும் வேலை வாய்ப்பிலும் பொருளாதாரத்திலும் மேம்பாடு அடையவும் வாழ்த்துகிறோம்.

## திருநாகேசுவரம்

# கைத்தறி ஜவுளி உற்பத்தியாளர் சங்கம்

(பதிவு எண் S/No. 70 of 1954)

எண். 19, துலுக்கத் தெரு, திருநாகேசுவரம்,
குன்றத்தூர், செங்கை அண்ணா மாவட்டம்,
அஞ்சல் குறிஎண். 600 069.

கைத்தறி ஆடைகளையும், லுங்கிகளையும் அணிந்து கைத்தறியாளருக்கு ஆதரவு அளிக்குமாறு வேண்டுகிறோம்



ஆண்டுதோறும் செங்குந்தர்குல ஏழை மாணவ, மாணவியருக்கு இலவசமாக புத்தகங்கள் வழங்கியும்



ஒவ்வொரு ஆண்டும் செங்குந்தர் குலத்தைச் சேர்ந்த ஏழ்மை நிலையில் உள்ள பத்து ஜோடிகளுக்கு இலவசத் திருமணங்கள் நடத்தி வருகின்றோம்.



உயர்வான அனைத்து வசதியுடன் (ஜெனரேட்டர் வசதியுடன்) குறைந்த வாடகையில் உங்கள் குடும்ப விழாக்கள் சிறப்புடன் அமைய எங்கள் சங்கத்திற்கு உரிமையான

**''செங்குந்தர் திருமண மண்டபம்''**

உங்களை அன்புடன் வரவேற்கிறது

இங்ஙனம்

தலைவர்
**K. குப்புசாமி செங்குந்தர்**

துணைத் தலைவர்
**T. V. ஒத்தாண்டி செங்குந்தர்**

செயலாளர்
**S. சேகர் செங்குந்தர்**

துணைச் செயலாளர்
**V. நடராஜ செங்குந்தர்**

பொருளாளர்
**V. S. மோகலிங்கம் செங்குந்தர்**

நிர்வாகக்குழு உறுப்பினர்கள்:

T. பழனி செங்குந்தர்
T. தட்சிணாமூர்த்தி செங்குந்தர்
T. G. திருநாவுக்கரசு செங்குந்தர்
T. A. ஜெகநாதன் செங்குந்தர்
T. S. கனகசபை செங்குந்தர்
T. குமார் செங்குந்தர்
T. S. கனகசபாபதி செங்குந்தர்

## கைத்தறி காவலர், செங்குந்தர் குலப்பெரியார்



முன்னாள் தலைவர் - M.P. நாச்சிமுத்து செங்குந்தர் B.A., B.L.,
சென்னிமலை

தலைமைச் சங்க ஆறாவது தலைவர் - 26—12—1976-26—6—1987

நாடுகடந்தும் தாய் நாட்டுக்காக உயிர் நீத்த



செங்குந்தர் குலத்திலகம், தியாகி வீராங்கனை
தில்லையாடி வள்ளியம்மை

கொடிகாத்த மாவீரன்



செங்குந்தர் குல வீரத்திலகம்
திருப்பூர் குமரன்

சான்றோர் போற்றும்

# சம்பந்த மூர்த்தியார்

முதுபெரும் தேசபக்தர்; சைவசமயக் காவலர்; செங்குந்தச் செம்மல்; தென்னிந்திய செங்குந்தச் சங்கத்தின் புரவலர்; தஞ்சை ஜில்லா செங்குந்த சங்கத்தின் துணைத்தலைவர்; மஞ்சக்கொல்லை குமரன் கல்வி நிலையங்களின் தாளாளர்; பல தமிழ் மன்றங்களின் காப்பாளர்; பல சைவ, இலக்கிய மன்றங்களின் உறுதுணையாளர்!

இப்படிப்பட்ட பெருமைக்கும், பாராட்டுதலுக்கும் உரியவர்தாம் மஞ்சக்கொல்லை சான்றோர், சம்பந்தமூர்த்தியார் என்றால் அது மிகையன்று; முற்றிலும் உண்மையேயாம்.

**தோற்றம்:**

'நல்லார் அறங்கூறும் நன்னாகை' என்று சமயக்குரவர் ஒருவரால் பாடப் பெற்றச் சிறப்புடைய நாகப்பட்டினம் என்னும் நகர்க்கு மேற்பால் மூன்று கிலோமீட்டர் தொலைவில் அமைந்ததுவே மஞ்சக்கொல்லை என்னும் மாண்பார் பதியாகும். இப்பதியில் பண்டு தொட்டு செங்குந்தகுல மக்கள் சீலத்தோடும், பொருள் வளத்தோடும் வாழ்ந்து வருகின்றனர். இப்பதியில் சிறந்தோங்கிய செங்குந்தர் குடும்பங்களுள் இராமசாமி செங்குந்தர் குடும்பமும் ஒன்றாகும். இவரும் இவர்தம் அருந்துணையார் தைலம்மையாரும் நடத்திய இல்லறத்தின் பயனாய் நல்லறச் செல்வமாக சௌமிய ஆண்டு, கார்த்திகைத் திங்கள் நான்காம் நாள் (19—11—1909) முதல் மகவாகத் தோன்றியவர்தாம் நமது சான்றோர் சம்பந்தனார்.

**இளமையும் கல்வியும்:**

பெற்றோரால் பேணி வளர்க்கப்பெற்ற சம்பந்தனார் உள்ளூர் தொடக்கப்பள்ளியில் சேர்க்கப் பெற்றார். ஐந்தாம் வகுப்பில் பயிலும்போதே, பல இந்திய - தேசியத்தலைவர் களின் பேச்சுக்களையும், தமிழகக் காங்கிரஸ் தலைவர்களின் பேச்சுக்களையும் கேட்டும், பத்திரிகைகளில் அவர்தம் எழுத்துக்களைப் படித்தும் தேசிய உணர்ச்சி வசப்பட்டு ஆங்கிலம் கற்பதை வெறுத்தனர்; நாட்டுத் தொண்டில் நாட்டம் கொள்ளத் தொடங்கினர். இளமையிலேயே கதராடையைத்தான் உடுத்துவது என்றும் உறுதி பூண்டனர். பின்னர் பெற்றோரின் விருப்பத்திற்கிணங்க நாகை தேசிய உயர்நிலைப் பள்ளியில் ஆறாம் வகுப்பு முதல் பள்ளியிறுதி வகுப்பு முடிய பயின்று முடித்தார்கள். பள்ளியிலும், வெளியிலும் நல்ல மாணவர் என்னும் பெயரை பெற்றனர்.

**திருமணம்:**

இவர் தமது இருபத்து இரண்டாம் அகவையில் திருமலைராயன்பட்டினம் வீ. குருசாமி செங்குந்தர் அவர்களின் திருமகளார் விசாலாட்சி அம்மையை உற்றாரும் மற்றாரும் உடனிருந்து போற்ற வாழ்க்கைத் துணைவியாராக ஏற்றனர். இவர்தம் துணைவியார் அவர்கள் இவரது நோக்கறிந்து குணமறிந்து ஒழுகும் பண்புடையாளர்; செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருக்கும் குணவதியாவார். பாவேந்தர் படைப்பாகிய குடும்ப விளக்காகவே எண்ணத்தக்கவர். இவர்களின் இல்லறவாழ்வில் விளைந்த நன்மலர்கள் பலர்; அம்மலர்களுள் ஆண்மக்களும் உண்டு; பெண்மக்களும் உண்டு. அவர்களுள் மூத்தவர் சிதம்பரநாதன், B E. அவர்கள் நெய்வேலி பழுப்பு நிலக்கரிச் சுரங்க நிறுவனத்தில் சிறந்ததொரு அதிகாரியாக விளங்குகிறார்கள். சுந்தரமூர்த்தி என்பவர் தந்தையின் வழி நின்று குடும்பத்தைக் காத்து வருகின்றார்.

**தொழிலார்வம்:**

இவர் தம் தந்தையாரும் மற்ற உறவினர்களும் சேர்ந்துத் தோற்றுவித்த மதராஸ் பளையகாட் கம்பெனியை மேலும் மேலும் வளர்ச்சியடைய ஊக்கமுடன் பங்கேற்று உழைத்தார். இக்கம்பெனியின் சார்பில் இலங்கைக்கும் சென்று அங்குள்ள கிளை நிறுவனத்திலும் சிலவாண்டுகள் பணியாற்றியுள்ளார்.

**பொது நலத்தொண்டு:**

மஞ்சக்கொல்லை ஊராட்சியின் முதல் தலைவராகப் பொறுப்பேற்றுத் தம் பணிகளைச் செவ்வனே ஆற்றியிருக்கிறார்கள். இவ்வூரில் இன்று சிறந்து விளங்கும் குமரன் உயர்நிலைப்பள்ளியைத் தோற்றுவிப்பதில் முனைப்பு காட்டி அதன் புரவலராக மட்டுமன்றித் தாளாளராகவும் தம் இறுதிக்காலம் வரை தம் பணிகளைச் செவ்வனே செய்து முடித்துள்ளார்.

**சமுதாயத் தொண்டு:**

இவர் தாம் பிறந்த செங்குந்த சமுதாயத்தின் முன்னேற்றத்திற்காக இடைவிடாது தம்முழைப்பை பலவகையிலும் நல்கியிருக்கிறார்கள். மதராஸ் பளையகாட் கம்பெனியில் செங்குந்தர் கல்வி நிதியை இவர் ஏற்படுத்தியுள்ளார். தென்னிந்தியச் செங்குந்த மாநில மாநாடுகள், தஞ்சை ஜில்லா செங்குந்த மாவட்ட மாநாடுகள் அனைத்திலும் பங்கு கொண்டு தம்முரையைச் சிறக்கச் செய்துள்ளனர். ஆரூர் வள்ளல் தி. நா. சபாபதி முதலியார்க்குப் பிறகு அவர் தம் வாரிசாக மாநிலச் சங்கத் தலைமைப் பொறுப்பை ஏற்றுச் செவ்வனே சங்கத்தை வழிநடத்திச் சென்றிருக்கிறார். சங்கத்தின் மூலமாக மட்டுமல்லாமல் தமது சொந்த முறையிலும் கல்வியில் ஊக்கமுடைய ஏழைச் செங்குந்தர் குல மாணவர்களுக்கு பல வகையிலும் உதவி செய்து மகிழ்ந்திருக்கிறார்.

**சமயத் தொண்டு:**

இவரது உள்ளத்தை இளமையிலேயே மிக் ஈர்த்தத்துறை ஒன்று உண்டு என்றால் அது சமயத்துறையே. அக்காலத்துச் சமயப் பெரியார்கள் பலரிடத்தும் தொடர்பு கொண்டார்கள். குறிப்பாக திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் சுவாமிகள், திரு.வி.க., வாலாஜாபாத் அப்பா மாசிலாமணி முதலியார், பெரும்புலவர் ச. தண்டபாணி தேசிகர் இலங்கை விபுலானந்த அடிகள் ஆகிய சமயச் சான்றோர்களிடத்து நெருங்கியத் தொடர்பு

கொண்டு சமய நூற் பயிற்சிகளையும், அவற்றில் சிறந்த புலமையையும் பெற்றனர். ஒவ்வோர் ஆண்டும், மாதத்திற்கு ஒரு திருமுறை என்ற முறையில் பன்னிரண்டு திருமுறைகளையும் தொடர்ந்து பயின்று நுண்மாண் நுழைபுலம் பெற்றனர். இதனால் திருமுறைகளில் ஆழ்ந்த புலமையும், தேர்ச்சியும் பெற்று விளங்கினர். தம் பிறந்த ஊரான மஞ்சக் கொல்லையில் தோற்றுவிக்கப் பெற்ற திருஞானசம்பந்தர் சபையில் பல அறிஞர்களை வரவழைத்துச் சொற்பொழிவாற்றச் செய்தனர்.

**சைவ சமயக் காவலர்:**

1987-ஆம் ஆண்டு மே மாதம் இரத்தினகிரியில் நடைபெற்ற சைவ சித்தாந்த பெருமன்றத்தின் 81-ஆம் ஆண்டு விழாவில் திருமுருக கிருபானந்த வாரியார், பால முருகனடிமை ஆகியோர் முன்னிலையில் நமது சான்றோர்க்கு 'சைவ சமயக் காவலர்' என்னும் விருதினையும் அம்பலக்கூத்தன் திருவுருவச் சிலையொன்றையும் அளித்துச் சிறப்புச் செய்தனர்.

**இறைவனடி இணைந்தது:**

சோதனைகள் பலவற்றுக்கிடையேயும் சாதனைகள் பலவற்றைப் படைத்த நமது சான்றோர் அவர்கள் 27—7—1987 அன்று இரவு இறைவன் திருவடி நீழலை அடைந்தார். செய்தியை கேள்வியுற்ற மதராஸ் பளையகாட் கம்பெனி பெருமக்களும், உற்றார்களும், மாநில, மாவட்டச்சங்கங்களின் பொறுப்பாளர்களும் பெருந்திரளாகக் கூடினர். சான்றோரின் இறுதிச் சடங்கில் அனைவரும் கலந்து கொண்டு மறைந்த அன்னார்க்குத் தத்தம் கண்ணீர் அஞ்சலியைச் செலுத்தினர்.

அன்னாரின் வழி நின்று நாமும் நம் கடமையை செவ்வனே ஆற்ற முயல்வோமாக.


16-ஆவது மாநில மாநாடு சிறக்க எங்களின்
நல்வாழ்த்துக்கள்.





☎ 2045



**வி. ஜி. எல். கம்பெனி,**

68-B, இருசப்ப செட்டித்தெரு,

கடலூர் துறைமுகம் - 607 003, தெ. ஆ. மாவட்டம்.

செங்குந்தர் குலத் தளபதி

# சேதுராம செங்குந்தர்

செக்கச் சிவந்தமேனி; அகலமான நெற்றி நிறையத் திருநீறு; சராசரி உயரம்; தும்பைப்பூ தோற்றுவிடும் வெண்மையில் கதராடை; மடித்தபடியே தோளில் படிந்த துண்டு; வாய் நிறைந்த சிரிப்பு; குறும்பாகப் பார்க்கும் பார்வை; பிறரைச் சிரிக்க வைக்கும் படியான பேச்சு; தங்க ஃபிரேம் போட்ட கண்ணாடி; இவற்றுக்கு ஓர் உருவம் தந்து பார்த்தால் அவர்தான் திருவாரூர் மடப்புரம் திரு. த. சேதுராம செங்குந்தர் ஆவார்.

வள்ளலாக வாழ்ந்த அமரர் திரு. T.N. சபாபதி செங்குந்தர் அவர்கள் சமுதாயத்தின் வழிகாட்டியாகவும் இருளகற்றும் ஒளிவிளக்காகவும் திகழ்ந்தார்கள்.

வள்ளலார் மகன் அமரர் திரு. ச. தெட்சிணாமூர்த்தி செங்குந்தர் அவர்கள்.

அன்னாரின் மூத்த மகனாகப் பிறந்தவர் நம் சேதுராம செங்குந்தர்.

3—11—1932-ல் பிறந்த நம் சேதுராம செங்குந்தர் அவர்கள் 'இளமையிற் கல்' என்பதற்கேற்ப கல்லூரிக் கல்வி வரையில் சிறப்பாகப் பயின்றார்.

புகழ்மிக்க வள்ளல் சபாபதியார் பெயர் என்பதற்கேற்ப

| | | |
|---|---|---|
| நுண்மாண் நுழை புலமும் | — | பன்மாண் பண்புநலங்களும் |
| வெல்லுஞ்சொல் வாய்மைப்பேறும் | — | நல்லோர்தம் கூட்டுறவும் |
| எல்லோர்க்கும் உதவும் இதயமும் | — | சமூக நலத் திருத்தொண்டும் |
| பிறந்தபொன் நாட்டுப்பற்றும் | — | முதிர்ந்தநல் மொழிப்பற்றும் |
| தீமையை எதிர்க்கும் திண்மையும் | — | உள்ளும் புறமும் ஒத்த நேர்மையும் |

இயல்பாகவே வாய்க்கப் பெற்றிருந்தார். கற்றார் இதயம் களிக்கும் வண்ணம் பழகக் கற்றிருந்தார்.

தன் துணைவியார் திருமதி மீனாட்சி அம்மையாருடன் இனிய இல்வாழ்க்கையை அமைத்துக் கொண்டார். இல்வாழ்வின் வெற்றிக் கனிகளாக மூன்று ஆண் மக்களையும், இரு பெண் மக்களையும் பெற்றுக் களித்தார்கள்.

செங்குந்தர் குலத் தளபதி அவர்கள் தொண்டு புரியும் ஆவல் கொண்டவராக எப்போதும் திகழ்ந்தார்கள்.

அவர்களின் தொண்டார்வத்தை நிறைவேற்றப் பல்வேறு பொறுப்புகளில் அமர்ந்து பணிபுரிந்தார்கள்.

திருவாரூரில் அரிமா சங்கம் தோற்றுவிக்கக் காரணமாக இருந்தவர்களில் (LIONS CLUB) இவரும் ஒருவர். திருவாரூர் அரிமா சங்கத்தின் சாசன உறுப்பினராகத் திகழ்ந்தார்.

அரிமா சங்கத்தின் தலைவராக - செயலாளராக - பொருளாளராக - தம் தொண்டினை இடையறாது ஆற்றி வந்தார்.

இன்று அரிமா சங்கம் இந்த அளவுக்குப் பெருந்தொண்டு புரிந்துவர இயலுகிற தென்றால் அதற்கு அமரர் D. S. அவர்கள் முக்கியமான காரணகர்த்தா ஆவார்கள்.

திருவாரூர் வ.சோ. ஆண்கள் மேல்நிலைப் பள்ளியின் பெற்றோர் ஆசிரியர் கழகத்தின் தலைவராக அமர்ந்து அரும்பணியாற்றினார்கள்.

திரு. G.R.M. மகளிர் மேல்நிலைப் பள்ளி பெற்றோர் ஆசிரியர் கழகத்தில் பொறுப்பேற்று அவர்கள் ஆற்றிய பணிகளும் ஏராளம்.

தொழில் நிருவாகத் திறனோடு அவர்கள் ஆற்றிய பணிகள் பல உண்டு.

மதராஸ் பளையகாட் கம்பெனியின் நிருவாக இயக்குநராகவும் இணை நிருவாக இயக்குநராகவும் பல்லாண்டுகள் பணி புரிந்தார்கள்.

வ.ஆ.மாவட்டத்திலுள்ள குடியேற்றம் நகரில் அமைந்த திருமகள் மில்லின் தலைவராகவும் இயக்குநராகவும் இருந்து சிறப்பாக நிருவாகம் செய்துள்ளார்கள்.

அது போலவே,

திருமால் அன்கோ மில்லின் இயக்குநராகவும் பணியாற்றியுள்ளார்கள்.

மதர் இந்தியா ஃபைனான்ஸ் மற்றும்

மதர் இந்தியா ஃபயர் அன்ட் ஜெனரல்இன்ஸ்யூரன்ஸ் கம்பெனி ஆகிய நிறுவனங்களின் இயக்குநர் பொறுப்பையும் ஏற்றுப் பணிபுரிந்துள்ளார்கள்.

தான் பிறந்த சமூகத்தின் உயர்வுக்கான செயல்களில் மிகுந்த ஈடுபாடு காட்டினார்கள்.

செங்குந்த மகாஜன சங்கத்தின் செயலாளராகப் பணிபுரிந்தார்கள். தஞ்சை ஜில்லா செங்குந்தர் கல்விச் சங்கத்தின் செயலாளராகவும் துணைத் தலைவராகவும் பொறுப் பேற்றுத் தொண்டு புரிந்துள்ளார்கள்.

திருவாரூரில் செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைவராக இருந்து அருந்தொண்டு புரிந்துள்ளார்கள்.

இவ்வாறு நம் அமரர் D.S. அவர்கள் ஆற்றிய அருந்தொண்டுகள் ஏராளம்.

நாட்டுப் பற்று மிக்க அவர்கள் தம் உள்ளத்தைப் பொதுநலத் தொண்டில் ஈடுபடுத்த அரிமா சங்கப் பணிகளில் கலந்து கொண்டார்கள்.

நிருவாகத்திறன் விளங்கப் பல்வேறு நிறுவனங்களின் பொறுப்புகளில் அமர்ந்துள்ளார்கள்.

தாம் பிறந்த செங்குந்தர் சமூக நல்வாழ்வில் திளைக்க நற்பணியாற்றினார்கள்.

நல்ல இல்லறத் தலைவராகவும், சிறந்த பொதுநலத் தொண்டராகவும், உயர்ந்த இறைப்பற்றாளராகவும் திகழ்ந்த அமரர் த. சேதுராம செங்குந்தர் அவர்கள் 9—5—91-ல் இறைவனடி சேர்ந்தார்கள். அவர்களின் நினைவைப் போற்றுவோம்.

**அமரர் சேதுராமன் புகழ் வாழ்க!**


## UNINTERRUPTED POWER SUPPLY SYSTEMS

HIGHLY ADVANCED UPS. CONCEPT WITH 15 MONTHS WARRANTY !!

*GALAXY* **UPS.**



**Revolutionary Unique Features:**

* Digital Meters
* SQUEAK the on-screen messenger
* 15 months Warranty

**With Total Solution to all types of Power problems of your:**

Computers, Hospital equipments, Process control equipments, Fax, Telex Network operations, Typesetting, DTP systems, Photo developing, Lighting.

**SINE INTERFACE DEVICES PRIVATE LTD.,**
1, 4th East Street, opp. Bus Terminus,
Thiruvanmiyur, MADRAS - 600 041.

Phone:
413899, 411800

# நெசவாளர் நேசன்

# திரு. சுத்தானந்தன்

(வாழ்க்கை வரலாறு)

—( ஈரோடு கண்ணன் )—

**செங்குந்த குலத் தோற்றம்:**

அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்து நின்று ஆனந்தத் தாண்டவம் புரியும் முழுமுதற் கடவுளாம் எம்பெருமானான சிவபெருமானின் ஒரு பாகமாக வீற்றிருந்து உலகில் துஷ்ட நிக்ரகப் பரிபாலனம் செய்து மக்களுக்கு நல்லருள் புரிந்து வரும் ஜெகன் மாதா வாகிய உமாதேவியின் பொற்பாதங்களை அணி செய்யும் சிலம்பினின்றும் உதிர்ந்த மணிகளிலிருந்து தோன்றிய நவசக்திகள் மூலம் உதித்த நவவீரர்களின் வழித் தோன்றியது தான் செங்குந்தர் குலம்.

**செங்குந்தப் பேரரசு:**

உலகைக் காத்து அருளாட்சி புரிந்து லோக நாயகியாக விளங்கும் உமாதேவியிடம் வீரவாகுவைத் தலைவராகக் கொண்ட நவவீரர்கள் குந்தப்படை பெற்று, முருகப் பெருமானின் ஆணையின்படி மானிட வடிவம் பெற்று, மண்ணுலகில் முசுகுந்தச் சோழ மன்னனிடம் படைத்தலைவராக அமர்ந்து அவர்க்குத் துணையாக இருந்த அவர்தம் வழித்தோன்றல்கள் அம்மன்னனுக்குப் பின்னர் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு செங்குந்தப் பேரரசை நிறுவிச் சிறப்புற ஆட்சி புரிந்தனர்.

**மீண்டும் வீரவாகு தோற்றம்:**

ஆதி சக்தியின் அருளால் தோன்றிய நவவீரர்களின் தலைவராகவும், மாயோன் மருகனாம் முருகப் பெருமானின் படைத் தளபதியாகவும் விளங்கிய வீரவாகுத் தேவர் தான் இம் மண்ணுலகில் மீண்டும் தோற்றம் பெற்றாரோ என எண்ணும்படியாக, விரிந்து பரந்த பொன்னிநதியெனும் காவிரியால் வளம் பெற்றுச் செழித்து வளர்ந்த செந்நெற் கழனிசூழ் திருநகராம் ஈரோடு மாநகரந் தன்னில் 1944-ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 21-ஆம் நாள் ஜெகந்நாத முதலியார் — முத்துலெட்சுமி எனும் ஆதர்ச தம்பதி யர்க்குப் பிறந்த நான்கு ஆண்மக்களில் மூத்த திருக்குமாரராகத் தோன்றியவர்தான் நெசவாளர் நேசன் எனப் புகழப்பெறும் **திரு. ஜெ. சுத்தானந்தன்** அவர்கள்.

**இளமையும், கல்வியும்:**

சுத்தானந்தன் தன்னுடைய மழலைக் கல்வியை ஈரோடு கலைமகள் கல்வி நிலையத்தின் மழலையர் பள்ளியிலே ஆரம்பித்து, ஈரோடு இளைஞர் கல்வி நிலையத்தில் தன் தொடக்கக் கல்வியைத் தொடங்கி, ஈரோடு செங்குந்தர் உயர்நிலைப் பள்ளியில் உயர்நிலைக் கல்வியைக் கற்று, தென்னாட்டின் மான்செஸ்டர் எனப்படும் தொழில் நகராம் கோவை மாநகரில் சிறப்புற விளங்கும் பி.எஸ்.ஜி. கலைக் கல்லூரியில் புகுமுக வகுப்புக் கல்வியையும், சென்னை மாநகரில் உள்ள புதுக் கல்லூரியில் அறிவியல் பட்டப் படிப்பையும் (பி.எஸ்சி.) முடித்தார்.

**வாழ்வில் வசந்தம்:**

1968–ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 24–ஆம் நாள் அவர்தம் வாழ்வில் வசந்தம் மலர்ந்தது. ஆம்! அன்று தான் அவர் தன் அருமைத் தந்தையாரின் ஆசைத் தங்கையின் மகள் — அத்தை மகள் — செல்வி வசந்தாவைத் தன் இல்வாழ்க்கைத் துணையாக ஏற்று இல்லறத்தை இனிதே தொடங்கினார்.

உலகில் எந்த ஒரு மேதையின் — அறிஞரின் சாதனையின் பின்னால் ஒரு பெண்மணி நிச்சயமாக இருப்பார் என்ற அறிஞர் தம் கூற்றுக்கு, சுத்தானந்தன் அவர்கள் பணியில் — சாதனையில் — சமூக சேவையில் திருமதி. வசந்தா அவர்கள் கொண்டிருக்கின்ற பங்கே தக்கதொரு சான்றாகும்.

**புகழும் பெருமையும்:**

> "தோன்றிற் புகழொடு தோன்றுக; அஃதிலார்
> தோன்றலிற் தோன்றாமை நன்று"

என்ற வள்ளுவப் பெருந்தகையின் வாய்மொழிக்கேற்ப புகழோடு தோன்றிப் புகழோடு வாழ்ந்து கொண்டிருப்பதற்குக் காரணம், அவர் தம் சொந்த வீட்டை மறந்து – தம் உற்ற துணையை மறந்து — தாம் பெற்ற உறவுகளை மறந்து இரவென்றும், பகலென்றும் பாராது, கண் துஞ்சாது, பசி நோக்காது பயணம் செய்து செய்து, நாட்டைச் சுற்றி சுற்றி வந்து நெசவாளர் சமுதாயத்திற்காக — செங்குந்தர் குலத்திற்காக அயராத உழைப்பையும் தளராத முயற்சியையுமே மூலதனமாகக் கொண்டு அவர் ஆற்றிய தொண்டும் — செய்த சேவையுமே என்பது எவராலும் மறுக்க முடியாத — மறைக்க முடியாத உண்மையாகும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

**மூன்று தலைமுறைகள்:**

திரு. ஜெ. சுத்தானந்தன் அவர்களின் குடும்பம் மூன்று தலைமுறைகளாக பொது வாழ்வில் ஈடுபாடும், அக்கறையும் கொண்ட குடும்பம் என்பது குறிப்பிடத்தக்கதாகும். பாட்டனார் அமரர் V.M. மொட்டையப்ப முதலியார் அவர்கள் ஈரோட்டில் முதன்முதலாக செங்குந்தர் மாநில மாநாட்டைக் கூட்டி அதனை முன்னின்று நடத்திய பெருமைக்குரியவர். தந்தையார் அமரர் மொ. ஜெகந்நாத முதலியார் அவர்கள் அரசியலிலும், கூட்டுறவுத் துறையிலும், ஆன்மீகத் துறையிலும் நாட்ட முடையவராய் இருந்தார். தன் பாட்டனார், தந்தையார் வழிவந்த திரு. சுத்தானந்தன் அவர்களுக்கு இயல்பாகவே பொதுவாழ்வில் நாட்டம் வந்தது.

**வழிகாட்டிய தெய்வம்:**

சுத்தானந்தன் அவர்களது உள்ளத்தே சேவை மனப்பான்மை என்பது இயல்பாகவே ஊறிக்கிடந்த ஒன்று. அதனை ஊற்றுப் பெருக்கெடுத்து ஓடச் செய்து, ஆர்ப்பரிக்கும் அலைகடலென பொங்கியெழச் செய்து, தமிழகம் முதல் பாரதத்தின் தலைநகராம் டெல்லி வரை தான் அங்கம் வகிக்கும் அமைப்புக்கள் சம்மந்தமாகச் செல்லுமிடங்களுக்கெல்லாம் இவரையும் தன்னுடனேயே அழைத்துச் சென்று அவ்வமைப்புக்கள் சம்மந்தப்பட்ட விவரங்களின் நுணுக்கங்களையெல்லாம் அப்போதைக்கப்போது ஆசானாக இருந்து விளக்கமாக எடுத்துச் சொல்லியும், இவருடைய அமைப்புக்கள் சம்மந்தப்பட்ட பிரச்சனைகளில் தந்தை போன்றிருந்து அறிவுரைகளையும், ஆலோசனைகளையும் இதமாக வழங்கியும், தான் அங்கம் வகிக்கும் அமைப்புக்கள் பலவற்றில் இவரையும் பங்கு பெற — அங்கம் வகிக்க உற்ற துணையாக இருந்தவர் பத்மஸ்ரீ M.P. நாச்சிமுத்து முதலியார் அவர்கள் ஆவார்.

பண்டித நேரு அவர்கள் மகாத்மா காந்தியடிகளால் என் வாரிசு என அடையாளம் காட்டப்பட்டார். அதுபோல பத்மஸ்ரீ M.P.N. அவர்கள் திரு. சுத்தானந்தன் அவர்களைத் தான் ஆற்றிவரும் சேவைகளுக்கான வாரிசாக பல்லாயிரம் மக்கள் கூடியிருந்த கூட்டத்தில் பேசியது குறிப்பிடத்தக்கதாகும்.

தனக்குப் பிறகு தான் விட்டுச் செல்கின்ற பணியை — சேவையை — தொண்டினைத் தொடர்ந்து செய்வதற்குரிய வாரிசாக உருவாக்கியும் வழிகாட்டி வாழவைத்த பெரியவர் கைத்தறிக் காவலர் பத்மஸ்ரீ M.P.N. அவர்களை வணக்கத்திற்கும் போற்றுதலுக்குமுரிய தெய்வமாக வைத்து என்றும் அவரை வழிபட்டு வருகிறார்.

ஆசானாக — தந்தையாக — நண்பனாக இருந்து வழிகாட்டிய பெரியவர் இன்று தெய்வமாக நின்று இவரை வழிநடத்திச் செல்கிறார்.

இவர் இன்று ஆற்றுகின்ற தொண்டிற்கும், பெற்றுள்ள பெயருக்கும் புகழுக்கும், அடைந்துள்ள வாழ்வின் உயர்வுக்கும் அவரே காரணம். சுருக்கமாகச் சொல்லப்போனால் பெரியவர் திரு. M.P.N. இல்லையென்றால் திரு. சுத்தானந்தன் இல்லை என்று கூறினால் அது மிகையாகாது.

**நெசவாளர் நேசன்:**

நெசவாளர்களின் பிரச்சனையும், அவர்தம் முன்னேற்றமுமே திரு. சுத்தானந்தன் அவர்களது தாரக மந்திரமாக — வாழ்க்கையின் நிலையானதொரு பகுதியாக — அவரது இலட்சியத்தின் வலுவானதொரு கூறாக — அவர்தம் சமூக சேவையின் முறையானதொரு பக்கமாகச் சிறப்பானதொரு இடத்தினைப் பெற்றிருந்தது. நெசவாளர் சமுதாயத்தின் மீது அவர் கொண்டிருந்த ஆர்வமும், அக்கறையும், தீராத பற்றும், மாறாத பாசமும் அவர் ஆற்றி வருகிற தொண்டிற்கெல்லாம் சிகரமாக — மணி மகுடமாக முதன்மை பெற்றுத் திகழ்கிறது. அவர் பேசுகின்ற பேச்சிலெல்லாம் — விடுகின்ற மூச்சிலெல்லாம் — ஆற்றுகிற தொண்டிலெல்லாம் 'நெசவாளர்' என்ற ஒலியே பிறந்தது — பிறக்கிறது என்பது குறிப்பிடத்தக்கதொரு கூறாகும். அது அவர்தம் உயிர் மூச்சாக விளங்கி வருகிறது என்பது சிறப்பானதொரு அம்சமாகும்.

தமிழகம் முழுவதிலும் உள்ள எந்த ஒரு நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்திற்கான பிரச்சனையானாலும் — தனியொரு நெசவாளர் பிரச்சனையானாலும் — அதுவும் மிகவும் சிக்கலான, தீர்க்க முடியாத பிரச்சனையானாலும் சாதிமத இன வேறுபாடு கருதாமல் அப்பிரச்சனைகளைத் தீர்ப்பதற்குத் தக்க ஆலோசனைகளை வழங்கியும், சிலபோது தானே முன்நின்று அப்பிரச்சனைகளைத் தீர்த்து வைப்பதில் முயற்சிகளை மேற்கொண்டு தக்க நடவடிக்கைகளை எடுத்தும் நெசவாளர் சமுதாயத்திற்காகவே தன் வாழ்நாளை அர்ப்பணித்து நெசவாளர்களின் நேசனாகத் திகழ்கிறார்.

ஈரோடெக்ஸ்:

திரு. சுத்தானந்தத்தின் தந்தையாரான திரு. ஜெகநாத முதலியார் அரியதொரு முயற்சியை மேற்கொண்டு 20 உறுப்பினர்களைச் சேர்த்து ஈரோடு நெசவாளர் கூட்டுறவுச் சங்கம் (ஈரோடெக்ஸ்) என்றதொரு அமைப்பினை 1947-இல் தொடங்கி தம் உழைப்பின் பெரும்பகுதியை இதற்காகவே செலவிட்டுச் சிறுகச் சிறுகப் பெருகச் செய்தார். அவர் காலத்தில் நெசவாளர்களுக்காக "ஜெகந்நாத புரம்" என்ற பெயரில் 50 வீடுகள் கொண்ட ஒரு நெசவாளர் குடியிருப்பை உருவாக்கிச் சாதனை புரிந்தார்.

தந்தையார் தொடங்கிய ஈரோடெக்ஸின் தலைவராக 1975-இல் பொறுப்பேற்று 1989 முடிய இருந்த காலத்தில் தம் தந்தையின் வழிநின்று ஈரோடெக்ஸ் ஆல் போல் தழைத்து அருகு போல் வேரோடி சீரோடும், சிறப்போடும் செயல்பட அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டார்.

தமிழகத்தின் பல ஊர்களிலும் மற்றும் ஆந்திரா, கர்நாடகம் போன்ற மாநிலங்களிலும், ஈரோடெக்ஸில் உற்பத்தியாகும் சரக்குகளை விற்பனை செய்வதற்கு முகவர் உரிமையைத் தந்து ஈரோடெக்ஸ் சரக்குகளின் விற்பனையைப் பெருக்குவதற்கு வழிமுறைகளை வகுத்தார்.

ஈரோட்டில் மட்டும் சிறப்புப் பெற்றிருந்த ஈரோடெக்ஸின் பெயரையும், புகழையும் பாரதம் முழுவதும் பரவுவதற்குரிய முயற்சிகளை விடாது மேற்கொண்டார். அந்த வகையில் அகில இந்திய அளவில் ஈரோடெக்ஸின் துணிகள் தரத்தில் சிறந்தது — உயர்ந்தது — உறுதியானது என்ற நிலையானதொரு இடத்தினையும் சிறப்பானதொரு பெயரினையும் பெற அயராது பாடுபட்டு அதில் வெற்றியும் கண்டார்.

இவர் 'ஈரோடெக்ஸ்' தலைவராக இருந்தபோது தன் தந்தையின் வழியில் நெசவாளர்களுக்கென 'சுத்தானந்தன் நகர்' என்ற பெயரில் 109 வீடுகள் கொண்ட நெசவாளர் குடியிருப்பை உருவாக்கினார். தற்போது சோலாரில் 142 வீடுகள் கொண்ட மற்றுமொரு நெசவாளர் குடியிருப்பை உருவாக்க ஆயத்த வேலைகள் முடிந்து வீடுகள் கட்டத் தொடங்கும் நிலையில் உள்ளன. இந்தக் குடியிருப்பு உருவானதும் 95 விழுக்காடு ஈரோடெக்ஸ் நெசவாளர் குடும்பங்கள் சொந்தமாக வீட்டைப் பெற்றுவிட்ட பெருமையைப் பெறும்.

தான் தலைவராக இருந்தபோது மாநில அளவில் உள்ள அனைத்து நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களிலேயே மிகச் சிறந்த கூட்டுறவுச் சங்கம் என ஈரோடெக்ஸ் மூன்று முறையும், மாவட்ட அளவில் பல முறைகளும் தேர்ந்தெடுக்கப்பட்டுச் சிறப்பிக்கப்படும் பெருமையினைப் பெறச் செய்தார்.

இதே போன்று தான் ஈரோடு திருநகர் குடியிருப்பு வீடு கட்டும் கூட்டுறவுச் சங்கத்தின் தலைவராக இருந்த போது அச் சங்கமானது மாவட்ட அளவில் சிறந்த சங்கமென்ற சிறப்பினைப் பெறச் செய்தார்.

சுருங்கச் சொன்னால், 14 ஆண்டுக் காலம் இவர் ஈரோடெக்ஸ் தலைமைப் பொறுப் பேற்று நடத்திய காலத்து அதன் மேம்பாட்டிற்காக — உயர்விற்காக — முன்னேற்றத் திற்காக உழைத்த உழைப்பு — செய்த பணிகள் — புரிந்த சாதனைகள் விவரிக்கின் பெருகும். அவை சொல்லிற்கும் எழுத்திற்கும் அடங்கா.

**கலைமகளின் பிரதிநிதி:**

எழுத்தறிவித்தல் ஒன்றே கோடிப் புண்ணியம் தரும் என்ற பைந்தமிழ்ச் சாரதியான பாரதியாரின் கூற்றுக்கு ஏற்ப, கல்வித் தொண்டில் தன் முத்திரையை அழுத்தமாகவும், வித்தியாசமாகவும் பதித்தவர் திரு. சுத்தானந்தன் அவர்கள்.

பெரியார் மாவட்டம் சென்னிமலைக்கருகில் 100 ஏக்கர் நிலத்தில் M.P. நாச்சிமுத்து, M. ஜெகநாதன் பல்தொழில் பயிலகத்தின் (பாலிடெக்னிக்) தாளாளராகவும் இருந்து சிறப்புடன் செயல்படச் செய்துள்ளார்.

இதில் குறிப்பிடத்தக்கச் சிறந்ததொரு அம்சம் என்னவெனில் இப்பயிலகத்தில் சேரும் எந்த ஒரு மாணவனிடமும் நன்கொடை என்ற பெயரில் ஒரு ரூபாய் கூட வாங்காமல் தமிழகத்தில் இது போன்றுள்ள விரல்விட்டு எண்ணிவிடக்கூடிய கல்வி நிலையங்களில் இப்பயிலகம் முதன்மை பெற்று விளங்குகிறது என்று கூறினால் உண்மை. இது வெறும் புகழ்ச்சி இல்லை.

சைவப் பெரு வள்ளல் V.V.C.R. முருகேச முதலியார், இருமொழிச் சொற்கொண்டல் 'ஐயா' S. மீனாட்சிசுந்தர முதலியார் மற்றும் செங்குந்தர் குலப் பெருமக்களின் நன் முயற்சியால் தொடங்கப்பட்டு சீரோடும், சிறப்போடும் நடைபெற்று வரும் ஈரோடு செங்குந்தர் மேல்நிலைப்பள்ளியின் தாளாளராக 1987-இல் பொறுப்பேற்ற பிறகு நன்கொடை முறையை நீக்கி 'மெரிட்' முறையை அமுல்படுத்தி மாணவர்கள் கல்வியிலும், ஒழுக்கத்திலும் சிறப்புற்று விளங்கத் துணை நின்றார்.

ஈரோட்டுக்கருகில் வள்ளிபுரத்தாம் பாளையத்தில் தன் பாட்டனார் மொட்டையப்ப முதலியார் பெயரில் நடைபெறும் நடுநிலைப்பள்ளி மற்றும் செங்குந்தர் மெட்ரிகுலேசன் பள்ளிகளின் தாளாளராகவும் இருந்து சிறப்புடன் செயலாற்றி வருகிறார்.

**சமுதாயப் பாதுகாவலர்:**

பெரியவர் M.P.N. தலைவராக இருந்து கட்டிக்காத்த தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் மாநிலத் தலைவராகப் பொறுப்பேற்ற பிறகு தமிழகம் முழுவதிலும் ஏராளமான கிளைச் சங்கங்களைத் தோற்றுவிக்கச் செய்ததோடு தமிழகமெங்கும் சமுதாயத்தின் சார்பாக சமூக மற்றும் திருமண மண்டபங்கள், கல்வி நிலையங்கள், மருத்துவமனைகள் தோற்றுவிக்க செங்குந்தரிடையே ஊக்கமும், உற்சாகமும் அளித்தார்.

சங்கத்தின் சார்பாகப் பாவேந்தர் பாரதிதாசனார் நினைவு அறக்கட்டளை ஒன்று நிறுவப்பட்டு அதன் மூலம் செங்குந்தர் குலக் குழந்தைகள் தொழில் கல்வி கற்க உதவித் தொகை அளிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்துள்ளார்.

தமிழகம் முழுவதும் இடைவிடாது சுற்றுப் பயணம் செய்து செங்குந்தர்கள் ஒவ்வொருவருடைய மனதிலும் நியாயமான சமுதாய உணர்வைத் தோற்றுவித்துக் கிளைச்சங்கங்களை ஏற்படுத்தி அவற்றைத் தலைமைச் சங்கத்தோடு தொடர்பு கொள்ளச் செய்து தற்போதைய காலக்கட்டத்தில் செங்குந்தர்களிடையே ஒற்றுமை எந்த அளவிற்கு அவசியம் என்பதை வலியுறுத்தி, அவர்கள் மனத்தில் நம் இனத்தவர் ஒருவருக்கொருவர் தம்மாலியன்ற உதவிகளைச் செய்ய முன்நிற்க வேண்டும் என்ற எண்ணத்தை உருவாக்கினார்.

செங்குந்தர் இனத்தவரைப் பிற்பட்டவர் பட்டியலிலிருந்து மிகவும் பிற்பட்டவர் பட்டியலில் சேர்க்க வேண்டும் எனத் தமிழக அரசிடம் இடைவிடாது தொடர்ந்து வலியுறுத்தி வருகிறார். அது வெற்றி பெறும் நிலை வெகுதூரத்தில் இல்லை என்பதை நாமறிவோம். அதற்கான முயற்சிகளைத் தொடர்ந்து செய்து வருகிறார்.

வன்முறை வழியைப் பின்பற்றாமல் அமைதியான சாத்வீக முறையிலேயே செங்குந்தர்க்குரிய அனைத்துச் சலுகைகளையும் முறையாகவும் படிப்படியாகவும் அரசிடமிருந்து பெற்று விட முடியும் என்ற அசையாத நம்பிக்கை அவர் உள்ளத்தே நிலைத்து நின்று நிலவுகிறது.

**ஆன்மீகம்:**

காஞ்சிபுரம் தொண்டைமண்டல ஆதினத்துக் குருமகா சன்னிதானம் தவத்திரு. ஞானப்பிரகாச சுவாமிகளிடம் 1989-ஆம் ஆண்டு சமய தீட்சை பெற்றார். தமிழகமெங்கும் உள்ள பல புனிதத் திருத்தலங்களுக்குப் பலமுறை பாதயாத்திரை சென்று வந்துள்ளார். இறுதியாக 1988-இல் ஈரோட்டிலிருந்து பழநி, மதுரை, வழியாக திருச்செந்தூருக்குப் பாதயாத்திரையாகச் சென்று திருச்செந்தூர் முருகப்பெருமானின் அருளுக்குப் பாத்திரமானார்.

**விருதுகள் — பட்டங்கள் — பதவிகள்:**

பூம்புகார்ப் பொலங்கொடியான கண்ணகியின் வண்ணப் பொற்பாதங்களைச் சேர்ந்து அணி செய்தமையால் சிலம்புகள் அழகு பெற்றன என்பார் இளங்கோவடிகள். அத்தன்மையதாக, பட்டங்களையும், பதவிகளையும் என்றும் இவர் தேடிச் சென்றதில்லை. அவைகள் தான் தாமாகவே தேடிவந்து அவரைச் சரணடைந்து விடும் பெருமை பெற்றன.

இவர் பெற்ற விருதுகள் பலப்பல. அவற்றுள் ஈரோடெக்ஸ் மூலமாகப் பொருளாதார மேம்பாட்டிற்காக அவர் ஆற்றிய தொண்டிற்கென 1985-ஆம் ஆண்டு அப்போதையக் குடியரசுத் தலைவர் மேதகு. கியானி ஜெயில்சிங் அவர்களால் ''உத்தியோக ரத்னா'' என்ற விருது வழங்கிக் கௌரவிக்கப் பட்டதைப் பெரிதும் மேலானதாகக் கொள்ளலாம்.

நெசவாளர் சமுதாயத்திற்காக இவர் ஆற்றிய ஆற்றுகிற தொண்டிற்காகப் பேரூர் ஆதினத்துக் குருமகா சன்னிதானம் அருள்மிகு சாந்தலிங்க ராமசாமி அடிகளார் அவர்களால் 'நெசவாளர் நேசன்' என்ற பட்டம் வழங்கப்பட்டதைத் தம் வாழ்வின் பெரும்பேறாகக் கருதுகிறார்.

தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களின் கூட்டமைப்பின் தலைவர்; மேற்கு மண்டல விழியிழந்தோர் சங்கத்தின் தலைவர்; தமிழ்நாடு விழியிழந்தோர் சங்கத்தின் புரவலர்; பரோடா பெட்ரோபில்ஸ் கூட்டுறவின் இயக்குநர்; நூல்விலை நிர்ணயக் கமிட்டி, அகில இந்திய வானொலியின் தொழில்துறை நிகழ்ச்சிகளின் ஆலோசனைக் கமிட்டி,

பெரியார் மாவட்ட வணிகவரி அறிவுரைக் கமிட்டி, பெரியார் மாவட்டக் கைத்தறித் துறை அறிவுரைக் கமிட்டி என இவர் வகித்த — வகிக்கும் பதவிகளைப் பட்டியலிட்டுக் கூறப் புகுந்தால் அதனால் பக்கங்கள் பலவாகும் என்பதனால் குறிப்பிட்ட ஒரு சில மட்டுமே இங்குக் கூறப்பட்டுள்ளன என்பதனை நினைவிற் கொள்ள வேண்டும்.

**சோதனையும், சாதனையும்:**

மேற்குறிப்பிட்டுள்ள பணிகளையும், சேவைகளையும் இவர் எந்தவித உள்நோக்கமுமின்றிச் சிறிதும் தன்னலமற்ற முறையில் மக்கள் தொண்டே மகேசன் தொண்டு எனக் கருதி ஆற்றுகிற போது இவர் சந்தித்த இன்னல்கள் — இடையூறுகள் — தடங்கல்கள் — முட்டுக்கட்டைகள் — அர்த்தமற்ற அவதூறுகள் — நியாயமற்ற அரசியல் குறுக்கீடுகள் — முறையற்ற வெறுப்புக்கள் — தனி மனித மனமாச்சரியங்கள் அத்தனையும் ஒரு பொருட்டாக மதியாது, "போற்றுவார் போற்றட்டும்; புழுதிவாரித் தூற்றுவார் தூற்றட்டும்; எதுவரினும் அஞ்சேன்" என்ற கவியரசு கண்ணதாசனின் கூற்றுக்கேற்ப மனவுறுதியோடு துணிந்து நின்று, பொறுமையின் சிகரமாகத் தொடர்ந்து தன்பணிகளை இடைவிடாது செய்து வருகிறார்.

**பல்லாண்டு வாழ்க:**

சுத்தானந்தன் என்ற பெயர் நெசவாளர்களின் நெஞ்சில், நெசவிருக்கும் வரை நினைவில் இருக்கும். நெசவாளர் சமுதாயம் — செங்குந்தர் குலம் என்ற இரண்டையும் தன் இரு கண்களாகக் கொண்டு, பெரியவர் கைத்தறிக் காவலர் தெய்வத்திரு M.P. நாச்சிமுத்து முதலியார் அவர்களின் வழிநின்று தம் பணியை — சேவையை — தொண்டினைத் தொடர்ந்து செய்து வரும் சுத்தானந்தன் அவர்கள் நீலமணிமிடற்று ஒருவன்போலக் காவிரியாற்று மணலினும் பலவாகப் பல்லாண்டுக் காலம் வாழ்க என எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திப்போமாக!

*வாழ்க !* *வளர்க !*


**மாநாடு சிறக்க நல்வாழ்த்துக்கள்!**



**T. A. நடேச முதலியார்**  **T. N. குணசேகரன்**

திருவேங்கடசாமி வீதி, ஈரோடு - 638 001.

பத்தாயிரம்

ரூபாய் 10000அளித்த – வள்ளல் பெருந்தகை

திரு M. எத்திராஜ் செங்குந்தர்



தொழிலதிபர், சென்னை

திருமகள் மில்ஸ், குடியாத்தம்

64 ஆவது நாயன்மார் செங்குந்த குலகுரு



டாக்டர், திருமுருக கிருபாணந்த வாரியார் சுவாமிகள்

# மன்னை மாமணி

புலவர் மாணிக்க கணபதி, M.A., B.L., B.Ed., மன்னார்குடி

**மன்னைப் பெருமகன்:**

தஞ்சைத் தரணியில் தன்னிகரில்லாப் புகழ்மிக்க மாநகர் மன்னார்குடி; பாமணியின் கரையில் அமைந்தது. நகரின் நடுவில் பெரியகோவில் ஸ்ரீ வித்யாராஜகோபாலன் குடி கொண்டு அருள் பாலிக்கிறார். தெட்சிணத் துவாரகை என்னும் பெருமை கொண்டது. அகிம்சாமூர்த்தி அண்ணல் காந்தியை வரவேற்ற புகழுடையது. தென்னாட்டுப் பர்தோலி என்ற பாராட்டினைப் பெற்றது. அமைச்சர்கள் நாடாளுமன்ற சட்டமன்ற உறுப்பினர்கள், நீதிபதிகள் போன்ற சான்றோர்களை ஈன்றெடுத்த சிறப்பு மன்னைக்கு உண்டு. கட்சி வேறுபாடின்றி நகரின் நலனே முதன்மை எனக்கொண்டு பணியாற்றிய பல பெரியோர்களை அவ்வப்போது தோற்றுவித்துக் கொண்டிருப்பது. இத்தகைய தன்னலம் கருதாத சான்றோர் களில் ஒருவராக மன்னை நகராட்சி மன்றத்தின் முன்னாள் தலைவராக — தேசப் பற்றுடையவராக — தொண்டுள்ளம் நிறைந்த தூய வீரராக — செங்குந்த குலச் செம்மலாக — தஞ்சை மாவட்டச் செங்குந்த மகாஜன சங்கத்தின் முதல் தலைவராக — பொதுநலத் தொண்டராக விளங்கியவரே மன்னைப் பெருமகன் என்று போற்றப்பெற்ற பெரி. இராம. நடராஜ செங்குந்தர் அவர்கள்.

**மன்னைப் பெருமகன் தந்த மாமணி:**

பெரி. இராம. நடராஜ செங்குந்தர் நுட்பமான அறிவுடையவர், பேச்சுத் திறனாளர் வள்ளல் சபாபதியாரிடம் பேரன்புடையவர், குன்னியூர் சிவசுப்பிரமணிய ஐயரிடம் பெரு நட்புடையவர், சுதந்தர வேள்வியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டவர், நகராட்சி மன்றத்தின் தலைவராக அமர்ந்து நல்ல செயல்களை ஆற்றியவர், சமயப்பற்றாளர், சமூகத் தொண்டர், தீண்டாமை ஒழிப்பில் முன்னின்றவர், தன் குடும்பத்தில் ஒற்றுமைத் திருமணத்தை செய்து வழிகாட்டியவர், இத்தகு பெரியாரின் அருமைத் துணைவியராக அமைந்து அவரது நல்ல செயல்களுக்குத் துணை நின்று மெருகூட்டியவர் பெருமைக்குரிய அன்னத்தம்மாள் அவர்கள் ஆவர். அம்மையார் தனது பெயருக்கேற்றவகையில் வந்தவர்க் கெல்லாம் அருமையான விருந்திட்டு அகமகிழ்வர். எல்லா வளங்களும் அமைந்த இவர் களுக்கு ஏக்கம் ஒன்று உண்டு. தங்களுக்குப் பின்னால் தமது அறச் செயல்களை நடத்த மகவொன்று இல்லையே என்பதுதான் அந்த ஏக்கம். மன்னை கைலாச நாதர் கோவிலில் முன்மண்டபம் அமைத்துத் தந்த மன்னைப் பெருமகனின் தமையனார் பழநியாண்டி செங்குந்தர், தாய்வழிப் பாட்டனார் மணக்குடி மன்னன் செங்குந்தர், ஆகியோருக்கும் இந்த மனக்குறை உண்டு. பெரிய கோவிலில் ஸ்ரீ சந்தானராஜகோபாலனிடத்தில் மன்னைப் பெருமகனார் உருகிவழிப்பட்ட முகுந்தா அஷ்டகத் தோத்திரத்தின் பலனாக 22-1-1926-இல் ஆண்மகவொன்றினைப் பெற்றார்கள். ஸ்ரீ சந்தானராஜகோபாலனின் இன்னருளால்

பிறந்தமையால் பெற்றோர் சந்தானராஜகோபாலன் என்று பெயரிட்டு மகிழ்ந்தார்கள். அவர்களை ஆர்.என்.எஸ் என்று அன்போடு அழைத்து நாம் அனைவரும் பூரிப்பு அடை கின்றோம். தனது சிறந்த ஒழுக்கத்தாலும் தன்னலம் கருதாதன்மையாலும், சான்றாண் மையாலும், படிப்படியாக உயர்ந்தார், ஆக்கூர் அண்ணலாருக்குப் பிறகு நமது மாவட்டச் சங்கத்தின் மூன்றாவது தலைவராக அமர்ந்தார். சீரிய பணிகளை நேரிய முறையில் செய்து நமது செங்குந்தர் குலத்தின் மாமணியாகத் திகழ்கிறார்.

## இளமையில் இனிய திருமணம்:

ஆர்.என்.எஸ். அவர்கள் இளமையிலேயே நல்ல சுறுசுறுப்பானவர், பெற்றோரின் உற்றாரின் அன்புக்குப் பாத்திரமானவர், மன்னை இராஜாம்பாளையம் தொடக்கப் பள்ளியில் சேர்ந்தார், பின்பு மன்னை தேசிய உயர்நிலைப் பள்ளியில் உயர்நிலைக் கல்வியை முடித்தார். அப்போதைய தலைமை ஆசிரியர் பெருமைக்குரிய எஸ். வைத்திய நாதய்யர் அவர்களின் அன்புக்குள்ளாகி நல்ல பண்புள்ள மாணவர் என்று பாராட்டப் பெற்றார். தொடர்ந்து குடந்தை அரசினர் கலைக் கல்லூரியில் இண்டர்மீடியட் படித்தார், வயது பத்தொன்பது அருமைத்தாயார் அன்னத்தம்மாள் நமது மாமணியின்மீது வைத்த பாச உணர்வால் உடனடியாகத் திருமணம் செய்து, அவ்வினியக் காட்சியைக் காண வேண்டும் என்று கருதினார்கள். செல்வத்தோடும் சிறப்போடும் இருந்த நாகைவட்டம் இலுப்பூர் திருமிகு. சிதம்பர செங்குந்தர், திருவாட்டி மீனாட்சி அம்மாள் ஆகிய நல்லன்பாளர் களின் மகள் சாரதாம்பாளை மனைவியாகத் தேர்ந்தெடுத்தார்கள். தாயாரின் அன்புக்கும் தந்தையின் மனக்கருத்துக்கும் என்றும் மாறாத ஆர்.என்.எஸ். அவர்கள் திருமணத்துக்கு தன் இசைவினைத் தந்தார்கள். மஞ்சக்கொல்லைச் சான்றோர் இராம. சம்பந்தமூர்த்தி செங்குந்தர் அவர்களின் வாழ்த்துரையுடன் திருமணம் இனிதாக நிகழ்ந்தது. கல்வியைத் தொடர வேண்டும் என்ற எண்ணமிருந்தும், மகனும் மருமகளும் தங்களுடன் இல்லத்திலேயே இருக்கவேண்டும் என்ற தாயின் அன்பான விருப்பத்தால் இயலவில்லை. எனவே பெற்றோர் களின் நல்லறங்களுக்குத் துணை நின்றார்கள்.

## நன்மக்கட் செல்வங்கள்:

இராமலிங்கம், பாலசுப்பிரமணியன், இரத்தின சபாபதி, ஆகிய அன்பில் சிறந்த புதல்வர்களைப் பெற்றெடுத்தனர், பிறந்த குடும்பத்தின் பெருமையினைப் பேணிக்காக்கும் செல்வம் மீனாட்சி, சுந்தரம், விஜயலெட்சுமி, சுமத்திராதேவி, மைதிலி ஆகிய பண்பார்ந்த நல்ல புதல்வியர்களையும் பெற்றெடுத்தனர்.

## துயரத்தின் உச்சியில் தூய்மை:

வயது நாற்பது துன்பம் என்பதைக் கேட்டறியாத கண்டறியாத நிலைமையில் வாழ்ந்தவர் நம் ஆர்.என்.எஸ். மைதிலியை ஈன்ற இரண்டொரு நாட்களில் கருணையின் சின்னமாக விளங்கிய துணைவியார் கடுமையான நோய்க்காளாகி 6—8—1965-இல் அனைவரையும் ஆறாத்துயரில் ஆழ்த்திவிட்டு விண்ணுலகு அடைந்தனர். நாட்கள் எண்ணிக்கையில் சிலவே நகர்ந்தன, நமது ஆர்.என்.எஸ். அவர்களின் இரண்டாம் திருமணத்தைப் பற்றி உறவினர்கள் சற்றே சிந்திக்கலானார்கள் மாமணியின் பண்புக்கு அவாவுற்ற பலரும் பெண்தர பெருவிருப்புற்றனர். அனைத்தையும் நன்கு உணர்ந்த அருமை மாமணி அமைதியான நிலையில் நல்ல முடிவினை எடுத்தார் மனைவிமீது கொண்ட

நல்லன்பு, குழந்தைகள் மீது வைத்த பாசம், அவர்களின் எதிர்கால வாழ்வு மைத்துனர்கள் தன்மீது வைத்திருக்கும் மதிப்பு ஆகியவற்றை உணர்ந்து நகரத்தில் தங்கள் குடும்பத்திற்கு அமைந்த பெருமை — தனது இயல்பு எல்லாவற்றையும் எண்ணிப்பார்த்தார் இரண்டாம் திருமணத்திற்கு இடமே இல்லாத வகையில் எத்தனையோ மைல்களுக்கு அப்பாலே அதனை உதறித் தள்ளிவிட்டார். கண்ணீரை உள்ளடக்கினார், கடமைகளைத் தொடர்ந்தார் தாய் சாரதாம்பாள் இருந்தால் தன் குழந்தைகளை எவ்வாறு காப்பாரோ அதுபோலவே தனது பெற்றோர்களின் பரிவாலும் துணையாலும் குழந்தைகளை சிறந்தமுறையில் வளர்த்தார்கள்.

"சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு"

என்ற வள்ளுவரின் வாக்கிற்கு எடுத்துக் காட்டாகத் திகழ்ந்தார். எந்தவித சிறுமைக்கும் தன்மனதைப் பறிகொடுத்ததே இல்லை என்பதை மன்னை அறியும்! மன்பதையும் உணரும்.

**சமூகத் தொண்டில் சந்தான ராஜகோபாலன்:**

சந்தான ராஜகோபாலனார் இளமையிலிருந்தே நம் குலத்தினர்மீது பற்றுடையவர், தந்தையின் வழிநின்று தொடக்கத்திலிருந்தே மாவட்டச் சங்கத்தின் வளர்ச்சிக்குப் பாடு பட்டு வருபவர். ஏறத்தாழ பன்னிரண்டு ஆண்டுகள் அதன் துணைத் தலைவராக இருந்து அனுபவம் பெற்றவர். 26—7—1981-ல் சான்றோர் இராம. சம்பந்தமூர்த்தி செங்குந்தர் தலைமையில் வைத்தீஸ்வரன் கோவிலில் பொதுக்குழு கூட்டம் நிகழ்ந்தது. அனைவரின் ஏகமனதான ஒருமித்த அன்போடு ஆக்கூர் அண்ணலின் மறைவுக்குப் பிறகு மாவட்டச் சங்கத்தின் மூன்றாம் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதன் பின்பு மூன்று முறை நடந்த தலைவர் தேர்தலிலும் மாமணியின் நேரிய பணிகளைப் பாராட்டி அனைவரும் ஒருமித்த அன்போடு அவர்களையே தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். பெரியோர்களின் நல்ல பாராட்டுகளுடன் ஒன்பது ஆண்டுகளாக தன்னலம் பாராது செயலாற்றி வருகிறார். சேலம் — அம்மாபேட்டையில் நிகழ்ந்த மாநில சங்கப் பொன்விழாவில் வள்ளல் சபாபதி யாரின் உருவப்படத்தை திறந்து வைத்து இனிய உரையாற்றியது நமது நெஞ்சில் பதிந்திருக்கிறது. 3—2—84இல் மாநிலச் சங்கத்தின் துணைத் தலைவராகப் பொறுப்பேற்று தற்போது அதன் புரவலராக இருந்து ஆலோசனைகள் வழங்குகிறார். சென்னைச் சமூகப் பொருளாதாரத் தொண்டு மன்றத்தின் ஆதரவாளராகவும் அமைந்து அரும்பணி யாற்றுகிறார்.

மாவட்டச் சங்கத்தின் தலைமைப் பொறுப்பில் அமர்ந்த பின்பு கர்மயோகி, செங்குந்த குலச் செம்மல் ச.கு.பா. பழனிவேல் அவர்களின் பெருந்துணையோடு புதிதாக கிளைச் சங்கங்களைத் தோற்றுவித்து அச்சங்கங்களை வளப்படுத்தியிருக்கிறார். வள்ளல் சபாபதியின் நூற்றாண்டு விழாவை திருவாரூரிலும் மன்னைப் பெருமகனாரின் நூற்றாண்டு விழாவை மன்னையிலும் மிகச் சிறப்பாக நடத்திக் காட்டி இருக்கிறார்.

ஒற்றுமை திருமணத்தினை வற்புறுத்திச் சொல்லி வந்தார், சொன்னவாறே தமது பிள்ளைகளுக்கும் செய்து வைத்து, நமக்கு முன்னோடியாகத் திகழ்பவர். எஸ்.எஸ்.எல்.சி. தேர்வில் முதன்மையான மாணவர்க்கு தந்தையாரின் நினைவாக வெள்ளிப்பதக்கம் வழங்கி ஊக்கப்படுத்தி வருவது நாம் அறிந்ததே! கவிச் சக்கரவர்த்தியின் மணக்குடியில் இரண்டு ஏழை மாணவர்களுக்கு நாள்தோறும் உணவு அளிப்பதற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்.

22—1–86-இல் அறுபதாம் ஆண்டு நிறைவினைப் பெற்றார். மாவட்ட சங்கம் 28—6—86-இல் சீர்காழியில் அதற்கென விழா ஒன்று ஏற்பாடு செய்து மாமணி அவர்களின் பண்பியல்புகளையும், அரும் பணிகளையும் பாராட்டி மகிழ்ந்தது. நமது பெருமக்களின் அன்போடும் ச.கு.பா. பழநிவேல் அவர்களின் துணையோடும் மன்னைப் பெருமகனாரும், ஆக்கூர் அண்ணலாரும், வள்ளல் சபாபதியாரின் நல்ல எண்ணங்களை நிறைவேற்றி வந்ததைப் போலவே அவர்களின் வழியிலே நின்று செயலாற்றி வருகிறார். மாவட்டச் சங்கமும் தழைத்து இனிது வளர்ந்து வருகிற இனிய இந்த வேளையில் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் 16-ஆம் சமூக, நெசவாளர், இளைஞர், மகளிர் மாநில மாநாட்டை குடந்தையில் நடத்தி மகிழ்கிறது.

**பொதுநலத் தொண்டு:**

முன்னாள் சட்டமன்ற உறுப்பினர், முன்னாள் மன்னை நகர மன்றத் தலைவர், காந்தியத் தொண்டர், தேசபக்தர், திருப்பணிச் செம்மல், சுவாமிமலைக்கோயில் அறங் காவலர் குழுத்தலைவர், மன்னை தேசிய மேல்நிலைப் பள்ளியின் தாளாளர், பெருமைக் குரிய சிவத்திரு. டி.எஸ். சுவாமிநாத உடையார் அவர்களின் நெருக்கமான அன்பினைப் பெற்றவர். அவர்கள் காட்டிய வழியிலே நிற்பவர், அவர்களின் விருப்பத்தினை ஏற்று தான் பயின்ற மன்னை தேசிய மேல்நிலைப்பள்ளியின் நிர்வாகக் குழு உறுப்பினராக அமைந்து அதன் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்து வருகிறார். பதினாறு கிளைகளுடன் இயங்கிய மன்னார்குடி பேங்க் லிமிடெட்டின் இயக்குனரராக இருந்து பல ஆண்டுகள் பணியாற்றி, பின்பு அவ்வங்கி இந்தியன் வங்கியுடன் இணைவதற்கும் துணை நினறவர். இவ்வாறு நமது தலைவர் ஈடுபட்ட பொதுநலத் தொண்டுகள் பற்பல உண்டு.

**அரசியலில் ஆர்.என்.எஸ்.**

தேசிய உணர்வு மிக்கவர், மிகச் சிறந்த காந்தியவாதி, அண்ணல் காந்தி உணர்த்திய நெறிகளில் அழுந்தப் பதிந்தவர், அவரது அடிச்சுவட்டில் அணுவளவும் மாறாதவர், திரு. டி.பி. சிங்காரவேலு உடையார் அவர்கள் மன்னை நகரக் காங்கிரஸ் கட்சியின் தலைவரானார். அப்போது ஆர்.என்.எஸ். துணைத்தலைவராக இருந்து கட்சிப்பணிகளில் ஈடுபட்டார். முன்னாள் பாரதப்பிரதமர் திருமதி இந்திராகாந்தியைச் சிறை செய்தபோது நடந்த எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்து கொண்டு, திருச்சி மத்திய சிறையில் அரசியல் கைதியாக அவதிப்பட்டார். சென்னையில் புதிதாக அமைந்த காமராஜ் புகைவண்டி, நிலையம் என்ற பெயரை அகற்றியதற்காக நடந்த போரராட்டத்தில் கலந்துக் கொண்டு சிறைக்குச் சென்றார். தற்போதும் மன்னை நகரக் காங்கிரஸ் கட்சியின் துணைத் தலைவராக இருந்து கட்சியின் நலனுக்கு உழைத்து வருகிறார்.

**ஆன்மீகத் தொண்டு:**

நமது தெருவில் செல்வ விநாயகர் கோவிலை தந்தையார் அமைத்தபோது துணை நின்றவர். பல கோயில்களுக்கு தந்தையார் அமைத்த நித்திய வழிபாட்டுச் செலவுகளையும், சிறப்பு மண்டகப் படிகளையும், தொடர்ந்து செய்து வருகிறார். சூரியனார் கோயில், ஸ்ரீலஸ்ரீ மீனாட்சிசுந்தர தேசிகரைக் குருவாக ஏற்றவர். ஸ்ரீலஸ்ரீ சித்பவானந்தா சுவாமி களின் நல்லாசியினைப் பெற்றவர். வாரியார் சுவாமிகளை வணங்கி வருபவர். மன்னை அருள்நெறி திருக்கூட்டம் சிவனடியார் திருக்கூட்டம், ஆகியவற்றின் தலைவராக இருந்து

பல்வேறு சமயப்பணிகள் ஆற்றியிருக்கிறார். வேதாந்திரி மகரிஷிகளின் உலக சமாதான சேவை சங்கத்தில் ஈடுபாடு கொண்டு தியானப்பயிற்சி பெற்றவர். ஆன்மீக நிகழ்ச்சியோ, அல்லது வேறு நிகழ்ச்சியோ எதுவானாலும் அன்னதானப் பொறுப்பை தான் ஏற்று அகமிக மகிழ்வார். அவர்கள் தெருவில் எழுந்தருளி அருள்பாலிக்கும் ஸ்ரீ காளியம்மனின் ஆடித் திருவிழா சிறப்பாக நடைபெற பெருந்துணையாக இருப்பவர். இவ்வாறு இவரது ஆன்மீகத் தொண்டுகளை எண்ணிப் பார்த்தால் இன்னும் எத்தனையோ!

### பெயருக்கேற்ற பெருந்தன்மை:

எம் பெருமான் ஸ்ரீ சந்தான ராஜகோபாலனின் அருளால் பிறந்தவர் என்ற நம்பிக்கையால் பெற்றோர் இவருக்கு அப்பெயரினையே அன்போடு வைத்து மகிழ்ந்தனர். இந்த அருமையான பெருக்கேற்ற வகையில் நல்ல பெருந்தன்மையான குணங்களைப் பெற்றவர். நமது தலைவர். மிக உயர்ந்த நிலையில் இருக்கின்ற நமது சந்தானராஜகோபாலனார் தன்னுடன் பழகிய அன்பர்க்கு இடையூறு உண்டானால் அது களைதல் பொருட்டு உரிய நேரத்தில் தானே முன்வந்து உதவுவார். இத்தகைய பண்பு எம்பெருமானின் சௌலப்பிய பண்பே! தம் அடியார்கள் நன்னடைத்தையிலும், புலனடக்கத்திலும் சிறந்து வாழ வேண்டும் என்பதற்காகவே எம்பெருமான் தானும் அவ்வகையில் இருப்பதை சௌசில்யம் என்று அருளாளர் கூறி மகிழ்வார். இத்தகு சௌசீல்ய பண்பு நமது சந்தான ராஜ கோபாலனார் அவர்களிடம் இயல்பாகவே அமைந்து திகழ்வதை நாம் அனைவரும் நன்கு அறிவோம். சான்றுக்கென இவைகளை இங்கு குறிப்பிட்டு மகிழ்கிறோம். இவைபோன்ற பெருந்தன்மையான குணங்கள் இன்னும் நிரம்ப உண்டு.

### பண்பு நலன்கள்:

அன்பே பண்பெனக் கொண்டவர் அறமே பயனென உணர்ந்தவர், இனிமையும் எளிமையும் கூட்டென அமைந்தவர். கருமமே கண்ணானவர், கடமையே பெரிதெனக் கருதுபவர் கதராடை மனிதர், கடிதங்களுக்கு உடனுக்குடன் பதில் தருபவர், உள்ளத் தூய்மையானவர், சான்றாண்மைக்கு எடுத்துக்காட்டானவர், நவீன உழவியலை நடைமுறைப் படுத்தி, நாட்டுப் பொருளாதாரத்தை உயர்த்துபவர்.

முன்னாள் அமைச்சர் இன்றைய பெரியார் மாண்புமிகு மன்னை அவர்களின் தந்தையாரும் நமது ஆர்.என்.எஸ். அவர்களின் தந்தையாரும் ஒரு மனதோடு நல்ல நட்புக் கொண்டவர்கள். அந்த இனிய நட்புரிமையால் மாண்புமிகு மன்னை அவர்கள் அன்போடு தம்பி தம்பி என்று அழைக்கும் பேற்றினைப் பெற்றவர். முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் தேசபக்தர் தென்கொண்டார். முன்னாள் மன்னை நகரமன்றத் தலைவர்கள் பெருமைக்குரிய டி. பி, சிங்காரவேலு உடையார், சாமிநாதக் கொத்தனார் போன்ற பெருமக்களுடன் கொண்ட நெருக்கமான தன்மையால் அவர்களின் பாராட்டினையும் நல்லன்பினையும் பெற்றவர். இவ்வாறு தமது பழக்கத்துக்கும், பண்பிற்கும் ஏற்ற நிலையில் பெரியோர்கள் சிலருக்குத் தம்பியாக சிலருக்கு நண்பராக நல்ல சான்றோராகத் திகழ்ந்து வருபவர். இத்தகு பெருமையுடைய நமது மதிப்பிற்குரிய தலைவர் ஆர்.என்.எஸ். அவர்களை நம்குலம் சிறக்க வந்த 'மன்னை மாமணி' எனப் பாராட்டி மகிழ்வதோடு, பன்னூற்றாண்டுகளுக்கு மேல் உடல் நலத்தோடும் வளத்தோடும் வாழ்ந்து இன்றுபோல் நற்பணிகள் பற்பல ஆற்றுக என அன்போடு வாழ்த்துவோமாக!

அருள்மிகு குமரகிரி முருகன் திருவருளால் தஞ்சை மாவட்டம் குடந்தை மாநகரத்தில் நடைபெறும் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் 16ஆவது மாநில மாநாடு சிறக்க எங்கள் நல்வாழ்த்துக்கள்.



இம்மாநாட்டை நடத்தும் தஞ்சை மாவட்ட செங்குந்த மகாஜன கல்விச் சங்கத்திற்கு எமது பாராட்டுக்கள்



பூதலம் வாழ்க குந்தர் பொலிவுடன் விளங்க நான்கு
வேதம் எந்நாளும் ஓங்க வேதியர் பசுக்கள் பல்க
மாதவர் வளவன் செங்கோல் வளமை குன்றாது நிற்க
ஓதமே அறையும் பொன்னி உறந்தையும் சிறக்க மாதோ

(ஈட்டி எழுபது—1)



**அருள்மிகு குமரகிரி ஸ்பின்னிங் மில்ஸ் (பி) லிட்.,**

**சேலம் - 636 003.**

கூறைநாடு தந்த

# செங்குந்தர்குலச் செம்மல்

புலவர் செக. தியாகராசன், B.Lit., B.Ed., செம்பனார்கோவில்.

**தோற்றம்:**

தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன சங்கம் தோன்றுவதற்கு முழுமுதற் காரணமாய் அமைந்த நமது அண்ணா **ச.கு.பா. பழநிவேல்** அவர்கள் கூறை நெய்யும் நாடாகத் தமிழ் நாட்டில் முற்காலத்தில் பேரும் புகழும் பெற்றிருந்த கூறைநாட்டில் கும்பகோணம் பாவாடை செங்குந்தர்க்கும் விசாலாட்சி அம்மையாருக்கும் நன்மகனாய் 10—10—1919-இல் தோன்றினார்கள். இவர்தம் வரலாறு குந்தர்குல வளர்ச்சியில் பேரூக்கம் காட்டி வரும் பெருமக்களுக்கும் நம்குல மாணவர்களுக்கும் சிறந்ததொரு வழிகாட்டியாக அமையும் என்பது திண்ணம்.

**ஆசிரியப் பணி:**

நமது அண்ணா அவர்கள் 27—6—1940-இல் மயிலாடுதுறை ஆரியபால போதினி உயர் தொடக்கப் பள்ளியில் முதன்முதல் ஆசிரியப் பணியினை ஏற்றார்கள். பின்னர் தேசிய உயர்நிலைப் பள்ளியில் காகிதப் பயிற்சி ஆசிரியராகச் சிறிது காலம் பணி புரிந்தார். அதன் பின்னர் நகராட்சித் தொடக்கப் பள்ளியில் சிறிது காலம் தலைமையாசிரியராகப் பணி புரிந்தார். 1955-ஆம் ஆண்டிலிருந்து மயிலாடுதுறை நகராட்சி உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியப் பணியாற்றி 1977-ஆம் ஆண்டில் ஓய்வு பெற்றார்கள்.

**மாவட்டச் சங்கம் தோற்றம்:**

நமது அண்ணா அவர்கள் பயின்ற காலத்தில் தென்னிந்திய செங்குந்தர் கல்வி நிதியிலிருந்து உதவி அவருக்கு கிடைத்து வந்தது. அதனால் அவர்கட்கு நமது சமூகத்தில் பற்றும் தொண்டுணர்வும் அரும்பலாயிற்று. இவர்களின் தோழர்களான திரு. மு. கோவிந்தசாமி, திரு. சி.ப. சிவகுருநாதன் ஆகியவருடன் சேர்ந்து கூறைநாட்டில் செங்குந்தர் வாலிபர் சங்கத்தைத் தோற்றுவித்து அதன் செயலாளர் ஆனார். இச் சங்கத்தின் வளர்ச்சியினால் அன்னாருக்கு **திருவாரூர் வள்ளல் T.N. சபாபதி செங்குந்தர்** அவர்களின் நட்பும் அன்பும் கிடைத்தது. நமது மாவட்டம் முழுவதுமுள்ள மாணவ, மாணவிகள் உதவி பெற ஒரு சங்கம் இருந்தால் நல்லது என எண்ணினார்கள். இவர் தம் எண்ணமும் நம் குந்தர்குலப் பெருமக்களின் எண்ணமும் ஒன்றுசேர மன்னார்குடி திரு. **பெரி. ராம நடராச செங்குந்தர்** அவர்களைத் தலைவராகக் கொண்டு நமது அண்ணா அவர்கள் துணை நிற்க மாவட்டச் சங்கம் தொடங்கப் பெற்றது. அதன் பின்னர் ஆக்கூர் அண்ணலார் **திரு. சு. ராமலிங்க செங்குந்தர்** அவர்கள் தலைமையில் பொதுச்செயலராகச் சீரிய முறையில் பல்லாண்டு பணியாற்றினார்கள். தற்போது **திரு. ஆர். என். சந்தான ராஜகோபாலன்** அவர்களைத் தலைவராகக் கொண்டு மாநிலச் சங்கமும் மாவட்டச் சங்கமும் போற்றிப் புகழும் வண்ணம் நமது மாவட்ட பொதுச் செயலாளராகவும் மாநில சங்க அமைப்புச் செயலாளராகவும் பணிபுரிந்து வருகிறார்கள்.

**மண வாழ்க்கை:**

தம் சகோதரியின் மகளான ஜெயலட்சுமி அம்மையாரை வாழ்க்கைத் துணைவியாக 1946-இல் திருமணம் செய்து கொண்டார்கள். இவர்தம் வாழ்க்கைத் துணைவியார் கடமையுணர்வும், விருந்தோம்பும் பண்பும், வாய்மை நெறியும், மனைவாழ் முறையும் நன்கு வாய்க்கப் பெற்றவர். நம் குந்தர் குலச் செம்மல் அவர்கள் குலப் பணியில் சிறந்து விளங்க அருங்குணங்கள் வாய்ந்த அவர்தம் வாழ்க்கைத் துணைவியார் சிறந்த ஊன்று கோலாய்த் துணை நின்று வருகின்றார்கள். நமது பொதுச்செயலர் அவர்கட்கு நீண்ட காலம் மகப்பேறு இல்லாதிருந்து பின்னர் சரஸ்வதி, சாந்தநாயகி என்ற பெண்மக்களும் செல்வமுத்துக் குமரசாமி, ஐயப்பன் என்ற ஆண்மக்களும் பிறந்துள்ளனர். 16-10-78-இல் இவர் தம் மணிவிழா மாநிலச் சங்கமும், மாவட்டச் சங்கமும், கிளைச் சங்கங்களும் வியந்து போற்றும் வண்ணம் சிரோடும் சிறப்போடும் பொலிவோடும் **'செங்குந்தர் குலச் செம்மல்'** பல்லாண்டு வாழ்க! வாழ்க! என வாழ்த்தொலி பல்கிப் பெருக மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பட்டது.

**சமூகப் பணி:**

1945-இல் கூறைநாட்டில் நிகழ்ந்த மாவட்ட மாநாட்டில் தஞ்சை ஜில்லா செங்குந்தர் கல்வி நிதி உருப்பெற்றது. அன்று முதல் இன்றுவரை பலரும் வியக்கும் வண்ணம் ஆண்டு தோறும் உண்டியல் வசூல் மூலமாகக் கல்வி நிதியினை வளர்த்து வருகிறார்கள். தஞ்சை, திருச்சி, தென்னாற்காடு மாவட்டங்களில் சமூகப் பிரச்சாரம் செய்யும் பொருட்டு பல்வேறு சிற்றூர்களிலும் சுற்றுப் பயணம் செய்து நம்குல முன்னேற்றப் பணியில் பெரிதும் ஈடு பட்டுள்ளார்கள். நம் குலப் பத்திரிகையான **'செங்குந்த மித்திரன்'** சிறந்து வளர அப்பத்திரிகைக்கு ஆயுள் சந்தா, ஆண்டுச் சந்தா சேர்க்கும் முயற்சியில் பெரிதும் ஈடுபட்டு வருகிறார்கள். செங்குந்தர் குலம் செழிக்க தம்வாழ்நாள் முழுவதும் அல்லும் பகலும் அயராது பாடுபட்டு வரும் இவரைச் **'செங்குந்தர் குலச் செம்மல்'** என்று அனைவரும் அழைப்பது சாலப் பொருத்தமே.

**தனித் திறமைகள்:**

நம்குலச் செம்மல் அவர்கள் எளிமையும் — இனிமையும் — வாய்மையும் — அன்பும் — அடக்கமும் இயல்பாகவே வாய்க்கப் பெற்ற அருங்குணச் செம்மல். நிர்வாகத்தில் நேர்மையாக இருக்க வேண்டும், நெறிமுறையோடு திகழ வேண்டும் என்ற உயரிய நோக்கம் கொண்டவர். கடும் உழைப்பினர்; எதிலும் கண்டிப்பாக நடந்து கொள்ளும் கொள்கை உடையவர். தன் உடல் நலனையும் குடும்பப் பணியையும் நோக்காது விழித்திருக்கும் வேளையெல்லாம் **"சங்கம்", "சங்கம்"** என்பதையே இதயகீதமாகக் கொண்டு — ஏன்? உறங்கும் போது கூட சங்கத்தின் இலட்சிய கனவுகளையே கண்டு அது நனவாக உழைக்கும் உழைப்பின் திருவுரு. எழுத்தாற்றலும் பேச்சாற்றலும் மிக்கவர். சிறிது நேரம் கூட ஓய்வில்லாமல் எந்நேரமும் சங்கப் பணிகளை செய்து கொண்டே இருக்கும் தனித் திறமையுடையவர்.

தென்னிந்திய செங்குந்தர் பதினாறாவது மாநில மாநாடு சிறப்புற நடைபெற அல்லும் பகலும் அயராது பாடுபட்டு வருகிறார்கள். உடல் நலத்தையும் பொருட் படுத்தாது மாநிலத்தின் பல்வேறு இடங்களுக்கு நிதி வசூல் சம்பந்தமாக சென்று வருகிறார்கள். நம் குந்தர் குலம் செழிக்க அவர்கள் ஆற்றிவரும் பணிகள் அளவிடற்கரியன. நம் செங்குந்தர் செம்மல் அவர்களும் அவர் தம் குடும்பத்தினரும் நீண்ட வாழ்நாளும், பிற எல்லா நலங்களும் பெற்று வாழ எல்லாம் வல்ல இறையருளை இறைஞ்சுவோமாக!

# காலச் சுவடுகள்

— டாக்டர் தி. ரா. செல்வராசன், M.A. M.Lit., Ph.D.,
மாநில பொதுச்செயலாளர்.

உலகத் தொடக்கத்தையும், முடிவையும் நாம் எளிதில் அறிய முடியாது. அது முதலும் முடிவும் கிழிந்துபோன ஒரு புத்தகம் போன்றது என்பார்கள். நமது வாழ்க்கையும் அத்தகையதே. பிறப்பும் இறப்பும் நம் வசப்பட்டவையல்ல. இரண்டிற்கும் இடைப் பட்டுள்ள இடமும் காலமுமே வாழ்க்கை என்று கருதப்படுகின்றன.

'உங்கள் சொந்த ஊர் எது'? என்று பிறர் கேட்கும்போது புதுச்சேரி என்று சொல்லி விடுவேன். ஆனால் மனத்தினால் உடன் ஓர் எண்ணம் தோன்றும். சொந்தம் என்று சொல்வதற்கு வீடும் நிலமும் இல்லாதபோது அது எப்படிச் சொந்த ஊராகும்? என்னைப் போன்ற எளிய மக்களுக்கு ஆறுதல் தருவது, "யாதும் ஊரே யாவரும் கேளிர்!".

புதுவை — சென்னை — திருமழிசை — சென்னை இப்படித் தந்தையார் ராஜவேல் முதலியார் நெசவுத் தொழிலை நம்பி வாழ்ந்த போது குடும்பம் இப்படி ஊர்-வலம் வந்தது. நெசவுக்கு உற்ற நண்பன் மீளா வறுமை. பெரிய குடும்பம்; குறைந்த வருவாய்; நிறைந்த துயரம். தாயார் உண்ணாமுலை அம்மாளின் பொறுப்பான சிக்கனமான குடும்பம் நடத்தும் திறத்தினால் தான் பிள்ளைகள் நால்வர் பெண்கள் மூவர் இன்று வாழமுடிகிறது.

வீட்டின் பெரிய பிள்ளையை S.S.L.C. வரை படிக்க வைக்கத் தாயார் பட்டபாடு பெரும்பாடு. இடைநிலை ஆசிரியர் பயிற்சி பெற்றுத் தொடக்கப்பள்ளி ஆசிரியனாகி ரூ. 62 சம்பளம் வாங்கியபோது குடும்பத்தில் மூன்று வேளைச் சாப்பாடு நிச்சயமாயிற்று. மூன்றாண்டுகளில் தமிழ் வித்துவான் தேர்ச்சி பெற்று உயர்நிலைப் பள்ளி ஆசிரியனாக உயர்ந்த பிறகு தங்கைகளுக்கு எளிய முறையில் திருமணம் செய்து வைக்க முடிந்தது.

தனியாகவே P.U.C., B.A., படித்துத் தேர்ச்சி பெற்ற பிறகு 1965-ல் திருமணம். வீட்டின் தலை மருமகள் எப்படி இருந்தால் குடும்பம் சிதையாமல் இருக்குமோ அப்படிப் பட்டவள் எனக்கு மனைவியாய் திருமதி சரசுவதி அமைந்தது ஒரு வகையில் சிறப்புத்தான். ஒரு நாள் கல்லூரி வகுப்பில் "உங்கள் துணைவி என்ன படித்திருக்கிறார்கள்"? என்று மாணவன் ஒருவன் கேட்ட போது "அவள் எதுவரை படித்திருக்கிறாள் என்பது முக்கியம் அல்ல; அவள் என்னைப் படித்திருக்கிறாள், அதாவது எனது பலத்தையும், பலவீனத்தையும்" என்று குறிப்பிட்டேன். அப்பா என்று அன்புடன் அழைக்கின்ற, தம்பி இளங்கோவன் செல்வங்கள் சதாசிவம், தாரணி நான் பெற்ற செல்வங்கள்!

வேலை செய்யும் இடம் ஒருவர் வாழ்க்கையை எப்படி மாற்றியமைக்கிறது என்பது சிந்திக்கத் தக்கது. ஒரு நல்ல ஆரம்பப்பள்ளி ஒரு சிறந்த உயர்நிலைப்பள்ளி புகழ்மிகு கல்லூரி எனப் படிப்படியாக உயர முடிந்தது. தமிழறிவு தந்த என் ஞானத் தந்தை பண்டித வித்துவான் மி. பொன். இராமநாதர் செட்டியாரும் சென்னை கிறித்தவக்கல்லூரித் தமிழ்த்துறைப் பேராசிரியர் பூ. ஆ. ஆலாலசுந்தரனாரும் காட்டிய பெருங் கருணையால் இன்று பேராசிரியராகப் பணிபுரிய முடிகிறது.

தனி வாழ்க்கையின் தொடர்ச்சி பொது வாழ்க்கையாக மலர்ந்ததே விந்தையானது செங்குந்தமித்திரனில் கட்டுரைகள் எழுதி அன்றைய செயலாளர் தி. சே. பழனிவேலு

அவர்களின் கவனத்தில் இடம் பெற்றேன். திரு. சரவண பழனிவேலு அவர்களின் நல்லாதரவினால் செங்குந்த சமுதாய இயக்கத்திற்கு அறிமுகப்படுத்தப் பட்டேன். கருத்தரங்கு மலரில் வள்ளலார் மாணவர் இல்லம் பற்றி எழுதிய கவிதை பெருமக்களின் இனிய நோக்கிற்கு என்னை ஆளாக்கியது.

1976-ல் ஈரோட்டில் நடந்த மாநில மாநாட்டில் சென்னை வழக்கறிஞர் பெரியவர் சி. நடராஜ முதலியார் என்னைத் துணைச் செயலாளராகப் பணிபுரிய முடியுமா என்று கேட்டு நல்வாய்ப்பினைத் தந்தார்.

1981-ல் தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கத்தின் செயலாளராக அமரர் தே. சேதுராமனுடன் பணிபுரிந்தது பெருமைக்குரியது. செங்குமித்திரனின் பொறுப்பாசிரியராகிச் சமுதாயப் பணியைச் சிறப்புடன் செய்ய முடிந்தது. சங்கத்தின் வரவு செலவு கணக்கு முறை செய்யப்பட்டதிலும் மாதந்தோறும் செங்குந்தமித்திரன் வெளிவரச் செய்ததிலும் சேதுராமனின் பங்கு பணி மறக்க முடியாதது.

கைத்தறிக்காவலர் பத்மஸ்ரீ எம். பி. நாச்சிமுத்து அவர்களின் தலைமையின் கீழ் பணிபுரிந்தது வாழ்வின் பெரும் பேறு. சிறியன சிந்தியாத செம்மை நலம் சார்ந்த பெருந்தகை நாச்சிமுத்து அவர்களின் அன்புக்குரிய தொண்டனாகச் சமுதாயப் பணியில் மகிழ்வு காண முடிந்தது.

1981-ல் சேலத்தில் நடந்த பொன்விழா சமுதாய இயக்க வரலாற்றின் திருப்பு முனையாகியது. சேலத்துப் பெருமக்கள் அமரர் ஏ. சங்கர முதலியார், திரு. பி இராமசாமி முதலியார் திரு. எஸ்.பி. சம்பந்தம் மற்றும் பலருடன் மாநாட்டு பணிகளில் சேர்ந்து உழைக்க முடிந்தது. 1984-ல் காஞ்சியிலும் 1989-ல் சென்னையிலும் நடந்த மாநில மாநாடுகள் சமுதாய இயக்க வளர்ச்சிக்குப் பெரிதும் உதவின.

1988 டிசம்பர் 3-ல் சென்னையில் நடந்த எழுச்சிப் பேரணியும் 1990-ல் நவம்பர்5-ல் நடந்த மாநிலம் தழுவிய உண்ணாவிரதப் போராட்டமும் நெசவாளர் நேசன் திரு. ஜெ. சுத்தானந்தன் அவர்கள் தலைமை ஏற்ற பின்னர் சமுதாயத்தில் மலர்ந்த எழுச்சியின் சின்னங்களாகும்.

மாநிலத் துணைத் தலைவர் திரு. எம்.எஸ். தணிகைமலை, திரு. ச.கு.பா. பழநிவேலு மற்றும் பல மாவட்டத் தலைவர்கள், செயலாளர்கள், தொண்டர்கள் ஆகியோர் காட்டும் பேரன்பும், பேருதவியும் நன்றியுடன் நினைந்து போற்றத் தக்கன.

பாழ்பட்டுக் கிடந்த இடத்தைப் புதுக்கி வள்ளல் சபாபதி மெட்ரிகுலேசன் பள்ளியாக வளர்த்துவரும் திரு. சி. கே. குமாரசாமி, அவர்க்கு உறுதுணையாக நிற்கும் சங்கப் பொருளாளர் திரு. எம்.எஸ். ரெங்கையா ஆகியோர் நன்றியுடன் போற்றத் தக்கவர்கள்.

மாநிலத் துணைப் பொதுச் செயலாளர்களாகப் பணியாற்றும் மயிலை திரு. எம். பி. பாண்டுரங்கன், பெண்ணாடம் திரு. ஆ. ராசவேலு, உடுமலைப்பேட்டை திரு. மு. சிவசண்முகம் ஆகியோர் சமுதாய இயக்கத்திற்கு எனது கடமைகளைச் செவ்வனவே ஆற்றத் தூண்டுகோலாகவும், ஊன்றுகோலாகவும், விளங்குகிறார்கள்.

எனக்குள்ள ஆற்றல் குறைவு; ஆர்வம் மிகுதி. இயக்கத்திற்குப் பற்பலர் துணை வேண்டும். கொஞ்சம் இருங்கள், நான் என்னைத் தேடிப் பார்க்கிறேன்; 'நான்' தெரியவில்லை; 'நாம்' தான் புலப்படுகிறது.

ரூ.5000/– நன்கொடை அளித்த அன்பர்



பாபநாசம்

திரு. R. திருநாவுக்கரசு செங்குந்தர்

திருமதி : தனலட்சுமி

லட்சுமி கார்டன்ஸ் கும்பகோணம்

## தென்னிந்திய செங்குந்தர் 16வது மாநாட்டு திறப்பாளர்



திருப்பணி செம்மல் மன்னார்குடி
திரு. T.S. சுவாமிநாத உடையார் அவர்கள்

## ரூ.2000/– நன்கொடை அளித்த அன்பர்கள்





திரு. பா.கா. ஆறுமுக செங்குந்தர்
திருமதி பா. ஆ. இலட்சுமி அம்மாள்
நகரி, புதுபேட்டை, ஆந்திர மாநிலம்

# அறிவின் அடையாளம்

புலவர் மா. அமுதலிங்கனார்



உலக அரங்கில் உயிர்களின் நாடகம் நடைபெறுகின்றது. உலகம் என்று சொல்லும் போதே உயிர்களும் அடங்கி விடுகின்றன. உயிரினை நீக்கி விட்டு உலகினைப் பார்த்தால் அங்கே எஞ்சி நிற்பது கல்லும் மண்ணும் காற்றும் வானும் நீரும் நெருப்பும் போன்ற பொருள்களே. இந்தப் பொருள்களுக்கெல்லாம் ஆற்றல் உண்டே தவிர அறிவு இல்லை. புல்லும் பூண்டும் புழுவும் பிறவும் சற்றே அறிவின் அடையாளத்தைக் காட்டுகின்றன. ஆயினும் புல்லிய அந்த உயிர்களை வலிய உயிர்கள் இரையாக்கிக் கொள்கின்றன. யானை குதிரை போன்ற வலிய விலங்குகளையும் அவற்றினும் அறிவுத்திறம் படைத்த மனிதன் அடக்கி ஆள்கின்றான்.

மனிதர்களுக்குள்ளேயும் இளைத்தவனை அடுத்தவன் வளைத்துக் கொள்கின்றான். நல்லவனை வல்லவன் வழிமறிக்கின்றான்.

புல்லாகிப் பூ(ண்)டாய் புழுவாய் மரமாய்த் தொடர்கின்ற உயிர்க் குலங்களை ஓரறிவுயிர்கள் முதலாக ஆறறிவு வரை வகைப்படுத்தினர்.

ஆறறிவு பெற்ற மனிதர்களுக்குள்ளேயும் முன்னைய ஐந்தறிவுக்குள் அடங்கி விடுபவர் காணப்பட்டனர்.

திருவள்ளுவரே சிலரை மரம் என்பார். சிலரை விலங்கு என்பார். சிலரைப் பேய் என்பார். சிலரைப் பிணம் என்பார். சிலரைச் சிறியர் என்பார். சிலரைப் பெரியர் என்பார். சிலரைத் தெய்வத்துள் வைத்துப் போற்றுவார். எனவே மனிதரிலே விலங்கு உண்டு; பறவை உண்டு; மரங்கள் உண்டு; மனிதரிலே மனிதர் உண்டு; தேவர் உண்டு என்று தெளிந்தனர். இனி மாந்தர்க்கு அமைகின்ற ஆறாவதாகிய அறிவுத் திறத்திலும் எத்துணை எத்துணையோ வேறுபாடுகள்.

பொதுவாகப் பல்வேறு நூல்களைக் கற்றவர்களை நாம் அறிஞர் என்று கருதுகின்றோம். அந்த அறிவுக்கு நூலறிவு என்றே பெயர். நூலறிவுடையார் நுண்ணறிவு பெறாமலும் போகலாம்.

ஏதோ ஒரு காலத்தில் எழுதப்பட்ட நூல் இன்னொரு காலத்துக்கு ஒவ்வாத ஒன்றாகலாம். இன்றைக்கு வரையப்படுகின்ற நூல் இனிவரும் காலத்தில் ஏற்கப் படாமலும் மாறலாம்.

எனவே தான்

'பல கற்றும் உலகத்தோடு ஒட்ட ஒழுகல்
கல்லார் அறிவிலாதார்'

என்றார் திருவள்ளுவர்.

ஆகவே நூலறிவு வேறு நுண்ணறிவு வேறு என்று தெரிகின்றது. உண்மை அறிவு என்றோர் அறிவினைக் கூறுகின்றார் திருவள்ளுவர்.

ஒருவன் எவ்வளவு நூல்களைக் கற்றிருந்தாலும் அந்த அறிவு எழுத்திலும் பேச்சிலுமே இடம் பெற்று அவன் செயலில் விளங்காமல் போவதுண்டு. அறிவு நூல்கள் ஆய்வு நூல்கள் ஆயிரம் கற்றிருந்தாலும் அவன் உள்ளத்தில் ஊறியிருக்கும் முன்னைப் பழக்கத்தால் வந்த அறிவே மேலோங்கி விடும்.

உண்மை அறிவு என ஒன்று உண்டு என்றால் கல்வி அறிவு என்பது தேவை இல்லையே என்று கருதலாம்.

இயல்பாக அமைந்திருக்கும் உண்மை அறிவு நல்லறிவாக அமைந்திருக்க வேண்டும். அந்த அறிவு புல்லறிவாய் இருப்பின் தீமையே விளையும். நல்லறிவே ஆயினும் அதனை அறிவுடையார் ஏற்கமாட்டார் என்று கூறுகின்றார் திருவள்ளுவர்.

சிலருடைய அறிவு கூர்மையான அறிவாக இருக்கலாம். ஆனால் அந்த அறிவு பண்போடு படராத அறிவெனில் அதனையும் வள்ளுவர் ஏற்கவில்லை. சிலருடைய அறிவினைத் திருவள்ளுவர் காரறிவு என்று கடிந்துரைப்பார். திறக்க முடியாதபடி பூட்டுச் செய்பவனை விட அதனை ஓசைப்படாமல் திறந்து விடுகின்றானே அவன் அறிவுடையவன் தானே! அந்த அறிவினைத்தான் திருவள்ளுவர் காரறிவு என்று கூறுகின்றார்.

காரறிவு கூரறிவு (கூர்மையான அறிவு) போன்றவற்றை ஏற்காத திருவள்ளுவர் பேரறிவினைக் கூடப் பெரிதும் போற்றுவதாகத் தெரியவில்லை.

பேரறிவாளன் திரு ஊருணி போன்றது; நயனுடையாளன் செல்வம் பயன் மரம் பழுத்தாற் போன்றது; பெருந்தகையான் செல்வம் மருந்து மரம் போன்றது என்று வரிசைப்படுத்து மிடத்தில் பேரறிவினை மூன்றாவது இடத்திலேயே நிறுத்துகின்றார்.

அவ்வாறெனில் அறிவுக்கு அவர் வகுத்துள்ள இடம்தான் என்ன?

சென்ற இடத்தால் செலவிடாது தீது ஒரீஇ நன்றின்பால் உய்ப்பதுவே அறிவின் பயன் என்று தெரிவிக்கின்றார்.

நன்று என்பது எது? ஈதல் நன்று; இன்சொல் நன்று; பொய்யாமை நன்று; கொல்லாமை நன்று; நடுநிலை நன்று; நன்றி மறவாமை நன்று; அடக்கம் நன்று; அறனல்ல செய்யாமை நன்று என்று பட்டியலிட்டுக் கொண்டே போகலாம்.

சுருக்கமாக ஒன்றைச் சொல்ல வேண்டுமே! அதனையும் திருவள்ளுவரே சொல்லியுள்ளார்.

பிரிதோர் உயிரின் துன்பத்தைத் தன் துன்பமாக ஏற்றுக் கொள்வதே அறிவின் பயன்; அறிவின் அடையாளம் என்று கூறுகின்றார்.

பொதுவாக மாந்தர் இயல்பு துன்பத்தில் அடுத்தவரைத் துணைக்கு அழைப்பது. இன்புற்ற காலத்தில் அடுத்தவரை நினையாதகல்வது. பிறருடைய இன்பத்தில் பங்கு கொள்வது. துன்பத்தில் கண்டும் காணாதிருப்பது.

இந்தப் பொது இயல்புக்கு மாறாகத் திருவள்ளுவர் காட்டும் சிறப்பியல்பு:-

தாம் இன்புறுவது போன்று உலகு இன்புற எண்ணுவது; பிறர் துன்பத்தினைத் தன் துன்பமாகக் கருதி அதனை நீக்க முனைவது இவையே.

தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு
காமுறுவர் கற்றறிந்தார்.

அறிவினான் ஆகுவது ஒன்று உண்டோ பிறிதின் நோய்
தம் நோய் போல் போற்றாக் கடை.

இவ்விரு குறள்களுமே அறிவுக்கு இலக்கணம் வகுக்கும் அருமை சான்ற குறள் மொழிகளாகும்.

இந்தக் குறள் நெறிபோற்றியவர்களே

"நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்"

என்ற குறிக்கோள் மொழியினைத் தோற்றுவித்தார்கள்.

---

"துன்பந் துடைப்பீர்காள், அன்பன் அணி ஆரூர்
நன் பொன் மலர் தூவ, இன்பம் ஆகுமே"

— திருஞானசம்பந்தர்

---

நன்றி: சித்தாந்தம் இதழ்




*With Best Compliments from:*



☎ 75269

**V.P.M. Printers,**
**Lungies Merchants,**

*No. 7-A, Venkatachalam St.,*
*ERODE* - 638 001.




With best compliments from:

## SAMBANDAM SPINNING MILLS (P) LTD.,

Registered Office & Mills:
Post Bag No. 1
Kamaraj Nagar Colony, Salem - 636 014.
TAMILNADU



*TELEX:* **0450—254—***SSML IN* *GRAMS:* "*SAMSPIN*"

*Phone Mills:* **65944, 64169, 67235**
*Resi:* **65878, 63411, 77784**

Licensed Capacity : 25,000 Spindles

Installed Capacity: 24,796 Spindles Doubling Capacity: 10,000 Spindles



**Manufacturers of :**

20s to 80s HANKS AND CONE YARN
2/20's to 2/80's HANKS AND CONE YARN
AND
EXPORT QUALITY YARNS

Chairman
Mr. S. P. RATNAM

Managing Director
Mr. S. P. SAMBANDAM



# இருதலை மாணிக்கம்

ஆசிரியர்: அம்பை சங்கரனார்

பல ஆண்டுகளுக்கு முன்னர் யான் ஒரு முறை சிதம்பரம் சென்றிருந்தேன். அங்கு தெற்கு சந்நிதியில் உள்ள மௌன 'சுவாமிகள் மடத்தில் தங்குவது வழக்கம். அவ்வாறு தங்கிய போது அவ்வமயம் மடாதிபதிகளாயிருந்தவர்கள் தவத்திரு. சபாபதி சுவாமிகளாவார் கள். அவர்கள் சைவ சித்தாந்தம், வீர சைவ சித்தாந்தம், வேதாந்தம் ஆகிய துறைகளில் கற்றுத்துறை போயவர்கள். நம் சித்தாந்த இதழ்களிலும் அவர்கள் கட்டுரைகள் பல அவ்வப்போது அணி செய்வது வழக்கம். நான் சென்ற அச்சமயத்து அவர்கள் சோளங்கிபுரம் அருணகிரி முதலியார் எழுதிய ஐந்தெழுத்தைப் பற்றிய ஒரு நூலைப் படித்துக் கொண்டிருந் தார்கள். அதை யானும் சிறிது நேரம் படிக்கும் வாய்ப்பினை அவ்விடத்துப் பெற்றேன். அச்சமயம் என்னைக் கவர்ந்த ஒரு தொடர் ''இருதலை மாணிக்கம்'' என்பதாம். அது பற்றிக் கீழே காண்போமாக.

பஞ்சாக்கரத்துள் பலவகைகளுள் தூலபஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், அதிசூக்கும பஞ்சாக்கரம், காரண பஞ்சாக்கரம், மகாகாரண பஞ்சாக்கரம், ஸ்ரீபஞ்சாக்கரம், முத்தி பஞ்சாக்கரம், பிரணவ பஞ்சாக்கரம் முதலியன பல உள. பஞ்சாக்கரத்துள் உள்ள ஐந்தெழுத்துக்கள் ந, ம, சி, வ, ய என்பனவாம். ஒவ்வொரு எழுத்துக்கும் தனித் தனிப் பொருளுளது. ஆதலின் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பஞ்சாக்கரத்தை அஞ்சுபதம் என்றே திருவாய் மலர்ந்தருளினார்கள். ''எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள் தரின் பதமாம்'' என்பதற்கியைய ஐந்தெழுத்துக்களும் தனித்தனிப் பொருள்களைத் தருவதால் அஞ்சுபதமாயிற்று. 'ந' என்பது மறைப்பாற்றலைக் குறிக்கும். ம-ஆணவமலம்; சி-சிவம்; வ-சத்தி; 'ய' என்பது உயிரைக் குறிக்கும். நமசிவய என்பது தூலபஞ்சாக்கரம், இதனை மக்கள் தம்பெயர்களாகக் கூட சூட்டிக் கொள்வர். இது பலருக்கும் தெரிந்ததே. இதனை விட ஆற்றல் சிறந்ததாகச் சூக்கும பஞ்சாக்கரமாகிய 'சிவாய நம' என்பதைக் குறிப்பிடுவர். இதில் 'சிவ' என்பது சிவமும் சத்தியும். நம என்பது மறைப்பும் மலமும். நடுவில் உயிராகிய 'ய' இருக்கிறது. உயிர் மறைப்புக் காட்பட்டு மலத்தால் தாக்குண்டு உலகியலில் உழன்று பல்வேறு துன்பங்களுக்குட்பட்டுள்ளது. அத்துன்பங்கள் நீங்கி இன்பமுற சத்தியினது துணையால் சிவத்தின் திருவடியைப் பற்ற வேண்டும் என்பதே இப்பஞ்சாக்கரத்தின் திரண்ட கருத்தாகும். இப்பஞ்சாக்கரத்தையே சிவயநம, மசிவயந, நமசிவய, யநமசிவ, வயநமசி என்று இடம் மாற்றியும் பல்வேறு பெயர்கள் கொடுத்து, பல ஞானபீடங்களிலும் உள்ள ஞானிகள் தங்கள் ஆதீனச்சீடர்களுக்கு உபதேச வாயிலாய் உணர்த்துவர். திரு மந்திரம் முதலிய நூல்களில் இது பற்றித் தெளிவாய் உணரலாம். இறுதியாக முத்தி பஞ்சாக்கரம் என்பது ஒன்று. அது பஞ்சாக்கரங்களுள் தலை சிறந்தது என்பர். குரு முகமாகவே கேட்கத் தக்கது என்பர். குருமுகமாகக் கேட்டால் அதன் சிறப்பு மேலும் பெருமை பெற்று விளங்கும் என்பதில் யாதொரு ஐயமுமில்லை. இருப்பினும் நூல் வாயிலாய்த் தெரிந்து குருவாயிலாயும் கேட்டால் பழம் நழுவிப் பாலில் விழுந்தது போன்று மேலும் பேரின்பமுற வாய்ப்பாகும். ஆதலின் அம்முத்தி பஞ்சாக்கரம் பற்றியே இங்கு ஒரு சிறிது காணலாம்.

திருவருட்பயனில் ஐந்தெழுத் தருள்நிலை என்று ஒன்பதாம் அதிகாரமாக ஒரு பகுதி உள்ளது. அப்பகுதியில் ஒன்பதாந்திருக்குறள் வருமாறு:

ஆசில் ந வா நாப்பண் அடையாது அருளினால்
வாசி இடை நிற்கை வழக்கு இதன் பொருள் வருமாறு:
ஆசில்—குற்றமற்ற
ந—நகாரமாகிய மறைப்புக்கும்
வா—வகாரமாகிய சத்திக்கும்
நாப்பண்—நடுவில் (உயிர் முத்தி பெற வேண்டுமெனில்)
அடையாது—(சிவயநம என) நிற்காது.
அருளினால் - இறைவனின் திருவருட் பெருக்கால்
வா—வகாரமாகிய சத்திக்கும்
சி—சிகாரமாகிய சிவத்துக்கும்
இடை—நடுவே
நிற்கை—(சிவயசிவ என) நிலை பெற்றிருத்தல்
வழக்கு—முறைமையாம் என்றவாறு.

இக்குறளுக்கு இதுகாறும் உரை எழுதிப் போந்தோர் பலர் பலவாறு எழுதியுள்ளனர். சிலர் மந்திரமாதலின் குருமுகமாகக் கேட்டுணர்க என வாளாவிட்டனர். சிலர் குறிப்பாக எழுதியுள்ளனர். பலரும் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும் என்னும் உந்துதல் காரணமாகவே இது பற்றி எழுதலுற்றேன். வகாரத்திற்கும் சிகாரத்திற்கும் நடுவே உயிர் இருக்க வேண்டுமெனில் அவ்வாறுள்ள ஒரு ஐந்தெழுத்து மந்திரம் யாது என்று ஆராய நேர்ந்தது. இவ்வமயமும் திருமூலர்தான் கைகொடுத்தார். "சிவயசிவ" என்பதும் ஐந்தெழுத்து வகைகளுள் ஒன்றாகும். இதுவே முத்தி பஞ்சாக்கரம் என்பது. இம்மந்திரத்தில் உலகியலில் உழலக்காரணமான மறைப்பாற்றலைக் குறிக்கும் நகாரமும், மலத்தைக் குறிக்கும் மகாரமும் தலை காட்டவேயில்லை. யகாரமாகிய உயிருக்கு இரு பக்கங்களிலும் சிவ என்னும் மாணிக்கம் போன்ற மந்திரம் காட்சியளிக்கிறது. இருதலை என்றால் இருபக்கங்கள் என்பது பொருள். மாணிக்கம் என்பது மாணிக்கம் போன்ற சிவ என்னும் மந்திரத்தைக் குறிக்கும். இவ்விரண்டு சிவ என்னும் மாணிக்கங்களுக்கு நடுவில் ய என்ற உயிரிருக்கிறது. ஆகவே சிவயசிவ என்னும் முத்திபஞ்சாக்கர மந்திரத்தை இருதலை மாணிக்கங்களோடு கூடிய மந்திரம் என்று கூறும் மரபு பண்டைக்காலம் முதல் இருந்து வந்ததாகத் தெரிகிறது. அதனையே சோளங்கிபுரம் அருணகிரி முதலியார் அவர்கள் தம் நூலில் குறிப்பிட்டிருந்தார்கள் என்பது தெளிவாகிறது.

இம்மந்திரத்தில் நம என்பது அறவே காணப் பெறவில்லை. ஆகவே உயிரை உலகியலுக்கு அழுத்தா வண்ணம் இறையின் பத்துக்கே ஆற்றுப் படுத்தும் பெருமை வாய்ந்தது இம் மந்திரம் என்பது விளங்கும். குருமுகமாக இம்மந்திரத்தை உபதேச வாயிலாய்ப் பெற்றுக் கோடலே மிகச் சிறந்ததாம். அவரவர்கள் பக்குவத்திற்கேற்ப குருவானவர் தம் சீடருக்கு உபதேசிப்பார். ஆதலின் யாவரும் வாழ்க்கையில் ஒரு சற்குருவைப் பெற்று உபதேசம் கேட்டு நற்கதியடைவார்களாக! தியானத்திற்கு இம்மந்திரங்களே சாலச் சிறந்ததாகும். தியானத்திலிருக்கும் போது பல்வேறு உலகியல் எண்ணங்களை எண்ண நேரினும் அவற்றையும் இம்மந்திரங்கள் ஓட்டிச் சித்தத்தைச் சிவன் பாலேயிருத்தும் தன்மையன. "அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே" என்பதை மனத்துட் கொண்டு யாவரும் தியானத்திலீடுபட்டு மேலோங்குவார்களாக! அதற்கு எல்லாம் வல்ல இறையருளும் உறுதுணையாயிருப்பதாக.

வாழ்க உலகெலாம்!

நன்றி: சித்தாந்தம் இதழ்

# வாழ்க்கை இனித்திட



புலவர் இரெ. சண்முக வடிவேல், M.A., B.Ed., திருவாரூர்.

'என்ன சார், எப்படி இருக்கிங்க?' என்று கேட்டுப் பார்ப்போம்.

'ஏதோ உங்க புண்ணியத்திலே இருக்கேன்' என்பார் ஒருவர்.

'என்னமோ பிழைத்துக் கிடக்கிறேன் போங்கள்' என்பார் இன்னொருவர்.

'உம்... இருக்கேன். இன்னும் அவன் கூப்பிடலை. சீக்கிரம் கூப்பிட்டால் போயிடலாம்ன்னு பார்க்கிறேன். கூப்பிட மாட்டேன்கிறானே' இப்படி அலுத்துக் கொள்பவர் மற்றொருவர்.

'உடலாலும் உள்ளத்தாலும் நலமாகவும் வளமாகவும் இருக்கிறேன்' என்று நிறைவாகக்கூறிடும் வல்லமை பெற்றவர்கள் யாரையும் இதுவரை சந்தித்திருக்கிறோமா? எண்ணித்தான் பார்க்கவேண்டும்.

மிக மிகச் சிலரே இவ்வாறு உள மகிழ்வோடு கூறுவார்கள்.

வாழ்க்கையில் மிகப் பலரும் சலிப்பே அடைந்திருக்க, மிகச்சிலர் மட்டும் நிறைவுடன் காணப்படுவது ஏன்?

ஆம், கசக்கிறது என்றே பலரும் கூறுகிறார்கள். இனிக்கிறது என்பவர் சிலரில் சிலராகவே இருக்கிறார்கள்.

இதற்குக் காரணந்தான் என்ன?

வறுமை என்று கூறலாமா? கூறலாம். ஆனால், வறுமையால் வாடும் இருவரில் ஒருவர் துன்புறுகிறார். இன்னொருவரோ அந்த வறுமையிலும் இன்பங் காண்கிறார். ஆக, வறுமை மட்டுமே வாழ்க்கை இனித்திடக் குறுக்கே நிற்கிறது என்று கூற இயலாது.

உடல் நலக்கேடுதான் இனிய வாழ்க்கைக்கு இடையூறாக இருக்கிறது என்று கூறிவிடலாமா? என்றால்

உடல் நலக்கேட்டுக்கு இடையேயும் ஒருவர் புன்னகையோடும் இன்னொருவர் வாட்டத்தோடும் வாழ்கிறார். எனவே, உடல் நலக்கேடு மட்டுமே இன்பம் பெறுவதற்கு இடையூறு என்று கூறிவிட லாகாது.

'வாய்த்த மனைவி அப்படி' என்பது பொறுத்தமாக இருக்குமா? என்றால் 'எப்படிப்பட்ட மனைவி கிடைத்தாலும் சரி, நல்லபடி வாழ்ந்துவிடுவது; என்று உறுதியாக சிறந்து வாழ்பவர் இல்லையா? நல்ல மனைவியே கிடைத்திருந்தாலும், 'நாசமாய் போறவள் வந்த நாளிலே இருந்து எது தொட்டாலும் துலங்கலை, துக்கிரி, துக்கிரி; என்று தூற்றித்திரிபவர் இல்லையா? எனவே இதுவும் காரணமாக ஆகிவிட முடியாது.

கணியன் பூங்குன்றன் என்ற புறநானூற்றுக் கவிஞன் சொன்னான்,

"தீதும் நன்றும் பிறர்தர வாரா"

பிறராலே நன்மை தீமை நமக்குக் கிடைப்பதாக எண்ணக்கூடாது. நாமே தான், நமக்கு நன்மையையோ தீமையையோ தேடிக்கொள்கிறோம் என்று அவர் தெளிவுபடுத்துகிறார்.

நம்முடைய நிலைமை முக்கியமல்ல. அந்நிலைமையிலும் நாம் வாழ்க்கையை எவ்வாறு அமைத்துக் கொள்கிறோம் என்பதே முக்கியம்.

அலுவலகம் முடிகிறது. சிலபேர் விரைந்து வீடுசெல்ல முற்படுகிறார்கள். சிலர் நண்பர்களிடம் பேசிக்கொண்டு காலம் கடத்துவதிலும், ஓட்டலில் சாப்பிடுவதிலும், திரைப்படம் காண்பதிலும் கடைத் தெரு சுற்றுவதிலும் நேரம் போக்கிவிட்டு ஏறத்தாழ உறக்கம் வரும் நேரத்தில் இல்லம் வருகிறார்கள் இல்லையா? ஆம், வருகிறார்கள்.

ஒருவர், வீடுசெல்ல விரைவானேன்?

இன்னொருவர், வீடு செல்வதை விலக்கப் பார்ப்பானேன்?

ஆம், வீடு ஒருவருக்கு இனிக்கிறது; மற்றொருவருக்கோ, அது கசக்கிறது;

கசப்பது வீட்டின் மேல் உள்ள குற்றமா?

வீட்டை வைத்து நடத்துபவர் மேல் இருக்கும் குற்றமா?

நிச்சயமாக, வீட்டுக்காரர் தான் வீட்டை இனிக்கவும் வைக்கிறார் கசக்கவும் வைக்கிறார்.

வீட்டுக்கு வந்ததும் அன்பு மனைவியின் இனிய புன்னகையோடு கூடிய வரவேற்பு – வீட்டு வாசலிலே;

மகிழாதா உள்ளம்?

உள்ளே வந்ததும், மனத்துக்கு இதமாக நாலு வார்த்தைகள்,

நண்பர்கள் பற்றிய உசாவல்.

"உங்கள் நண்பர் கோபுவின் மனைவி தாய்வீடு சென்றிருந்ததாகக் கூறினீர்களே, வந்துவிட்டார்களா?"

"அலுவலக மேலாளர் நன்கு பழகுகிறாரா? புதிதாக வந்திருப்பதாகக் கூறினீர்களே"

"நண்பர்வேலு உடல்நலமாகி மருத்துவ மனையிலிருந்து திரும்பிவிட்டாரா?

இப்படிக் கேட்டுக்கொண்டே மாலைச் சிற்றுண்டியையும் காப்பியையும் கொண்டு வந்து தரும் மேலான அன்பு. இதைக் கண்டு நெகிழ்ந்து விடாதா நெஞ்சம்?

'அப்பா;' என்று அன்போடு அழைத்து ஓடிவந்து ஒட்டிக்கொள்ளும் குழந்தைகள்.

'நம்ம இளங்கோ இன்று வகுப்பில் எல்லாக் கணக்குகளும் சரியாகச் செய்து நூற்றுக்கு நூறு மதிப்பெண் வாங்கியிருக்காங்க'

என்று மனைவி கூறிட அவனை மார்போடு அணைத்துக் கொள்ளும்போது உள்ளம் குளிராதா?

'நம்ம கனிமொழிக்கு நீங்க எடுத்துத் தந்த சட்டையைப் பார்த்து அவங்க ஆசிரியை நன்றாக இருக்கிறது என்று பாராட்டினாங்களாம்!'

'அப்படியாம்மா;' என்று அவளை அழைத்து உச்சிமோந்திடும்போது கருத்தெல்லாம் இனிக்குமே!

'காலையில் உனக்குக் கால்வலி என்றாயே, இப்போது எப்படி இருக்கிறது? மாத்திரை வாங்கிவந்துள்ளேன் இப்போதே ஒன்று போட்டுக்கொள் மேகலை;' என்று மனைவியிடம் அன்பைப் பொழியும் அரவணைப்பான பேச்சு,

இதைக் கேட்டவுடன் பூரித்துப்போகாத மனைவியுமா இருப்பாள்?

"நான் நினைத்தது சரியாய்த்தான் போச்சு. அலுவலகம் புறப்படுகிற நேரத்தில் கால்வலி என்றோமே, நீங்கள் அதையே நினைத்துக் கொண்டு அலுவலகத்தில் அல்லல் படுவீர்களோ என்றிருந்தேன், அதற் கேற்றபடி அதே நினைப்பாக மாத்திரை யோடு வந்திருக்கிறீர்கள்".

"அதெல்லாம் ஒன்றுமில்லை. வரும் போது மருந்துக்கடையைப் பார்த்ததும் உன் கால்வலி நினைப்பு வந்தது. வாங்கி வந்தேன். மாமா கடிதம் எழுதியிருக் கிறார்களா? உன் தங்கைக்குக் கண்ணைப் பரிசோதித்தார்களா? என்ன சொன்னா ராம் டாக்டர்?"

"நாளைக்குத்தான் கடிதம் வரும் என்று நினைக்கிறேன். அத்தை கடிதம் எழுதியிருக்கிறார்கள். உங்கள் தம்பி பம்பாயிலிருந்து நேற்றுதான் திரும்பியிருக் கிறாராம். அந்தவேலை கிடைத்துவிடும் போல் இருக்கிறது என்று எழுதியிருக்கிறார் கள். நீங்கள் வரும் ஞாயிற்றுக்கிழமை போய்ப் பார்த்துவிட்டு வாருங்கள். அவருக்கு பணம் தேவையாயிருந்தாலும் இருக்கும். எதற்கும் சென்ற மாதம் நான் செலவில் மிச்சப்படுத்தி வைத்திருக்கும் இருநூறு ரூபாயையும் கையில் எடுத்துப் போங்கள்".

இவ்வாறாக மனைவியைப் பற்றியும் மனைவியின் தாய் வீட்டைப் பற்றியும் கவலையோடு விசாரிக்கும் கணவனும்,

கணவன் - கணவனின் நண்பர்கள் - குடும்பம் - இவை பற்றி அக்கரையோடு கேட்டு உதவும் மனைவியும்

பள்ளி முதல் மதிப்பெண் பெற்று வரும் குழந்தையும் அதைப்பற்றிக் கேட்டு வைத்துக் கணவனிடம் பரிந்துரைக்கும் மனைவியும் என்று குடும்பம் அமைந்திருக்கு மானால் அலுவலகம் முடிந்ததும் அவசர அவசரமாக இல்லத்துக்கு ஓடிவரக் கண வனுக்கு இனிக்காமல் என்ன செய்யும்?

'நல்ல குடும்பம் பல்கலைக் கழகம்' என்றாரே நம் பாவேந்தர் பாரதி தாசனார்.

குழந்தைகளோடு பழகுவதும் அவர் களை நாம் நினைக்கிறபடி வளர்ப்பதும் கலையேயாகும்.

அவனை டாக்டராக்க வேண்டும் என்று நினைத்துவிட்டால் மட்டும் போதுமா? அவனும் டாக்டர் வேலையை விரும்பும்படி அவனை உருவாக்க வேண்டும். டாக்டர் களைக்காட்ட வேண்டும். டாக்டர் பணியின் இன்றியமையாமையை அவனுக்கு விளக்க வேண்டும். அவனாகவே அப்பணியின் மீது வேட்கை கொள்ள வைத்துவிடலாம். ஒரு சிறந்த மருத்துவராக ஆனாலும் மக்கட் பணிபுரிவதும் தன் குறிக்கோள் என்று அவனை உருமாற்றிய பிறகு, அதற்குச் செய்ய வேண்டியது என்ன என்பதை அவனறியுமாறு செய்தல் மிக முக்கியம். எல்லாப் பாடங்களிலும் தொண்ணூறு விழுக் காட்டுக்கு மேல் மதிப்பெண் வாங்குகிற உழைப்பு, அறிவியல் பாடத்தில் ஆர்வம்; உடலை ஓம்பும் உயர்ந்த மனநிலை; இவற்றை அவன் வாழ்க்கை நெறியாகக் கைக்கொள்ள பழக்கவேண்டும்.

அலுவலகம் முடிந்து இல்லம் வந்தபிறகு இரவில் இரண்டுமணி நேரம் தன் குழந்தை களுக்காகச் செலவிடப் பழகினால், குழந்தைகள் தந்தைமீது பாசங்கொண்டவர் களாகவும் நல்லொழுக்கங் கொண்டவர் களாகவும் வளர்வார்கள். பள்ளியில் படித்து வந்த பாடங்களில் வினாக்கள் கேட்கலாம். புரியாத செய்திகளைப் புரியவைக்கலாம். புத்தகங்களையும் பயிற்சி ஏடுகளையும் ஒழுங்காக வைத்துக் கொள்ளப் பயிற்று விக்கலாம். தங்கள் புத்தகங்களையும் துணிமணிகளையும் ஒரே இடத்தில் வைக்கவும் சரியாக எடுத்துப் பயன் படுத்தவும் கற்பிக்கலாம். அழுக்குத் துணி களை ஒரு இடத்தில் போட்டுவைக்கப்

பயிற்சி நல்கலாம். நகங்களை வெட்டி விடலாம். இவ்வாறு அவர்களை இளம் பயிராக இருக்கும் போதே நன்றாக விளைந்து பயனளிக்கக்கூடிய வகையில் பயிர் செய்யலாம்.

குடும்பம் ஒரு நல்ல வயலாகி விடுமல்லவா;

இவ்வாறில்லாமல் கணவன் வீடு வந்த உடனேயே,

"பால் பணம் கொடுக்காமல் நீங்கள் பாட்டுக்குப் போயிட்டீங்களே அவன் நாக்கைப் பிடுங்கற மாதிரி கேட்கறான்",

என்று கூறி கவலையுண்டாக்குவதும்,

"உங்க அம்மா நாளைக்கு வர்ராங் களாம். ஒரு மாசமோ இரண்டு மாசமோ, என் உயிர்தான் போகப் போவுது" என்று சொல்லி எரிச்சலை ஏற்படுத்துவதும்,

நல்ல மனைவிக்கு அடையாளமன்று. நல்ல மனைவியாக இல்லாதது அவள் குறைதான் என்றாலும்

நல்ல மனைவியாக ஆக்காதது இவன் குறையுமாகும் என்பதை மறுப்பதற்கில்லை.

கணவன் மட்டும் என்ன என்கிறீர்கள்?

"உன் தம்பியும் அப்பனும் வந்தாங்க போல இருக்கே. என்ன கொடுத்திட்டுப் போனாங்க? தரித்திரப் பயலுங்க, ஏதாவது இருந்தா எடுத்துக்கிட்டு வேணுமானா போவாங்க"

என்று கூறி அவள் மானத்தை வாங்குவதும்

"சீப்பு எங்கே போச்சு? எழவு ஒரு இடத்துல வக்கிறதும் கிடையாது; ஒன்றும் கிடையாது, நல்ல பழக்கங்களே இல்ல. உருப்படறது எங்கே;"

என்று கூறி மாண்புடைய மனைவியை மடையாளாக்குவதும்,

கணவனார் செய்யும் 'திருப்பணி'.

மனைவியிடம் குறைகாணும் கணவனின் குதர்க்க மனம் கேடு பயப்பதுதான் என்றாலும்,

கணவன் குறை சொல்லாதவாறு அவனோடு பழகத்தெரியாத மனைவியின் குற்றமும் இதில் இருக்கிறது என்பதை மறைப்பதற்கில்லை.

தேங்காய் எண்ணெய்க் கிண்ணம் வழியில் இருக்கிறது. கணவன் கவனிக்க வில்லை. காலில் பட்டுக் கிண்ணத்து எண்ணெய் முழுவதும் கீழே சிந்தி விடுகிறது,

"அறிவு இருந்தா வழியில் வைப்பாயா? அறிவுகெட்டவளே" இது கணவன்.

"கண் என்ன பிடரியிலயா இருக்கு? பார்த்து வருவது தானே?" இது மனைவி

"இப்படியே போனால் இந்தக் குடும்பத்தில் இனிமையா பொங்கும் இல்லை வெறுப்பே மிஞ்சும்.

இதையே வேறொரு விதமாக பார்க்க லாமே;

எண்ணெய் சிந்தியவுடன்,

"அடடே; நான் கவனிக்காமல் தள்ளி விட்டு விட்டேன் தாமரை;" இது கணவனின் குரலாக இருந்தால்,

"ஆகாகா; நான்தாங்க; நடுவழிலே வச்சுட்டேன், காலெல்லாம் எண்ணெயா யிட்டுங்களா? இருங்க துணிகொண்டு வந்து துடைத்து விடுகிறேன்"

என்பது மனைவியின் மன்னிப்பாக அமையும். வாழ்க்கை இனிக்கும். வளங்கள் மணக்கும்.

கணவனும் மனைவியுமாக வாழும் வாழ்கையில் நம் வாழ்வில் இனிமை மட்டுமா? நம் குழந்தைகளின் எதிர் காலமும் அமைந்திருப்பதை நாம் அறிய வேண்டும் நாம் நம் தாய் தந்தையாரை எவ்வாறு பேணிக் காக்கிறோமோ அதே

போல் தான் நம்மையும் நம் குழந்தைகள் காப்பாற்றுவார்கள். இதையே ஒரு சிறு கதையாக நம் முன்னோர்கள் கூறி வைத்திருக்கிறார்கள்.

ஒருவன் தன் தந்தையை அவரின் முதுமைக் காலத்தில் - கண்தெரியாமல் தவிக்கும் துன்ப காலத்தில் - கையில் ஒரு ஓடு தந்து கஞ்சி ஊற்றி கடுஞ்சொல் பேசி-அடித்து உதைத்து - கேவலமாக வைத்திருந்தான், திண்ணையின் ஒரு மூலையையே அவர் இருப்பிடமாக்கி. ஒருநாள் அவர் கஞ்சி ஊற்றும் வேளையில் தடவித் தடவிப் பார்த்துக் கொண்டிருந்தார், அவர் மகனோ,

"ஏ! கிழமே! என்ன தடவுகிறாய்? எங்கே தொலைத்தாய் ஓட்டினை?" என்று அடிக்கப்போகும் நேரத்தில்,

"ஏன் அப்பா! தாத்தாவைத் திட்டுகிறாய்? அவர் ஒன்றும் ஓட்டைத் தொலைக்கவில்லை. நான்தான் எடுத்து வைத்திருக்கிறேன்" என்றானாம் சிறுவன்.

"ஓட்டினை நீ ஏனடா எடுத்தாய்?" என்ற தந்தைக்கு,

"ஓட்டை ஏன் எடுத்தேன் என்றா கேட்கிறாய்? உனக்கு வயதானதும் தருவதற்காகத்தான். அதை வேறு காசு தந்து ஏன் வாங்க வேண்டும்?" என்று கூறினானாம்.

நாம் வாழும் முறையைத் தானே நம் மகனும் பின்பற்றுவான்!

அலுவலகம் செல்கிறோம். அங்கே நாம் நடந்துகொள்கிற முறை மிக முக்கியம். நமக்குக் கீழே இருப்பவரின் மதிப்பையும் மேலே இருப்பவரின் அன்பையும் பெறும் வகையில் நடக்கவேண்டும்.

அலுவலக மேலாளர் நல்ல குணம் உடையவர்தான். அதற்காக அவரிடம் நம்முடைய பழகுமுறை சரியாக அமையவில்லையென்றால் அவருடைய நல்ல குணமும் தீயகுணமாக மாறலாம்.

அவர் கீழ்நிலையிலிருந்து மேல்நிலைக்கு வந்தவராக இருக்கலாம். அதற்காக அவரைப்பற்றி அவர் இல்லாதபோது "தெரியாதா இவரை? முன்பு எப்படியோ இருந்தார். இப்போதுதான் இப்படி இருக்கிறார். என்னவோ பெரிய அதிகாரம் செய்கிறாரே!"

இந்த மாதிரி நாம் பேசிக்கொண்டிருக்கவும் வேண்டாம், அதைக் கேட்ட நண்பர் ஒருவர் மூலமாக அதனை அறிந்து மேலாளர் நம் மீது கோபம் கொள்ளவும் வேண்டாம்; அதனால் நம் வாழ்வின் இனிமைக்குச் சோதனை வரவும் வேண்டாம்.

நண்பர்களிடம் பழகுவது கூட நல்ல முறையில் அமைந்திருந்தால்தான் இனிமையாக இருக்கும்.

எவனொருவன் நண்பனிடம் பேசும்போது தன்னைப் பற்றியும் தன் பெருமைகளைப் பற்றியுமே பேசி அவனைச் சோதனைக்கு ஆளாக்குகிறானோ, அவனிடம் நண்பர்கள் பழகுவதை படிப்படியாக நிறுத்திக்கொள்ளவே விரும்புகிறார்கள்.

"நீ அன்று பூப்பந்தாட்டத்தில் வெற்றி பெற்றாயாமே! ஊரில் எல்லோரும் உன் ஆட்டத்தைப் பற்றியே பேசுகிறார்கள். சிறப்பான ஆட்டம் என்கிறார்கள். நான் அன்று இருந்து உன் ஆட்டத்தை ரசிக்க முடியாமல் போய்விட்டதே!"

என்று பேசிப் பாருங்கள் அவன் முகம் மலருவதை!

அவ்வாறு இல்லாமல்,

"நான் முந்தாநாள் பம்பாய் போனேன் வியாபாரத்தில் பெரிய வெற்றி. எல்லோரும் என்னைப் புகழ்ந்தார்கள். என் தம்பிக்கு இரண்டாயிரம் கொடுத்து உதவினேன். என் மனைவிக்கு ஒரு பட்டுப்புடவை எடுத்துள்ளேன். அதைப் பாராட்டதவர்களே கிடையாது"

இப்படிபேசிப்பாருங்கள். நண்பன் தான் என்றாலும் சுயபுராணம் பாடிக்கொண்டே இருந்தால் புளிக்காத காதும் புளித்துத் தான் போகும்! அலுக்காத நட்பும் அலுத்துத்தான் போகும்!

ஒருவருடன் பழகும்போது அவருடைய தன்மையை அறிந்து பழகுவதுதான் பண்பாடு என்று கூறப்படுகிறது.

''பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்''

கலித்தொகைப் பாடல் ஒன்று இவ்வாறு வழிகாட்டுகிறது.

மற்றவர் மனநிலையை அறிந்து அதற்கேற்ப வாழ்வதே பண்பாடு. எப்போதும் நன்றாகப் பேசுகிற நண்பர் ஒருவர் இன்று தம்மிடம் வித்தியாசமாக நடந்து கொள்கிறார் என்றால், உடனே அவர்மீது சினங்கொண்டு பேசுவதை விட,

'எப்போதும் நன்றாகப்பேசும் இவருக்கு இன்று என்ன வந்தது? வீட்டில் ஏதாவது தகராறாக இருக்கலாம். அல்லது கடன் தொல்லையோ? சரி நாளை பேசிக் கொள்ளலாம்'

என்று ஒதுங்கிக் கொள்ளுதல் நல்லது.

இல்லையேல் அவரிடம் பக்குவமாகப் பேசி மனத்துயரை மாற்றலாம். நட்பு நிலைக்கும்; மன நிம்மதியும் கொழிக்கும்.

சில நேரங்களில் மனைவி நம் வருவாய்க்கு மேல் செலவு செய்பவளாக இருந்து விடலாம். பிள்ளைகள் நம் நிலை அறியாமல் காஷ்மீர் சுற்றுப் பயணத்துக்குப் பணம் கேட்டுத் தொல்லை தரலாம்.

சற்று அமைதியாக சிந்தித்துப் பார்த்தால் வழிபிறக்கும். உடனே கோபப்படுவது இயல்பு. உட்கார்ந்து ஆராய்வதே சிறப்பு. மனைவிக்கு நிலைபுரியவில்லையா? புரியவைப்போம்!

''அடுத்த மாதத்திலிருந்து நீயே குடும்பத்தைக் கவனித்துக்கொள் கமலம். மிச்சத்தில் தாராளமாக நீ விரும்பும் பவுன் வளையலை வாங்கிக்கொள்'', என்று லாவகமாகப் பொறுப்பை அவர்களிடம் ஒப்படைத்துப் பாருங்களேன்!

பிள்ளைகளை அழைத்து,

''வரவும் செலவும் சரியாக இருக்கிறது குழந்தைகளே! காஷ்மீர் வேண்டுமானால் போய் வாருங்கள். தீபாவளியையும் பொங்கலையும் இவ்வாண்டு கொண்டாடாமல் நிறுத்திக் கொள்வோமா?''

என்று நிலைமையை விளக்கிக் கூறுங்களேன்.

எந்த இக்கட்டான நிலையிலும் நகைமுகம் மாறாமல் பேசும் பயிற்சியைப் பெற்றுவிட்டால் வாழ்க்கை இனிப்போ இனிப்போ யென்று இனிக்க தொடங்கும்.

''இடுக்கண் வருங்கால் நகுக'' என்பார் வள்ளுவரும்.

போகிற போக்கில் வாழ்கையை வாழாமல் ஒரு திட்டமிட்ட பாதையில் செலுத்தத் தெரிந்து கொள்வோமானால் எல்லார் வாழ்விலும் இனிமை பொங்கும்.

''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்
வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்''.

ரூ.5000 நன்கொடை அளித்த அன்பர்கள்:-



சீர்காழி செங்குந்தர் கல்விச்சங்கம்

## ரூ.1000 நன்கொடை அளித்த அன்பர்கள்:-



கும்பகோணம் திரு. வீ. தங்கராசு செங்குந்தர் - வாசுகி அம்மாள்



நாங்கூர் திரு. செ. முருகேச செங்குந்தர் - அசுபதி அம்மாள்



சீர்காழி செங்குந்தர் இளைஞர் அணியினர்



சென்னை திரு. M.S. ரெங்கையா B.A., - சீதாலட்சுமி அம்மாள்

தென்னிந்திய செங்குந்தர் 16-ஆவது மாநில மாநாட்டிற்கு
எங்கள் அன்பு வாழ்த்துக்கள்!

தொலைபேசி:
கடை: 405
வீடு: 406



பழநி பரிமள விலாஸ்

ஜவ்வாது வாசனை விபூதி, ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்
சாலச் சிறந்தது

**S. சித்தநாதன் சன்ஸ்,**

அடிவாரம், **பழநி,**

திண்டுக்கல் காயிதே மில்லத் மாவட்டம்.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க 16-ஆவது சமூக
கைத்தறி, மகளிர், இளைஞர் மாநாடு சிறக்க எங்களது
இதயப்பூர்வமான வாழ்த்துக்கள்.



போன்: 4590

**KASI GYPSUM MINES**
UDAMALPET

**ALUM & ALLIED CHEMICALS**
POLLACHI

**CRYSTAL SPINNERS**
UDAMALPET

**C. KASIVISWANATHAN**
KALLIDAIKURICHI

குடந்தையின்

# ஆலயப் பெருமை



குடவாயில் ந. விநாயகமூர்த்தி, B.A., B.T.,

திருக்குடந்தை மாநகரம் தஞ்சை மாவட்டத்தின் மையப் பகுதியில் அமைந்துள்ள வணிக வளம் மிக்க — தொழில் வளம் மிக்க — பண்பாட்டு வளம் மிக்க — நன்செய்யும் புன்செய்யும் வளம் கொழிக்கும் பெருநகரம்.

வட இந்தியாவில் பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒரு முறை வரும் கும்பமேளாவைப் போல், இந்நகரில் பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை நடைபெறும் மகாமகம் தனிச் சிறப்புடையது. அதுவும் இந்த ஆண்டு பிரஜோற்பத்தியில் நடைபெறுவது குறிப்பிடத் தக்கது.

பிரளய காலத்தில் இறைவன் உலகை அழிக்குங்கால் ஒவ்வோர் உயிரினத்தையும் ஒவ்வொரு குடத்திலிட்டுக் காத்து, உலகம் அழிந்தபின் அக்குடங்களிலிருந்த உயிர்களை மீண்டும் விருத்தி செய்ததாகப் புராணம் கூறுகிறது. அந்தக் குடத்தின் வாயிற் பகுதி திருக்குட வாயிலிலும், குடத்தின் ஒரு பகுதி திருக்கலய நல்லூரிலும் (சாக்கோட்டை) குடத்தின் கோணப்பகுதி கும்பகோணத்திலும் இருந்ததாகக் கூறி மகாமகத்தன்று புனித நீராட வருபவர்கள் முதலில் திருக்குட வாயிலிலும், அடுத்துத் திருக்கலய நல்லூரிலும், இறுதியாகத் திருக்குடந்தை மகாமகக் குளத்திலும் நீராடுவது மரபு.

திருக்குடந்தையில் அமைந்துள்ள பாடல் மங்களா சாசனம் பெற்ற திருக்கோயில்கள் கீழே குறிப்பிடப்படுகின்றன.

**1. திருக்குடமூக்கு:** இறைவர்: ஆதி கும்பேஸ்வரர். இறைவி: மங்களாம்பிகை. மகாமக விழாவின் மூலவர்: ஆதி கும்பேஸ்வரர். அப்பர், சம்பந்தர் ஆகியோரின் பதிகம் பெற்றது இக்கோயில்.

**2. திருக்குடந்தை கீழ்க்கோட்டம்:** இது நாகேஸ்வரர் கோயில் எனவும் அழைக்கப்படுகிறது. இறைவர்: நாகேஸ்வரர். இறைவி: பெரியநாயகி. இது அப்பர் பாடல் பெற்றது, சித்திரை 11, 12, 13–ஆம் நாட்களில் சூரியனின் ஒளி இறைவர் மேல் படுகிறது. இது சூரியன் வழிபடும் தலம்.

**3. திருக்குடந்தை காரோகணம்:** மகாமகக் குளத்தின் வடகரையில் கீழ்ப்பக்கம் இக்கோயில் உள்ளது. இது காசி விசுவநாதர் கோயில் எனவும் அழைக்கப்படுகிறது. இறைவர்: சோமநாதர். இறைவி: தேனார் மொழியாள். இது சம்பந்தர் பாடல் பெற்றது.

**4. சாரங்கபாணி திருக்கோயில்:** இது சிறந்த வைணவ திருக்கோயில். இறைவர் பள்ளிகொண்ட திருக்கோலம் உடையவர். இறைவர்: சாரங்கபாணி. தாயார்: கோமளவல்லி. பெரியாழ்வார், ஆண்டாள், திருமழிசை ஆழ்வார், திருமங்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் ஆகியோரின் மங்களாசாசனம் பெற்றது இக்கோயில்.

**5. சக்ரபாணி திருக்கோயில்:** இக்கோயில் தேர் வடிவில் அமைக்கப்பட்டுள்ளது.

**6. கோதண்டபாணி திருக்கோயில்:** இது இராமசாமி கோயில் எனவும் அழைக்கப் படுகிறது. இராமர், இலக்குவர், பரதர், சத்துருக்கனர், சீதை மற்றும் அனுமார் உருவங்கள் ஒருசேர உள்ளன. கற்றூண்கள் கலைநுணுக்கம் மிக்கவை. இக்கோயிலில் இராமாயணம் முழுவதும் சித்திரமாகத் தீட்டப்பெற்றுள்ளது.

மற்றும் உச்சிப் பிள்ளையார், பாதாள காளியம்மன், சீதளா தேவி, மாரியம்மன், பிரமன் போன்ற தெய்வங்களின் கோயில்கள் பலவும் உள்ளன். குடந்தையில் 108 திருக் கோயில்கள் உள்ளதாகக் கணக்கிட்டுள்ளனர்.

அத்வைதம் போதித்த சங்கரருக்கு ஒரு மடம் இவ்வூரில் உள்ளது. வீர சைவர்களின் பெரிய மடம் மகாமகக் குளத்தின் வடபுறம் உள்ளது. இம்மடத்தில்தான் ஒட்டக்கூத்தர் தக்கயாகப் பரணியை அரங்கேற்றம் செய்தார். இதன் அருகில் வீரபத்திரர் திருக்கோயில் உள்ளது.

தமிழகத்தின் கேம்பிரிட்ஜ் ஆகக் கருதப்படும் குடந்தை அரசினர் கலைக் கல்லூரி காவிரியின் கரையிலும், அரசினர் மகளிர் கல்லூரி அரசலாற்றின் கரையிலும் அமைந்து அறிவொளி வீசுகின்றன. கணிதமேதை இராமானுஜம் இந்த அரசினர் கலைக் கல்லூரியில் பயின்று, பேராசிரியராகப் பணியாற்றினார்.

குடந்தையில் எண்ணற்ற சிறு தொழிற்சாலைகள் உள்ளன. வெண்கல, பித்தளை, எவர்சில்வர் பாத்திரங்கள் இந்நகரில் மிகவும் சிறப்பாக உற்பத்தி செய்யப்படுகின்றன.

*With best compliments from:*

Phone: 572722

**POOVAI POLY CLINIC & DIAGNOSTIC SERVICES,**

**No. 5, Sannadhi Street, Poonamallee, MADRAS - 600056.**

Partners:

**Dr. D. THANIKACHALAM,** M.S., M.Ch., (Uro) F.I.C.S.
Consultant Surgeon & Urologist.

**Dr. T. V. KUMAR,** M.D., (Med.) D.D., F.C.C.P.,
Consultant Physician & Diabetologist.

Consultant Services, X-Ray, E.C.G., Laboratory, Physiotherapy & In-Patient Services.

# தஞ்சை மாவட்டத்தின் வழிபாட்டுத் தலங்கள்

## சிவத்தலங்கள் — பாடல் பெற்றவை

**திருவையாறு வட்டம்**

1. திருக்கண்டியூர்
2. திருப்பூந்துருத்தி
3. திருவாலம் பொழில்
4. திருக்காட்டுப்பள்ளி
5. திருக்கானூர் (மணல்மேடு)
6. திருபெரும்புலியூர்
7. திரு தில்லைத்தானம்
8. திருவையாறு
9. திருப்பழனம்
10. திருச்சோற்றுத்துறை
11. திருவேதிக்குடி

**பாபநாசம் வட்டம்**

12. திட்டை
13. பசுபதிகோவில்
14. சக்காப்பள்ளி (ஐயம்பேட்டை)
15. வட குரங்காடுதுறை
16. திருவைகாவூர்
17. திருப்பாலத்துறை
18. திருநல்லூர்
19. திருக்கருகாவூர்

**வலங்கைமான் வட்டம்**

20. ஆவூர்
21. ஆலங்குடி
22. கருவாய் கனக தென்புத்தூர் (ஆண்டாங்கோயில்)
23. ஹரித்துவார் மங்கலம்
24. அவனிவ நல்லூர்

**கும்பகோணம் வட்டம்**

25. திருவலஞ்சுழி
26. பட்டீஸ்வரம்
27. பழையாறை – வடதளி
28. சத்திமுத்தம்
29. குடமூக்கு (குடந்தை)
30. கீழ்க்கோட்டம் (குடந்தை)
31. காரோகணம் (குடந்தை)
32. கொட்டையூர்
33. இன்னம்பூர்
34. திருப்புறம்பியம்
35. திருவிஜயமங்கை
36. திருவிசநல்லூர்
37. சேங்கனூர்
38. சிவபுரம்
39. திருக்கலயநல்லூர் (சாக்கோட்டை)
40. கருக்குடி (மருதாநல்லூர்)
41. அரிசில்கனாபுத்தூர் (அழகாபுத்தூர்)
42. திருநரையூர்
43. திருப்பத்துறை
44. திருச்சேரை
45. திருநாலூர் மயானம்

**திருவிடைமருதூர் வட்டம்**

46. திருநாகேசுவரம்
47. திருவிடைமருதூர்
48. திருத்தேவன்குடி
49. திருக்கோடிக்காவல்
50. திருமங்கலக்குடி
51. கஞ்சனூர்
52. திருவாப்பாடி
53. திருப்பனந்தாள்
54. பந்தநல்லூர்
55. தென் குரங்காடுதுறை
56. தென்னக்குடி
57. வைகல்
58. திருக்கோப்பியம்
59. மயிலாடுதுறை
60. திருநீடூர்
61. திரு நின்றவூர்
62. திருக்கருப்பறியலூர் (தலைஞாயிறு)
63. திருக்குரக்கா
64. திருவாளப்புத்தூர்
65. இலுப்பப்பட்டு

66. குறுக்கை
67. திருஅன்னியூர் (பொன்னூர்)
68. மேலைத் திருமணஞ்சேரி
69. கீழைத் திருமணஞ்சேரி
70. திருவேள்விக்குடி
71. திருவழுந்தூர்
72. திருத்துருத்தி (குத்தாலம்)
73. திருவாவடுதுறை
74. திருநல்லம் (கோணேரிராஜபுரம்)

**சீர்காழி வட்டம்**

75. திருப்புன்கூர்
76. புள்ளிருக்கு வேளூர்
(வைத்தீஸ்வரன் கோவில்)
77. சீர்காழி
78. திருக்கோலக்கா
79. திருக்கடாவூர் (திருக்கருகாவூர்)
80. திருநல்லூர் பெருமாளம்
(ஆச்சாள்புரம்)
81. கோயிலடி பாளையம்
(மகேந்திரப்பள்ளி)
82. தென்முல்லை வாசல்
83. திருவெண்காடு
84. திருக்கலிக்காமூர்
(அன்னப்பன் பேட்டை)
85. கீழைத் திருக்காட்டுப்பள்ளி
86. திருச்சாய்க்காடு (சாயாவனம்)
87. திருப்பல்லவனீஸ்வரம்
(காவிரிப்பூம்பட்டினம்)

**தரங்கம்பாடி வட்டம்**

88. திருவிளநகர்
89. திருச்செம்பொன்பள்ளி
(செம்பனார்கோயில்)
90. திருநளிப்பள்ளி (புஞ்சை)
91. திருக்கடைமுடி (கீழையூர்)
92. திருவலம்புரம் (மேலப்பெரும்பள்ளம்)
93. ஆக்கூர்
94. தலைச்சங்காடு
95. திருக்கடையூர்
96. திருமயானம்
97. கீழ்ப்பாசலூர்
98. குறுமணக்குடி

**நன்னிலம் வட்டம்**

99. கருவேலி
100. திருவீழிமிழலை
101. அன்னியூர்
102. திருச்சிறுகுடி
103. திருப்பாம்புரம்
104. திருமீய்ச்சூர்
105. திருமீய்ச்சூர் இளங்கோயில்
106. கோட்டாறு
107. சிதலைப்பதி
108. திருமாகாளம்
109. அம்பர்
110. திருப்புகலூர்
111. திருப்புகலூர் வர்த்தமானீஸ்வரம்
112. சீயாத்த மங்கை
113. திருமருகல்
114. திருச்செங்காட்டங்குடி
115. திருக்கண்ணபுரம்
116. திருப்பயத்தாங்குடி
117. திருவிற்குடி
118. திருப்பனையூர்
119. திருக்கண்டீஸ்வரம்
120. நன்னிலம்
121. திருவாஞ்சியம்

**குடவாசல் வட்டம்**

122. திருக்குடவாயில் (குடவாசல்)
123. திருக்கொள்ளம்புதூர்
124. திருவிடைவாயில்
125. தலையாலங்காடு

**திருவாரூர் வட்டம்**

126. திருவாரூர்
127. திருவாரூர் அறநெறி
128. திருவாரூர் கீழவீதி
129. கரையபுரம்
130. பெருவேளூர்
(மணக்கால் அய்யம்பேட்டை)
131. திருவிளமர்
132. திருப்பள்ளி (முக்கூடல்)
133. கீழ்வேளூர்
134. தேவூர்
135. கோயில் கன்றாப்பூர்

136. வலிவலம்
137. திருக்காறாயில்
138. திருநெல்லிக்கா
139. திருநாட்டியத்தரங்குடி
140. ஓகைப் பேரையூர்

நாகை வட்டம்

141. நாகைக் காரோகணம்
142. சிக்கல்
143. திருவாய்மூர்
144. திருக்கோளிலி (திருக்குவளை)
145. திருமறைக்காடு (வேதாரண்யம்)
146. அகத்தியன் பள்ளி
147. கோடிக்கரை

திருத்துறைப்பூண்டி வட்டம்

148. திருத்தங்கூர்
149. கள்ளிக்காடு
150. கைச்சினம் (கச்சனம்)
151. சித்தாய்மூர்
152. தண்டலஞ்சேரி
153. இடும்பாவனம்
154. கற்பகநாதர் குளம்
155. கோயிலூர்

மன்னார்குடி வட்டம்

156. பாதாளேச்சுரம் (பாமணி)
157. திருவெண்டுறை
158. கோட்டூர்
159. திருக்களர்

ஒரத்தநாடு வட்டம்

160. பருத்தியார் கோயில்

நீடாமங்கலம் வட்டம்

161. கோயில் வெண்ணி
162. பூவனூர்

புதுவை மாநிலம்

163. காரைகோவில்பத்து
164. திருநள்ளாறு
165. திருவேட்டக்குடி

## வைணவத் தலங்கள்
### மங்களா சாசனம் பெற்றவை

1. திருக்குடந்தை
2. திருநரையூர் (நாச்சியார் கோவில்)
3. திருச்சேரை
4. திருக்கண்ண மங்கை
5. திருக்கண்ணன் குடி
6. திருநாகை (நாகைப்பட்டினம்)
7. திருக்கண்ணபுரம்
8. திருவிண்ணகர் (ஒப்பிலியப்பன் கோவில்)
9. திருவழுந்தூர் (தேரழந்தூர்)
10. திருக்கண்டியூர்
11. திருக்கூடலூர்
12. திருக்கவித்தலம் (கபிஸ்தலம்)
13. திருபுள்ளம் பூதங்குடி
14. திருஆதனூர்
15. திருத்தஞ்சை மாமணிக்கோயில்
16. திருநந்திபுர விண்ணகரம்
17. திருவெள்ளியங்குடி
18. திருச்சிறுபுலியூர்
19. திருத்தலைச்சங்க நாண்மதியம் (தலைச்சங்காடு)
20. திருஇந்தளூர் (மயிலாடுதுறை)
21. திருநாங்கூர் தலங்கள் 8
22. திருக்காழிச் சீராம விண்ணகரம் (சீர்காழி)
23. திருவெள்ளக்குளம்

## நவக்கிரக தலங்கள்

சூரியன் – சூரியனார்கோவில்
சந்திரன் – திங்களூர்
செவ்வாய் – வைத்தீஸ்வரன்கோவில்
புதன் – திருவெண்காடு
வியாழன் – ஆலங்குடி
வெள்ளி – திருநாவலூர்
சனி – திருநள்ளாறு
இராகு – திருநாகேஸ்வரம்
கேது – கீழப்பெரும்பள்ளம்

## நம்குல புலவர் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் வாழ்ந்த இடங்கள்

பிறந்த இடம் – மணக்குடி, வேதாரண்யம்.
கலைமகள் அருள் பெற்ற இடம் } கூத்தனூர்
தக்கயாகப்பரணி அரங்கேற்றிய இடம்: பெரிய மடம், குடந்தை.
சமாதி அடைந்த இடம் – தாராசுரம்.

## நமது செங்குந்தர் மாளிகை




தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்
89, அரண்மனைக்காரத் தெரு,
சென்னை.
தொலைபேசி எண் : 52 08 26

## மாநாடு தொடக்கம் — இறைவணக்கம்



## ரூபாய் 500/– அளித்த அன்பர்கள்



திரு. D. கோவிந்தராஜ் செங்குந்தர்
மேலப்பாதி



திரு. S.V.Rm.A. நடராச செங்குந்தர்
அம்பாசமுத்திரம்



திரு. T. சாமிநாத செங்குந்தர்
பெருந்துறை

# செங்குந்த மரபின் மாட்சிகள்

கவிஞர் தென்னவன், எம்.ஏ., பி.எட்.

**முன்னுரை:**

நாம் கயிலாயப் பரம்பரையினர்; செவ்வேல் முருகன் தம்பியர்; வீரவாகு தேவரின் வழித் தோன்றல்கள். நம்முடைய சிறப்புகளை நம் செங்குந்தர்களே சரியாக உணராத காலம் ஒன்றிருந்தது. இதனை உணர்ந்த நம் முன்னோர்கள் 1926-ஆம் ஆண்டு நமது முன்னையப் பெரும் புலவர் வண்ணக் களஞ்சியம் காஞ்சிநாகலிங்க முனிவர் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு செங்குந்தர் சிறப்புகளைக் கூறும் சிற்றிலக்கியங்களை எல்லாம் தேடித் தொகுத்து **'செங்குந்தர் பிரபந்தத் திரட்டு'** எனும் பெரு நூல் ஒன்றை வெளியிட்டு உள்ளனர்.

இந்நூல் ஈட்டி எழுபது, எழுப்பெழுபது, திருக்கை வழக்கந்தந்தாதி, பிள்ளைத் தமிழ், தசாங்கம், செங்குந்தர் மரபு விளக்கம், செங்குந்தர் சிலாக்கிய மாலை, செங்குந்தர் குலமாட்சி எனப்பல சிற்றிலக்கியங்களைத் தன்னுட் கொண்ட செங்குந்தர் தம் கலைக் களஞ்சியம் எனலாம்.

இத்திரட்டில் அடங்கியுள்ள ஒவ்வொரு சிற்றிலக்கியமும் ஒவ்வொரு வகையில் செங்குந்தர்களின் சிறப்புகளை விரித்துரைக்கின்றது. சில இலக்கியங்கள் கூறியது கூறலாகச் சொன்ன செய்திகளையே மீண்டும் உரைப்பனவாக உள்ளன; எனினும் சிறப்பு நோக்கியும், ஆசிரியர்கள் பலராதலாலும் இவ்வாறு கூறுவது குற்றமுடைமை ஆகாது என அமைதியடையலாம்.

**செங்குந்தர் மரபு விளக்கம்:**

இத்திரட்டில் அடங்கியுள்ள **'செங்குந்தர் மரபு விளக்கம்'** எனும் சிற்றிலக்கியத்தில் கூறப் பட்டுள்ள இரு செய்திகள் நம்முள்ளத்தைத் தொடுவனவாக அமைந்துள்ளன.

**முதல் செய்தி:**

நாம் உலகினர்க்கு ஆடைகள் நெய்து கொடுக்கும் அறப்பணியைத் தொன்று தொட்டு ஆற்றி வருகின்ற குலத்தினர். அதனால் நாம் மற்றவரின் மானத்தை காக்கின்றவர்கள் மட்டுமல்ல; வளர்க்கின்றவர்களும் ஆவர் என்கின்றார் செங்குந்தர் மரபு விளக்கத்தின் ஆசிரியர் கார்த்திகேய முதலியார். நாம் ஊர் தோறும், சிறந்த ஒழுக்கங்களைக் கைக் கொண்டு அறத் தொழிலாம் நெய்தல் தொழிலை மேற் கொண்டு வாழ்ந்து வருவதால்தான் மழை பொழிகின்றது; பசுக்கள் பால் கறக்கின்றன; இல்லங்கள் செழிக்கின்றன; தானங்கள் வளர்கின்றன; தருமங்கள் வாழ்கின்றன; தமிழ் ஞானம் ஓங்குகின்றது; சிவஞானம் பரவுகின்றது என்கிறார். மேலும் இதன் ஆசிரியர்,

"வானம் வளரும்; பசுக்கள் வளரும்; அகம் வளரும்;
தானம் வளரும்; தருமம் வளரும்; தமிழ் முதலாம்
ஞானம் வளரும்; சிவஞான போத நலம் வளரும்;
மானம் வளர்க்கின்ற செங்குந்தர் வளர்தலினே".

**அடுத்தச் செய்தி:**

இராம காதையில் இராமன், மந்தரை என்னும் கூனியின் சூழ்ச்சியால் மனம் திரிந்த தன் சிற்றன்னை கைகேயியின் சொல்கேட்டுத் தன் துணைவி சீதையுடனும், தம்பி இலக்குவனுடனும் பதினான்காண்டுகள் காடாளச் செல்கின்றான். அவ்வாறு அவன் செல்லும் போது, அரசமரபின் ஆடம்பரமான உடைகளாகிய பட்டுப் பீதாம்பரங்களை எல்லாம் களைந்து வைத்து விட்டு, காட்டில் முனிவர்கள் உடுத்தக் கூடிய மரவுரிகளை உடுத்துச் செல்கின்றான். இராமன் இவ்வாறு மரவுரியை உடுப்பதற்குக் காரணம் கோயிற் வழிபாட்டில் சிறந்த செங்குந்தர்களை நட்பாகக் கொள்ளாமையே; செங்குந்தர்களை நட்பாகக் கொண்டிருந்தால் மரவுரி உடுத்தாமல் அவர்கள் நெய்த கைத்தறி ஆடைகளை உடுத்துக் காட்டிற்குச் சென்றிருக்கக் கூடும்!

"பாராளும் செல்வம் தவிர்ந்தருங் காட்டிடை பட்டுறுநாள்
ஓராமை பூசித்த கோயிற்செங் குந்தரை யோர்சிறிதும்
சேரா திருந்த தகைமையினால் உடைச் சீரிலனாய்ச்
சிராமன் அன்று மரவுரி பூண்டு திரிந்தனனே".

**செங்குந்தர் குல மாட்சி:**

செங்குந்தர் பிரபந்தத் திரட்டில் மற்றொரு சிற்றிலக்கியம் **செங்குந்தர் குலமாட்சி** என்பதாம். இவ்விலக்கியத்துள் கடம்பவன புராணம், மதுரைப் புராணம், கருவூரார் கடைக் காண்டம், அகத்தியர் மரபு நூல், ஸ்ரீகந்த புராணம், திருவாரூர் லீலை முதலிய நூல்களில் சொல்லப்பட்டச் செங்குந்தர் பற்றிய சிறப்புச் செய்திகளைப் பெருந்திருவினார் தி.க.ச. சபாபதி முதலியார் என்பார் தொகுத்து அளித்துள்ளார். அவற்றுள் மூன்று செய்திகள் மிகச் சிறப்பானவை; வியக்கத்தக்கவை.

**முதல் செய்தி:**

பிற சமூகத்தார்களில் பலரும் ஆடு, பன்றி, மான் முதலிய விலங்குகளையும், கோழி புறா முதலிய பறவைகளையும் கொன்று தின்னும் வழக்கம் உடையவர்களாக இருக்கிறார்கள். ஆனால் நம் செங்குந்தர் மரபினர்க்கு அவ்வாறு ஓர் உயிரைக் கொன்று தின்னும் வழக்கம் இல்லையாம். இதனால் அவற்றை உண்பார் செங்குந்தர் மரபினர் அல்லர் என்பது பெறப் படுகிறது.

"சதுர்மறை நாலில் இல்லை; சாத்திரம் ஆறில் இல்லை;
பதினெண் புராணத்(து) இல்லை; பத்திரண்டு எட்டில் இல்லை;
முதலியர் மூவர் சொல்லின் முனிமொழி குறளில் இல்லை;
உயிர்வதை செய்வது உண்ணல் செங்குந்தர் மரபுக்கு இல்லை".

— கடம்பவன புராணம்.

இரண்டாம் செய்தி:

சிறந்த ஒழுக்கங்களைக் கைக்கொண்ட கைக்கோளர்களாகிய செங்குந்தர்கள் யாருக்கும் மனதாலும் தீமை நினையாத சிலர்கள். எனவே இத்தகையச் செங்குந்தர்கட்கு பிற சமூகத்தார் தீமை செய்யக் கனவு கண்டால்கூட அச்சமூகத்தார், தாம் பெற்ற மக்கட் செல்வங்களையும், ஆருயிர் மனைவியையும், உழைத்துச் சேர்த்தப் பொருள்களையும் இழந்து மற்றவர் இடும்சோற்றைக் கையில் ஏந்தி, காடெல்லாம் சுற்றி இறுதியில் கூற்று வனுக்கு இரையாகி கொடிய நரகம் புகுவார்களாம்.

"கைக்கோளர் தமக்கு நிந்தை கனவிடை செய்த பேர்கள்
மக்களும் மாடும் தோற்று மனைவியும் பொருளும் தோற்றுக்
கைக்குளே அன்னம் ஏந்திக் காட்டகம் எங்கும் சுற்றித்
தக்கபேர் நமனுக்(கு) ஆளாய்த் தாம்நர(கு) எய்துவாரே".

—கடம்பவன புராணம்

மூன்றாம் செய்தி:

கொலை, களவு, சூது, குடி, பிறன்மனை நயத்தல் ஆகியவற்றை ஐம்பெரும் பாவங்கள் என்பர். பசுக்களையும், பெண்களையும் தவமுடையவர்களையும், வேதம் ஓதும் அந்தணர் களையும், சின்னஞ்சிறு குழந்தைகளையும் கொன்றவர்கள்—ஒருவர் செய்த நன்றியை மறந் தவர்கள்—தனக்குக் கல்வி தந்த குருவினுடைய செல்வத்தை அழித்தவர்கள்—ஆகிய இம் மூவரின் பாவச் செயல்கள் அனைத்தும் தீர வேண்டுமெனில் அதற்கொரு வழி உண்டென்று மதுரைப் புராணம் கூறுகிறது. இப்படிப் பட்ட பாதகர்களாகிய பாவிகள், செங்குந்தர்கள் வாழும் ஊர்கள் எங்கே உள்ளன என்று தேடிச்சென்று, அங்கே உள்ள செங்குந்தர் வீதிகளில் புகுந்து, செங்குந்தர் வீடுகளில் சோற்றுப் பிச்சை வாங்கி உண்டார்களானால் அவர்களின் பாவங்கள் அனைத்தும் உடன் மறைந்து விடுமாம்.

"கோக்களை மின்ன னாரைத் தவத்தரைக் குலத்தில் வேத
மாக்களைச் சிதவைக் கொன்றான், செய்ந்நன்றி மறந்தான், ஆசான்
ஆக்கமது அழித்தான் பாவம் அனைத்தும் செங்குந்தர் வீதி
தேக்கிடப் பிச்சை வாங்கி யுண்டிடத் தீரும் அன்றே".

— மதுரைப் புராணம்.

முடிவுரை:

செங்குந்தர் அறச்சிந்தையர்; நல்லனவே எண்ணியும் பேசியும் செய்தும் வாழும் தூய நெறியினர். இவர்களின் சிறப்புகளை பலநூல்கள் பலவாறாகப் போற்றியுரைக்கின்றன. அவற்றுள் இக்கட்டுரையில் செங்குந்தர் வளர்வதால் நாடு பெறக் கூடிய பயன்கள், இராம பிரான் மரவுரி தரித்ததன் காரணம், ஒன்றன் உயிரைக் கொன்று தின்னாத மரபினர் செங்குந்தர் என்பது, செங்குந்தர்க்கு நிந்தை செய்வார் அடையக் கூடிய இன்னல்கள், பாவங்கள் பல செய்தாலும் செங்குந்தர் வீதியில் பிச்சை எடுத்தால் அவை தீரும் என்ற கருத்து, ஆகிய ஐந்து செய்திகள் மட்டும் செங்குந்த மரபின் மாட்சிகளாகக் கூறப்பட்டன. நம் முன்னோர் உரைத்த இம்மொழி பொருளை நாமும் பொன்னே போல் போற்றி வாழ் வாங்கு வாழ்வோமாக.



# சிவத் தலங்களில் கொடியேற்றும் செங்குந்தர்

தொகுப்பு: ச.கு.பா. பழநிவேல், கூறைநாடு.

பூர்வம் தில்லைவாழ் அந்தணருளும் சந்தானகுரவருளும் ஒருவராகிய உமாபதி சிவாச்சாரியார் காலத்தில் அத்தில்லையில் அரசாண்டிருந்த திரியம்பகச் சோழராசன் சிவாச்சாரியாரது பத்திமையையும் அதனால் விளங்கும் தெய்வீகத் தன்மைகளையும் நன்கு உணர்ந்து அவரிடத்தில் தனக்குற்ற மெய்அன்பின் மேம்பாட்டால் சிவிகை — கவிகை— திருச்சின்னம் — சாமரம் — பகற்றீவட்டி என்னும் இவைகளை விருதாகக் கொடுத்து உபசரித்து வந்தான்.

அந்நாளில் ஓர் நாள் உமாபதி சிவம் தாம் அக்கால் ஏற்றுள்ள கட்டளையாகிய ஸ்ரீ நடராசப் பெருமானது உச்சிக்கால பூசையை முடிக்குமாறு அச்சின்னங்களோடு சென்று முடித்துவிட்டுச் சிவிகை மீதாரோகணித்து வெண்கொற்றக்குடை நிழல் தரவும் திருச்சின்ன மூதவும் வெண்சாமரை இரட்டவும் பகல் தீவட்டி பிடித்து வரவும் தமது மாளிகை நோக்கிச் செல்லுகையில், எதிர்பட்டு எழுந்தருளிவரும் சந்தானகுரவருள் ஒருவரும் அவதாச்சிரமியுமாகிய மறைஞானசிவம் அவர் வருகின்ற ஆடம்பரத்தைக் கண்ணுற்று, ஏன் ஐயா பகல் குருடரே என்று உரத்துக் கூவினர்.

அதுகேட்டு உமாபதி சிவம் திடுக்கிட்டுத் திடீரென்று சிவிகையினின்றும் இழிந்து தண்டாகாரமாகப் பணிந்து எழுந்து அவரைப் பின் தொடர்ந்து செல்ல, அவரோடும் வார்த்தையாடிக் கொண்டு சென்ற மறைஞான சிவத்தார்க்குத் தீபனம் உண்டாக, அக்கால் தாம் சென்று கொண்டிருந்த இடம் செங்குந்தர் வீதியாய் இருப்பதைக்கண்டு உமாபதி சிவத்தை நோக்கி சிவகுமார அனுசர்கள் ஆகிய செங்குந்தர்கள் வீதி இது, ஆகையால் இவர்களிடத்து நம்பசியைத் தீர்த்துக் கொள்ளுவோமாயின் சிவப்பிரசாதமாகும் என்று கூறி, அங்கு நூல்பாவை விரித்துக் கொண்டிருந்த செங்குந்தர்களிடம் சென்று ஆகாரம் தருமின்கள் எனக் கேட்டனர்.

அதுகேட்ட செங்குந்தர்கள் துணுக்குற்று, சுவாமிகளே! தேவரீர் அடியேங்கள் குடிலுக்கு எழுந்தருளின் அறுசுவையோடும் கூடிய அமுது படைக்க ஆவலுடையோம் ஆயினோம் என்று கூறினார்கள். அது வினவிய மறைஞானசம்பந்தர் அங்குச் செங்குந்தர்கள் நூல் தோய்ப்பதற்காகக் கொணர்ந்து வைத்திருந்த புல்லரிசிக் கூழினை நோக்கி இதை வார்க்கத் தடையாது என்று வினவ, அதற்கு அவர்கள் — அந்தோ! இது நாங்கள் நூல் தோய்ப்பதற் காகக் கொணர்ந்த உப்பற்ற புல்லரிசிக் கூழ் என்று ஓத அவர் நீங்கள் கரத்தால்பரிசித்த யாவும் தேவர் அமுதத்தினுஞ் சிறந்த சிவப்பிரசாதமாகும் ஆகையால் இன்னும் தடை

கூறாது முகந்து பெய்யும் என்று கட்டளையிட அவர்கள் கட்டளையை மறுக்கக் கூடாதவர் களாகி அவ்வாறே முகந்து அவர் கரத்திற் பெய்தார்கள். அதை அவர் உண்ணுகையில் அவர் முழங்கையிரண்டிலும் வழிந்த கூழை அருகிலிருந்த உமாபதி சிவாசாரியர் தமது கைகளை ஏந்திப் பிடித்து மாறி மாறி உண்டனர்.

அத்தருணத்தில் அங்கு வழியே எழுந்தருளிய ஏனைய தீக்ஷிதர்களில் சிலர் அதனைக் கண்ணுற்று அருவருத்துச் செல்ல, அப்பால் தமது ஆசிரியரை அரிதில் பிரிந்து இல் அடைந்த உமாபதி சிவம் தமது வழக்கப்படி மறுதினம் உச்சிக்கால பூசைக்கு சபைநோக்கிப் போக, முன்னம் மறைஞான சம்பந்தரின் முழங்கையால் வடிந்த கூழைக் குடிக்கையிற் கண்ட தீஷதர்கள் அவரைச் சபைக்குட் செல்லவொட்டாது தடுக்க உடனே அவர் சிதம்பரத்திற்கடுத்த கொற்றவன்குடி என்னும் ஊரிற்சென்று வசித்து தமது ஆன்மார்த்த மாய் உள்ள சபாநாயகரைத் தினமும் மனத்தால் பூசித்துக் கொண்டிருந்தார்.

அப்பால் சில நாட்கள் சென்றபின் ஆனித்திருமஞ்சன மகோற்சவம் நேரிட, அதன் துவசாரோகண உற்சவம் அவ்வூராளும் சோழ அரசனுடையது ஆகையால் அக்கொடி சற்றும் ஏறாதிருக்கக் கண்ட அவ்வரசன் வருந்தி, அடியேன்யாதோர் தவறும் இன்றி அரசு செலுத்தி வருகையில் இவ்விதமாகத் துவசாரோகணம் தடைபட வேண்டிய காரணம் என்னை எம்பெருமானே! அதை அறிவிக்க வேண்டும் என்று துதித்துக் கண்கலுழ்ந்து நின்றான்.

அக்கால் நடராசப் பெருமான் திருவுளம் இரங்கி ஓ! வளவ, தீக்ஷிதர்கள் உமாபதி இடத்தில் அசுத்தம் எண்ணித் துரத்தி விட்டதை நீ கவனிக்காமையால் இவ்வித இடையூறு நேர்ந்தது. இப்போதே கொற்றவன்குடிக்குச் சென்று அவனையும் அவன் ஆசிரியனுக்குக் கூழ்வார்த்த செங்குந்தர்களையும் அழைத்து வந்து ஏற்றுவித்தால் ஏறும் என்று அசரீரி வாக்கு அருளினார்.

அதுகேட்ட திரியம்பகச் சோழன் பரவசமாய்த் தில்லைவாழ் அந்தணர்களுடன் சென்று உமாபதி சிவாசாரியாரையும் செங்குந்தத் தலைவர்களையும் நடேசப் பெருமான் திருஅருள் பாட்டினைக் கூறி அழைத்து வந்து துவசாரோகணம் செய்வித்தருள வேண்டுமெனப் பிரார்த்திக்க, அதற்குச் செங்குந்தர்கள் சம்மதித்தார்கள். ஆயினும் அது வரையில் அவ்வரச னால் அவ்வுற்சவத்திற்கெனச் செலவு செய்துள்ள பொருள் தொகை எவ்வளவோ அவ்வளவையும் அவனுக்குக் கொடுத்துவிட்டு அவனது பட்டுக்கொடியை விலக்கித் தங்கள் காவிக் கொடியை நிறுத்தி உமாபதி சிவத்தால் "கொடிக்கவி" என ஓர் பிரபந்தம் பாடு வித்து அம்மகோற்சவத்தை மிகவும் அற்புதத்தோடு நிறைவேற்றினார்கள்.

அன்றுமுதல் இன்றுகாறும் அத்துவசாரோகண மகோற்சவம் இச்செங்குந்தர் குல திலகர்களாலேயே நிறைவேறி வருகின்றது என்பது உண்மையாகும்.

இவ்வுலகின் எல்லாத் தலங்களிலும் உள்ள சிவகலைகள் யாவும் அர்த்தசாமத்தில் வந்து ஒடுங்குவதற்குரிய முத்தித்தலமாகிய அத்தலைமைத்தலத்தில்,

"உலகோர் மெச்சப் பொருந்துதிருச்
சிற்றம்பலந்தன்னைச்
செம்பொன்னான் மேயுங்கை
யுற்ற வர்த்தசாமத்திலுள் வாயில் தெற்றி
புனை முத்திரையதனைப் போடுங்கை"

என்ற ஆன்றோர் வாக்கின்படி நாளது காறும் வரும் அர்த்தசாம பூசை செய்து அவர்கள் காலசந்திபூசை, துவசாரோகண மகோற்சவம், சூரசம்மாரம், ஏனைய பல தலங்களிலும் அவர்கள் நடாத்தியும் நாளது காறும் நடாத்திக் கொண்டும் உள்ள கைங்கரியங் களையும், அவர்களுடைய பிரதாபங்களைப் பற்றியும் அவர்கள் செய்துவரும் சிவபுண்ணியங் களைப் பற்றியும் ஆங்காங்கு செப்பேடுகளினும் சிலைகளினும் பொறித்துத் தாபித்துள்ளனர்.

மூலம் 1895-ம் ஆண்டு ஸ்ரீ காரணீசுரம் திரு. தி. தருமலிங்க முதலியார் அவர்களால் சென்னை இந்து தியாலாஜிகல் அச்சியந்திர சாலையில் பதிப்பிக்கப்பட்ட ஒட்டக்கூத்தர் சரித்திரம் இரண்டாம் பதிப்பு பக்கம்: 109, 110, 111.




தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் 16ஆவது மாநில மாநாடு
வெற்றிபெற எங்கள் வாழ்த்துக்கள்

**தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்**

மேட்டூர் அணை நகர கிளை :: மேட்டூர் அணை - 636 401.

மேட்டூர் வட்டம், சேலம் மாவட்டம்.

| | | |
|---|---|---|
| **P. E. ஆறுமுக செங்குந்தர்,** | **T. V. சண்முகசுந்தரம்,** | **P. கந்தசாமி,** |
| தலைவர். | செயலாளர். | பொருளாளர். |
| (P.E. ஆறுமுக முதலியார் & சன்ஸ்) | (அப்சரா சில்க் ஹவுஸ்) | (சந்திரசேகர ஸ்டோர்) |

செயற்குழு உறுப்பினர்கள்:

| | | |
|---|---|---|
| திரு. P. முருகேசன், | திரு. A.C. நடராஜன், | திரு. G. ஆறுமுகம், |
| திரு. M. பெரியசாமி, | திரு. V. ஜெயன்னாதன், | திரு. K. மாணிக்கம், |
| திரு. K. சுப்ரமணி, | திரு. M.N. துரை, | திரு. S. குணசேகரன். |
| திரு. S. கௌரிசங்கர், | திரு. P. ராஜாராம், | |

ஆலோசனைக் குழு:

**திரு. V. குமாரசாமி, செங்குந்தர், தலைவர்.**

உறுப்பினர்கள்:

| | |
|---|---|
| திரு. A.C. அர்த்தநாரி செங்குந்தர் | திரு. A. கிருஷ்ணசாமி செங்குந்தர் |
| திரு. C. ரத்தினம் செங்குந்தர் | திரு. K.V. சொக்கநாத செங்குந்தர் |
| திரு. S. மணி செங்குந்தர் | திரு. K. குழந்தைவேல் செங்குந்தர் |

# வல்லானை வென்ற செங்குந்தர் பன்னிருவர்

[இரா. மாசிலாமணி, எம்.ஏ.,(எம்.ஃபில்.), கூறைநாடு]

கவிப் பேரரசர் ஒட்டக்கூத்தர் தாமியற்றிய ஈட்டி எழுபது என்ற இனிய நூலில் பன்னிரு பாடல்களில் (பாடல்கள் 46 — 57) செங்குந்தர் பன்னிருவர் வீரச் சிறப்பையும், மூன்று பாடல்களில் (58 — 60) அவர்கள் வல்லான் என்ற இரட்டனை வென்ற புகழையும் குறிப்பிடுகின்றார். பழுவை வீரன், பழுவை நாராயணன், கச்சித் தனியன், ஒற்றியூரான், களந்தையரசன், புற்றிடங்கொண்டான், கோளாந்தகன், புலியூர் பள்ளிகொண்டான், பிணவன், கண்டியூரன், முதுகுன்ற மணியன், தஞ்சை வேம்பன் ஆகியோர் அப்பன்னிருவர். மேற்குறிப்பிட்ட பாடல்களைப் பொருள் விளக்கங்களோடு இங்கே காண்போம்.

**பழுவை வீரன்:**

'சூட்டும் வீரவாகு எனச் சொல்லும் பழுவூர் வீரன் அமர்
மூட்டும் காலம் ஊழி வெள்ளம் மூடும் காலம் ஆகாதோ
வேட்டு அங்காலில் வீழாதார் மேலும் உளரோ வீதி உலா
ஈட்டும் காலம் குந்தம் கண்டு எழுமே கழுகு பருந்துகளும்.'

(ஈட்டி எழுபது, 46)

முடி சூட்டப்படுகின்ற வீரவாகு தேவருக்கு ஒப்பானவன் என்று சொல்லப்படும், பழுவூரில் வாழும் வீரன் என்ற செங்குந்தத் தலைவன் போராகிய நெருப்பை மூளுவிக்குங் காலமானது ஊழிக் காலத்து வெள்ளத்தினால் மூடப்படுகின்ற காலமாகுமோ? அவன் காலில் வந்து வீழ்ந்து வணங்காதார் பின்னும் உயிரோடு வாழ்வாரா? வீதியில் பவனி வருங்காலத்திலும் அவன் கையிலுள்ள குந்தத்தைக் கண்டு கழுகினங்களும் பருந்துக் கூட்டங்களும் ஆகாயத்தில் எழுந்து வட்டமிடும்.

**பழுவை நாராயணன்:**

'காராம் உருவம் ஒழிந்து பொன்னின் கவினார் பழுவை வளம்பதியில்
நாராயணனே விக்கிரம நாராயணனாம் என்னாதார்
வாராவழி வந்தோமென்றே வாயிற் புல்லைக் கவ்வி வந்து அச்
சேரார் சோரா நின்று தொழச் செய்யும் அன்னான் செங்குந்தம்.'

(ஈட்டி எழுபது, 47)

மேகம் போன்ற இருள் நிறத்தை விட்டுப் பொன்போன்ற அழகிய உருவத்தைக் கொண்டு வளம் மிக்க பழுவை என்னும் நகரில் வாழும் நாராயணன் என்னும் செங்குந்தத் தலைவனே திருவிக்கிரம அவதாரம் செய்த நாராயணனாம் என்று கருதாத பகைவர்கள் போருக்கு வரத்தகாத இடத்து வந்தோமென்று வாயிற் புல்லைக் கவ்விக்கொண்டு எதிராக வந்து தளர்ந்து தொழும்படி அவன் கையிலுள்ள சிவந்த குந்தமானது செய்யும்.

இவ்வீர நாராயணர் இரட்டைப் பிள்ளைகள். பராந்தகச் சோழன் வல்லான் என்ற இரட்டனை வென்று சோழ நாட்டில் தன் அரசாட்சியை நிலைபெறச் செய்ய இவர்கள் உதவினர் என்று வல்லான் காவியத்தில் அமைந்துள்ள வீர நாராயணச் சருக்கம் குறிப்பிடுகிறது.

**கச்சித் தனியன்:**

'இனி மாநிலத்தில் கண்டது இல்லை கேட்டே இருத்தல் அன்றி பெரும்
பனிமால் வரையும் மைநாகமும் முன்பின் படைதான் எடுத்தாலும்
முனிமாறு உண்டோ நடுநின்று முடிப்பான் கச்சித்தனியன் வட்டத்
தனிமா நிழல்கீழ்ச் செங்குந்தம் சரணாகதிக்கு வைகுந்தம்.'

(ஈட்டி எழுபது, 48)

எந்த ஒரு நியாயத்தையும் நடுவு நிலைமையாக நின்று முடிவு செய்யும் பொருட்டுக் காஞ்சிபுரத்தில் ஒப்பற்ற மாமரத்தினது வட்டமான நிழலின்கண் இருந்து நடத்தும் தெய்வ சிம்மாசன கர்த்தராகிய செங்குந்தத் தலைவர் ஆயிரத்துத் தொளாயிரவருள் ஒருவனாகிய கச்சித் தனியன் பகைவர்கள் கண்டவுடன் சரணாகதி அடையச் செய்யும் குந்தத்தைக் கைக்கொண்டிருப்பதால் குளிர்ச்சியைத் தரும் பெரும் பர்வதராசனும் மைநாகமும் முன்னும் பின்னும் படையெடுத்து வந்தாலும் கோபிப்பதுண்டோ? இவ்வீரனது புகழைக் கேட்பதுவேயன்றி இப்போது இவ்வுலகத்தில் யாரிடத்தும் கண்டதில்லை.

**ஒற்றியூரான்:**

'உடலம் மண்மேல் உயிர் விண்மேல் ஒல்லார் ஒடுங்க உதிரமொடு
குடரும் கொழுவும் கழுகோடும் கொள்ளை கொள்ளப் பரிந்தூட்டும்
மடல் வெண்தாழை முகம் மலர வாரி வாரித் திரைக் கரத்தால்
கடல் வெண் தரளமே எறியும் ஒற்றியூரன் கைக்குந்தம்.'

(ஈட்டி எழுபது, 49)

மடலையுடைய தாழையினது வெண்மலரின் முகமானது மலரும்படி கடலானது அலைகளாகிய கைகளினால் வெள்ளிய முத்தங்களை வாரி வாரி வீசுகின்ற வளப்பம் பொருந்திய ஒற்றியூரனது கையின் கண்ணுள்ள குந்தமானது பகைவர்கள் உடலை மண்மீதும் உயிரை விண்மீதும் விட்டு, அவரது உதிரத்தையும், குடரையும், கொழுப்பையும் கொள்ளை கொண்டு உண்ணும் ஆசையைக் கழுகுக்கும் பருந்துக்கும் காக்கைக்கும் உண்டாக்கும்.

**களந்தையரசன்:**

'தளர்ந்தவருக்குத் திருவுருவந் தன்னை அடையார்க்கு ஒரு சிங்கம்
இளந்தையலர்க்குச் சிலைவேள் நல்லிசையால் பொற்பூதரமேயாம்
வளர்ந்த சாலி வரம்பினில் வால்வளைகள் முத்தம் தரும் வளம்கூர்
களந்தை ஆதிநகர் அரசன் கைக்குந்தம் போல் காணோமே.'

(ஈட்டி எழுபது, 50)

தளர்ந்து வந்து தன்னை அடைந்தவர்களுக்கு முகமலர்ச்சியோடு அழகிய உருவத்தையுடையவன். வணங்காத பகைவர்களுக்குச் சிங்கம் போன்றவன். இளம் பருவப் பெண்களுக்குக் கரும்பு வில்லையுடைய மன்மதனைப் போன்றவன். புகழால் பொன் மலையை

ஒப்பவன். இத் தன்மைகளையுடைய, நெற்பயிர் வளரும் வயலின் வரம்பில் வெள்ளிய சங்கினங்கள் முத்துக்களை ஈனும் வளம் மிக்க களந்தை நகருக்கரசன் கையிலுள்ள குந்தத்தினது புகழைப் போல எங்கும் கண்டதில்லை.

இக் களந்தை மன்னன் திருத்தொண்டர் அறுபத்துமூவருள் ஒருவரான கூற்றுவ நாயனார் சந்ததியில் வந்தவன் என்று கூறுவர். 'ஆர் கொண்ட வேல் கூற்றன் களந்தை கோன் அடியேன்' என்று ஆளுடை நம்பியும், 'கோதை நெடுவேல் களப்பாளனாகிய கூற்றுவனே' என்று நம்பியாண்டார் நம்பியும் குறிப்பிட்டுள்ளனர்.

**புற்றிடங்கொண்டான்:**

'கற்றுஇடம் கொண்டவர் கவின்சொல் கொள்ளுமே
உற்றுஇடம் கொண்ட பேர்க்கு உலகை நல்குமே
வெற்றுஇடம் கொண்ட மேவலரை வீட்டுமே
புற்றிடங்கொண்டவன் பொலி கைக் குந்தமே.'

(ஈட்டி எழுபது, 51)

புற்றிடங்கொண்டான் என்னும் செங்குந்தத் தலைவனது கையில் தாங்கிய பொலிவு பெற்ற குந்தமானது கற்ற புலவர்களின் அழகிய பாடல்களைச் சூட்டிக் கொள்ளும்; சரணாகதி அடைவோர்க்கு இவ்வுலகத்தையே கொடுக்கும்; மாறுபட்ட பகைவர்களை வென்று நாசம் செய்யும்.

**கோளாந்தகன்:**

'மூளா வடவைச் சிகர கிரி முடி கம்பிக்குமாறு தம்செந்
தாளால் மடங்க ஒரு கூற்றம் தனிமும்மதில் காய்ச்சிறுமூரல்
வேளார் உயிரைப் பேர்க்க அனல் கண்ணும் விளங்கும் உருத்திரன் நேர்
கோளாந்தகன் ஒண்தோளான் கைக்குந்தம் வாகைக் குந்தமே.'

(ஈட்டி எழுபது, 52)

எப்போதும் மூண்டெரியும் வடவாமுகாக்கினியும், எண்திக்கு மலைச் சிகரங்களும் நடுங்க எமனை உதைத்த சிவந்த பாதமும், திரிபுரத்தை எரித்த புன்முறுவலும், மன்மதனின் உயிர் போக்கிய அக்கினி விழியும் கொண்ட உருத்திரனுக்கு நிகரான கோளாந்தகன் என்னும் செங்குந்தத் தலைவன் கையிலுள்ள குந்தமே வெற்றி பொருந்திய குந்தம்.

**புலியூர் பள்ளிகொண்டான்:**

'புண்டரீகமே குவளையே தளவமே பூமாவே
பிண்டியே பெரும் சித்தசன் தன்குணம் பிழையா வென்
கண்ட வீர கண்டன் புலியூர்த் தனிகாத்தே சீர்
கொண்ட பள்ளிகொண்டான் கரதலத்திடைக் கொள்ளும் குந்தம்.'

(ஈட்டி எழுபது, 53)

பகைவர்களைப் புறங்கண்ட வீரகண்டா மணியையுடைய, சிதம்பரம் நகரில் தனியாட்சி செய்து காத்துப் பல சிறப்புக்களைக் கொண்ட பள்ளிகொண்டான் என்னும் செங்குந்தத் தலைவன் கைச் செங்குந்தம் மன்மதன் கையிலுள்ள தாமரை, நீலோற்பலம், முல்லை, மாம்பூ, அசோகம் ஆகிய ஐந்து பாணங்களும் பெற்ற நினைப்பூட்டல், பசலை செய்தல்,

உணவை நீக்கல், கிடக்கச் செய்தல், கொல்லுதல் ஆகிய ஐந்து குணங்கள் போலப் போரை நினைப்பூட்டல், தோள்தினவுறுத்தல், துன்புறுத்தல், மூர்ச்சையுறுவித்தல், கொல்லல் ஆகிய ஐந்து குணங்களையும் செய்விக்கும்.

**பிணவன்:**

'குணமார் தருமத் தெவ்வேந்தர் குலக்கோளரியே குலத்தருவே
தணவா வண்மைச் சகம்பேசச் சகமே தாங்கும் பூதரமே
பிணவா என்று பகரார் வாய்பிளந்து சோரிப் பெரும்பூதக்
கணம்வாய் நிரப்பும் குந்தம் போல் காணோம் கேளோம் சுற்றோரே.'

(ஈட்டி எழுபது, 54)

'வியூகம் அமைத்து நால்வகைச் சேனைகளால் போர்புரியும் பகையரசராகிய யானைகளுக்குச் சிங்கம் போன்றவனே! கொடுத்தலில் பஞ்ச தாருவுக்கு ஒப்பானவனே! எப்போதும் நீங்காத வளம் மிக்க இவ்வுலகைத் தாங்கும் குணக்குன்றே! பிணவன் என்னும் அரசனே' என்றெல்லாம் சொல்லித் துதியாதவர் வாயைப் பிளந்து பெருகிடும் இரத்தத்தைப் பூத கணங்களின் வாயில் நிரப்பும் செங்குந்தத் தலைவனைப் போன்ற வீரனைப் புலவர்களாகிய யாம் கண்ணாற் கண்டதுமில்லை; காதாற் கேட்டதுமில்லை.

**கண்டியூரன்:**

'மிண்டிடாமல் மேவலீர் விளம்பிடாமல் ஒருமின்
தொண்டிடாமல் வாழ்வ தெங்ஙன் சூரபன்மன் பட்டிடக்
கண்ட வீரவாகுதேவர் கால்வரும் குலத்துமன்
வண்டு உலாவு கண்டியூரன் வயிரவாகு குந்தமே.'

(ஈட்டி எழுபது, 55)

பகைவர்களே! சூரபதுமனைக் கொன்ற வீரவாகு தேவரின் சந்ததி வழியாக வந்த, வண்டுகள் பாடும் கடப்ப மாலையையுடைய கண்டியூரன் கையிலுள்ள அழகிய குந்தத்தை எதிர்க்காமலும், வீணான வம்பு வார்த்தைகள் பேசாமலும் இருங்கள். அவனுக்கு அடிமை செய்யாமல் இருப்பது எங்ஙனம்? ஆகையால் வணங்கிப் பிழைத்துக் கொள்ளுங்கள்.

**முதுகுன்ற மணியன்:**

'மூத்த முதுகுன்றக் குரிசில் முதிரும் மணவைப் பாராளன்
பாத்தன் என்னும் மணியன் கைக்குந்தம் கொடுத்துப் பகரவே
பூத்த மார்பத்தார் பரித்துப் பூழிபடவே வீழ்ந்திறைஞ்சிக்
கோத்துச் செங்கைமலர் கூப்பிக் குறுகார் சிறுகி வரக் கண்டான்.'

(ஈட்டி எழுபது, 56)

முதுகுன்றத்தில் வாழ்ந்த மன்னனும், மணவை என்னும் நகரத்தில் வாழ்ந்த மன்னனும் முதுமையில் பகைவர்களால் துன்பமடைந்து அர்ச்சுனனுக்குச் சமமான மணியன் என்னும் பிள்ளைக் கையில் செங்குந்தம் கொடுத்து வெற்றி பெறுக என்று சொன்னமாத்திரத்தில் பகைவர் தங்கள் பரந்த மார்பிலுள்ள வெற்றி மாலைகளைக் கழற்றி எறிந்து, புழுதி உடலில் படும்படியாக மண்ணில் வீழ்ந்து வணங்கித் தாமரை மலர் போன்ற தமதிரு கைகளையும் குவித்துக் கொள்ளச் செய்தான்.

**தஞ்சை வேம்பன்:**

'பஞ்சம் வெம்பத் தரும் பனையே நாவால் மிகவே பாடாது
தஞ்சை வேம்பனைப் புகழ்ந்தேம் அதுமுன் செய்த தவமேயாம்
எஞ்ச எளிதோ ஊழி உருத்திரன் கைக்கொளும் பூவிலைவேலே
வஞ்ச மாயை அவதரித்தது இவன் கைக்குந்த வரவாமால்.'

(ஈட்டி எழுபது, 57)

ஏழைகளின் வறுமை நீங்கக் கொடுக்கின்ற பனை மாலையையுடைய சேரனை எமது நாவால் பாடோம். தஞ்சை வேம்பன் எனும் தலைவனைப் பாடுவோம். அது யாம் செய்த தவம். அத்தவத்தைக் குறைவுபடச் சொல்லல் எளிதோ? இவன் கையிலுள்ள வஞ்சமே உருவமான மாயை அவதாரம் செய்து வந்த குந்தமானது ஊழிக்காலத்து உருத்திரன் கையிலுள்ள மூவிலை வடிவத்தைப் போன்ற முத்தலைச் சூலாயுதமே.

இவ் வேம்பன் திருஐயாறப்பனின் தரும பரிபாலனக் கூட்டத் தலைவனாகவும், பராந்தகச் சோழனின் முதல் மந்திரியாகவும் இருந்தான் என வல்லான் காவியத்திலுள்ள வீரநாராயணச் சருக்கம் கூறுகிறது.

**இப்பன்னிருவர் வல்லானை வென்றமை:**

'வல்லான்தன் திருத்தேவி மங்கலியம் பிழையாமல் மடிதானேற்று இங்கு
எல்லோரும் மங்கலியப் பிட்சை இடும் எனத் தாள் வீழ்ந்து இரப்ப
கொல்லாமல் விடுதல் புகழெனக் கருதியோ கற்பின் கொண்ட வாய்மை
நல்லார்கள் இருந்தவையின் புகழ்கைக்கோ காத்ததுகொல் நம் செங்குந்தம்.'

(ஈட்டி எழுபது, 58)

சோழராசனோடு மாறுபட்டு வீரன், நாராயணன் முதலிய செங்குந்தத் தலைவர்கள் பன்னிருவரிடம் தோல்வியடைந்து அவர்கள் கையில் அகப்பட்டுத் தன்னுயிர் கொடுக்க இருந்த வல்லான் என்னும் அரசனது மனைவி அனங்கவல்லி அச்சமயத்தில் முந்தானையேற்று 'நான் அமங்கலியாகாமல் நீவிரெல்லாரும் மங்கலியப் பிச்சை கொடுக்க வேண்டும்' என்று அவர்கள் பாதத்தில் வீழ்ந்து வணங்க அவர்கள் அவ்வல்லானுக்கு உயிர்கொடுத்துக் காத்தது, புகழ் எனக் கருதியோ அல்லது கற்பின் உண்மையை மேற்கொண்டொழுகிய மாதர்கள் இருந்த சபையின்கண் தம்மைத் துதிப்பதற்கோ என்றறியேன்.

**உயிர்க்கொடைச் சிறப்பு:**

'எல்லாக் காலத்திலும் ஒன்று ஏற்பவருக்கு இல்லை எனும்
சொல்லானது கற்றும் சொல்லறியார் ஏந்து குந்தம்
வல்லானைக் கொல்லாமல் மனைவிக்கு மங்கலியம்
உல்லாசத்துடன் அளிக்கும் உதவியது ஒன்று அறிந்தேமால்.'

(ஈட்டி எழுபது, 59)

இச்செங்குந்தத் தலைவர்கள் எக்காலத்தும் கேட்பவருக்கு ஒன்று இல்லை என்று சொல்லும் சொல்லை நாவினால் சொல்ல அறியாதவர். வல்லான் என்ற கொடிய துட்டன் பிடிபட்டபோது அவன் மனைவி இரந்து கேட்க அவனைக் கொல்லாமல் மகிழ்ச்சியோடு உயிர்க்கொடை கொடுத்த செயலினால் இதை அறிந்து கொள்ளலாம்.

மெய்த்தலை கொடுத்தல்:

'முத்தமிழி ராசராசேந்திரன் முன்னமே
சுத்தவீரத் திறம் துலங்குதற்கு ஒரு
பொய்த்தலை கொடுத்தலின் புகழ்பெறாதென
மெய்த்தலை கொடுத்தன வீரக் குந்தமே.' (ஈட்டி எழுபது, 60)

குந்தப் படையை உடைய வீரன், நாராயணன் என்ற செங்குந்தத் தலைவர்கள் முத்தமிழிலும் வல்ல இராச ராசேந்திரனாகிய பராந்தகச் சோழன் முன்பு தூய்மையான தங்கள் வீரம் துலங்க வல்லானின் ஒரு பொய்யான தலையையா கொடுப்பது என்று கருதித் தங்களிருவருடைய மெய்யான தலைகளையே அறுத்துக் கொடுத்தனர்.

செங்குந்த வீரர் பன்னிருவர் வல்லானை வென்றதை 'வல்லான் காவியம்' என்ற நூலும், 'வீர நாராயண விசயம்' என்ற நூலும் விரிவாகக் கூறுகின்றன. பராந்தகச் சோழன் ஆண்ட காலத்தில் (கி.பி. 906 — 952) சோழர்களுக்கும் இரட்டர் (இராட்டிர கூடர்) களுக்கும் பெரும்போர் நிகழ்ந்தது. போரிலே வல்லானை நம் வீரர்கள் தோற்கடித்தாலும், அவன் மனைவியின் வேண்டுகோளுக்கிணங்க அவனைக் கொல்லாமல் ஏகவிட்டு, அவனுடைய பொய்த்தலையைச் சோழனிடம் காட்டி அவனைக் கொன்று விட்டதாகக் கூறுமளவிற்கு அவர்களிடம் நிறைந்திருந்த இரக்கவுணர்வைப் போற்றும் வகையில் புலவர்கள் பலர் இந்நிகழ்ச்சியைக் காவியமாகவும் பாடலாகவும் அமைத்து அவர்களைப் பெருமைப் படுத்தினர் என்பது தெளிவாகிறது.


With best compliments from:

TNGST 720159. CST No. 432014/19-10-73.



SRI SENTHIL KUMAR
COLOUR COMPANY,
Dyes & Chemical Merchants,
28, Chokkanatha Gounder Street, ERODE - 638 001.

செங்குந்தர் பேரரசு கங்கா பவானிக்கு இலக்ஷுமிதேவி சொல்லிய

# இலக்ஷணக் குறவஞ்சி



### 1. சிவபுரம்:

தார்புனை நந்தியின் தயையினால் நாளும்
சீர்புனைந்து ஓங்கும் சிவபுர நாட்டின்
வளம் கொளும் கிளைநாடு வருமுறைச் சொல்வேன்
விளங்கி வாழ்ந்திடுநல் மேலப் படப்பை
பழுதிலா கீழப்படப்பை ஆத்தஞ்சேரி
வழுவிலா மூன்றும் ஓர் மா நாடது என்பர்
பயில்வுறு மானாம்பதி செம்பாக்கமும்
உயர்வுறு மூணத்தொன்று அகரமும் இன்
நான்கும் ஓர் நாடு நலம்திகழ் முன்னூர்
மேன்மைகள் செய் பரமேசுர மங்கல
மும் மதராந்தகம் மூன்றும் ஓர் நாடு
வம்பவிழ் திண்டிவனம் சாரம் ஓர் நாடு
பரிவுகொள் வக்கரைப் பத்தும் ஓர் நாடு
திருவக்கரைப் புதுச்சேரி ஒழுகரை
இவை பத்து நாடு இயல் திரிபுவனம்
உவகைகொள் நல்லாத்தூரும் ஓர் நாடு
திருவதிப் பாலூர் சேர ஓர் நாடு
தெரிதரும் இடையாத்தூர் திருவெண்ணை நல்லூர்
கனந்தரும் ஓர் நாடு கருதுபன மூலை
அனந்தபுரமும் ஓர் அழகுகொள் நாடு
பரவி வாழ் வழுதிலைப்பட்டும் ஓர் நாடு
மருவு மாப்பறையவரம் ஆசூரென்னும்
திட்டமாய் இரண்டும் திகழ ஓர் நாடு
பட்டணங் கருங்குழி பரவும் ஓர் நாடு
குறைவிலா மன்னாறு கோவில் ஓர் நாடு
நெறியான பாளையம் நெடுந்தனி நாடு
சரியானகுபாகம் தனிநாடு ஐம்பை
திருவரங்கம் இரண்டும் சீர்பெறு நாடு
பண்பதாய் இப்படி பதினேழு நாடும்
வண்மை கீழ்ப்பாலில் வளர்ந்திடுகின்றதால்
உண்மையாய் அவைகளுக்கு உளபெயரெல்லாம்
நன்மையாய் உரைத்தேன் நயந்து கேளம்மா.

## 2. தொந்திபுரம்:

கங்கை வேணியனார் காதலால் வந்த
ஐங்கரன் அருளால் அழகுஓங்கி வாழும்
திருத்தொந்திபுரம் எனும் தென்னாட்டைச் சார்ந்த
கருத்துள்ள கிளைநாட்டின் கணக்கினைச் சொல்வேன்
முருகமங்கல நாடு முநிவோர்கள் ஏத்தும்
திருவைமாத்தூர் நாடு திருவணாமலை நாடு
கோதிலா வாதூர் செங்குறிஞ்சி ஓர் நாடு
தீதிலாக் கச்சித் திறல் தனி நாடு
சேலத்து நாடு திட்டகுடி நாடு
பாலொத்த திருமலைப்பாடி மாநாடு
செந்திருப் பெருமாள் சீர்கோவில் நாடு
கெந்தமார் திரு நாகேசுர நாடு
திருச்செம்பள்ளி நாடு சீர்காழி நாடு
பரிசுத்தமான மாப்பளை குப்ப நாடு
தேவூரு நாடு திகழ் காட்டூர் நாடு
பூவாரும் சோலைசூழ் போலக நாடு
சீருள நல்லச்சேரி ஓர் நாடு
பாரினில் இப்படி பதினேழு நாடும்
ஆதியாய் தேன்னாட்டில் அறைபெயர் தன்னை
தீதிலாது உரைத்தேன் தெரிந்துகொள் அம்மா

## 3. விரிஞ்சிபுரம்:

சிவசுப்பிரமணியர் செயும் கிருபையாலே
விவரமாய் விளங்கும் விரிஞ்சி மாநாட்டில்
உள கிளை நாடெலாம் உண்மையாய்ப் புகல்வேன்
அளிமுரள் சோலைசூழ் ஆமூர் நாடு
வாணியம்பாடி மாநாடது ஒன்று
நாணயக் கொறட்டை நல்லநாடு ஒன்று
தருமபுரி நாடு தளர்விலாது ஓங்கும்
நிருமலபவானி நீண்டநாடு ஒன்று
வழுவிலா தாராமங்கல நாடு
இழிவிலா நல்லதோர் ஏழாநாடு
புகழாரை நாடு பூரதிரை நாடு
திகழ்கின்ற நல்திருச் செங்கோடு நாடு
வாழ்வுகொள் நல்ல வையாபுரி நாடு
தாழ்விலாத வநாசி தனிநாடது ஒன்று
நஞ்சுண்டவூர் நாடு நலம் மிகுந்து ஓங்கும்
கஞ்ச மலர்த்தடக் காவல் பாளைய நாடு
நத்தக் கருவூர் நாடு ஒன்று மேலும்
உத்தம நற்கருகூர் காங்கேய நாடு

நறுமலர்ச் சோலைசூழ் நாமக்கல் நாடும்
உறுதியாய் இப்படி உள பதினேழும்
உரைத்தனன் மேல்நாட்டில் உறும்வளம் எல்லாம்
கருத்தொடும் அறிந்துகொள் கன்னிநீயம்மா.

**4. சோளிங்கபுரம்:**

திகழ்காள வயிரவர் திருவருளாலே
புகழ்கொண்ட சோளிங்கபுரம் சூழ்ந்த பரவை
நாட்டில்உள கிளைநாடு நாலிலம் அதனில்
தாட்டியாய் உளத்தின் சரித்திரம் கேளாய்
தளர்விலா வளர்திருத்தணிகை மாநாடு
தெளிநாடு நெறிநாடு திருவடி நாடு
எழில் பெருந்திருமேழிசை ஒரு நாடு
பழுதிலாக் கொந்தம் பாக்கம் ஓர் நாடு
அழிவிலா திருக்காளத்தி மாநாடு
வழுவில் தொண்டமாநாடு மகிழ்வறைய நாடு
வேங்கடகிரி நாடு விண்ணோர்கள் யாரும்
தீங்கு அகன்றிடு நல்ல திருப்பதி நாடு
செகன்னாத நாடு சிட்டம்பள்ளி நாடு
தகைவான செம்புரம் தழைத்தோங்கு நாடு
வரதபுரி நாடு வளர் சந்திரகிரி நாடு
கருதுவோர் வினைதீர்க்கும் காசி மாநாடு
இப்படி வடநாட்டினிற் பதினேழின்
ஒப்பிய பெயரெலாம் ஓர் குறைவின்றி
தப்பிலா மறைகளில் சாற்றிய படியே
செப்பினேன் இவையெலாம் தெரிந்து கொள்வாயே.

[மேலேயுள்ள நாடுகளைப் பற்றிய நான்கு பாடல்கள் 'ஜாதி நூல் கோர்வை' என்ற நூலில் இலக்ஷணக் குறவஞ்சிப் பகுதியில் (பக். 139-143) உள்ளவை.]


தென்னிந்திய செங்குந்தர் 16-ஆவது மாநில மாநாடு வெற்றியடைய வாழ்த்துகிறோம்!

ஏ. பி. டி. பார்சல் சர்வீஸ்

போன்: அலுவலகம்: 254
வீடு: 354

சிறந்த முறையில் எங்கள் லாரி சர்வீஸ் மூலம் தமிழ்நாடு, கர்நாடகம், கேரளம், ஆந்திரம், மகாராஷ்டிரா ஆகிய மாநிலங்களுக்கு தங்களின் சரக்குகளை உடனுக்குடன் அனுப்பி வைக்கிறோம்.

N கலியபெருமாள் செங்குந்தர்
ஏஜெண்ட்: A.B.T. பார்சல் சர்வீஸ்

3-A, வேல முதலியார் தெரு,
குறிஞ்சிப்பாடி - 607 302
தென்னாற்காடு மாவட்டம்.

பேரணி தொடக்கம் —
தலைவர் திரு. J. சுத்தானந்தன் ஜீப்பில் உலா வருகிறார்.

தஞ்சை மாவட்டத் தலைவர்
திரு. R.N. சந்தான ராஜகோபாலன்
வரவேற்புரை





மகளிர் மாநாட்டில் திருமதி ஐராணி ராமநாதன் உரையாற்றுகிறார்

நெசவாளர் மாநாட்டில் திரு. J. சுத்தானந்தன் வரவேற்புரை



குடந்தையைக் குலுக்கிய

# குந்தர்குலப் பேரணி



— கவிஞர் தென்னவன், செம்பொன் —

குடந்தையிலே மாநாடு - அதுநம்
குந்தர்குலப் படைவீடு;
அடல்மறவர் நாமெனவே – நன்று
அரசுக்கு உரைத்தநகர்.

கோயில்கள் பெருத்தநகர்; - அருள்
கும்பேசர் விளங்கும் நகர்;
தூயர்கள் நிறைந்தநகர்; - நல்ல
தொண்டர்கள் மலிந்த நகர்.

பட்டாடை நெய்யும்நகர்; - தெய்வப்
பண்பாட்டை வளர்க்கும் நகர்;
செட்டாக வாழ்வதற்கு - யாவும்
சிறப்பாகக் கிடைக்கும் நகர்.

மகாமகம்எனும் திருவிழாவால் - உலக
மக்களையே ஈர்க்கும் நகர்;
அகாசுகா எனும் பேர்வழிகள் - இங்கு
அகப்பட்டால் தொலைந்தார்கள்.

வணிகர்கள் குவிந்தநகர்; – நல்ல
வளங்கள்பல பெற்ற நகர்;
அணிஎனவே கல்லூரி - பள்ளி
அனைத்தையுமே கொண்ட நகர்.

காவிரித்தாய் வளர்க்கும் நகர்; - தமிழ்க்
கலைகள்பல குலாவும் நகர்;
பாவிரிசீர் புலவோர்கள் – இங்குப்
பாபலவும் புனையும் நகர்.

சிவப்புடைகள் உடுத்தசிலர் - பின்னர்
சீர் 'பாண்டு' இசையெழுப்பி
உவப்புடனே வந்தார்கள்; - குந்தர்
உள்ளமெலாம் ஈர்த்தார்கள்.

தாரைகள் ஊதிவந்தார்; – சிலர்
தப்பட்டை அடித்து வந்தார்;
ஊரையே கலக்கிவிட்டார் - குந்தர்
ஊர்வலத்தின் சிறப்பென்னே!

சைவர்களும் வைணவரும் – இங்குச்
சரிசமமாய்ப் பழகும் நகர்;
மெய்வழியில் நடப்போர்க்கு - இங்கு
மிகவுண்டு மடங்கள் பல.

கால்கடுக்கச் செருப்புதேய - தம்
காலமெலாம் சுவடி தேடி
நூல்கள்பல பதிப்பித்த - சுவாமி
நாதஐயர் வளர்ந்த நகர்.

கணிதத்தின் மேதையென – உலகம்
காலமெலாம் போற்றுகின்ற
புனிதன்இரா மானுசத்தை – இந்தப்
பூவுலகிற் களித்தநகர்.

இந்நகரில் மாநாட்டை – நாமும்
எழிலாகக் கூட்டிவிட்டோம்;
எந்நகரில் இதுபோலே - இனி
எடுப்பாக நடைபெறுமோ?

பேரணியா நடத்தினோம்நாம்? – குந்தர்
பெரும்படையைக் கூட்டிவிட்டோம்;
தாரணிந்த மறவர்போல் - இளைஞர்
தருக்கிநடை பயின்றனரே.

பேரணியின் முன்னாலே - தொண்டர்ப்
பெரும்படைதாம் புடைசூழ
சீருடையில் தளபதியார் - நம்குலச்
சீர்க்கொடியை ஏந்திவந்தார்.

சங்கத்தின் பெயரேந்திப் – பலரும்
சங்கநாதம்தனை எழுப்பிச்
சிங்கத்தின் நடைபோலே - மிகச்
சிறப்பாக நடந்துவந்தார்.

மடந்தையர் குரலெழுப்பி - குடந்தை
மாநகரைக் குலுக்கிவிட்டார்;
தடந்தோளின் இளைஞர்களோ – பெரும்
சங்கநாதம் முழக்கிவிட்டார்.

கரகாட்டம் ஆடிவந்தார்; - இளைஞர்
கைகொட்டிப் பாடிவந்தார்;
முரசொலியோ எனும்குரலில் - கொள்கை
முழக்கமிட்டு நடந்துவந்தார்.

மாவட்டச் சங்கத்தினர் - மற்றும்
மாண்புறுகிளைச் சிங்கத்தினர்
மேவட்டும் புகழெனவே - கொடியை
விண்ணுயரப் பிடித்து வந்தார்.

நவவீரர் உருக்கொண்டு - சிலர்
நல்லாற்றல் காட்டி வந்தார்;
தவமறவர் நாமெல்லாம் - எனத்
தரணிக்கே உணர்த்திவிட்டார்.

வேல்முருகன் எனத்தொழவே - ஒருவர்
வேடமிட்டுப் பவனிவந்தார்;
சேல்விழியார் இதைக்கண்டு - தம்
செங்கரங்கள் கூப்பி நின்றார்.

நம்மரபின் பெருமையெலாம் - மிக
நயமாகப் பாடிவைத்த
செம்புலவர் கூத்தர்பிரான் - மெய்ச்
சிலிர்த்திடவே வலம் வந்தார்.

பேரணியின் பின்னாலே - நம்
பெருந்தலைவர் ஆனந்தர்
சீருடனே பலர்வாழ்த்த - மிகச்
செம்மாந்து களித்துவந்தார்.

பேரணியைக் காணாத - குந்தர்
பெரும்பேற்றை இழந்தாரே;
பாரினிலே இதுபோலும் - இனி
பார்ப்பதுவும் அரிதாமே.

மாமகம்எனும் விழாவினிலும் - இதுபோல்
மாபெரிய கூட்டமதைத்
தாம்முன்னே கண்டதிலை - எனவே
சான்றோர்கள் வியக்கின்றார்.

குடந்தைநகர் சிறுத்ததனால் - நம்
குந்தர்படை பெருத்ததுவோ?
குந்தர்படை சிறுத்ததனால் - இக்
குடந்தைநகர் பெருத்ததுவோ?

சென்னையில் நடைபெற்ற - நம்
செங்குந்தர் பேரணியின்
மன்னுபுகழ்த் தரணியிலே - நாம்
மாப்புகழைப் பெற்றுவிட்டோம்.

உண்ணாமல் ஒருநாள்நாம் - விரதம்
ஊக்கமுடன் இருந்ததனால்
எண்ணாமல் இருந்தவரசு - நம்
எழுச்சிகண்டு திகைத்ததுவே.

நம்மில்பலர் நெசவாளர்; - நாம்
நாளெல்லாம் தறிக்குழியில்
அம்மியெனக் கிடந்தாலும் - நமை
ஆதரிப்பார் யாருமிலர்!

பாடுபட்டு உழைத்தாலும் - தினம்
பசிபோக்க வழியில்லை;
பீடுபல பெற்றவர்நாம்; - இன்று
பின்தங்கி விட்டோமே.

தறிக்குழியில் வீழ்ந்ததனால் - நாம்
தரித்திரராய்ப் போனோம்என
வெறித்தனமாய்ப் போராடிக் - கெட்ட
வீம்புகளைச் செய்தோமிலை.

முறையாக அரசினர்க்கே - நம்
முறையீட்டைத் தெரிவித்தோம்;
இறைபோல ஆய்ந்ததுவும் - நம்மேல்
இரக்கத்தைக் காட்டவிலை!

நம்மிளைஞர் நலம்வேண்டி - ஒன்றாய்
நாமெடுத்த முடிவினையே
தெம்பாகக் குரல் கொடுத்தோம்; - அலைகள்
திரண்டனவோ என நடந்தோம்.

ஒருசாரார் தந்நலத்தால் - மிக்க
ஊக்கமுடன் போராடி
பெரும்பேறாய்த் தம்கோளை - இன்று
பெற்றதனால் ஏறிவிட்டார்.

பிற்பட்டோர் சலுகையினால் - நாம்
பெற்றுவந்த உயர்வுகளை
முற்பட்டுக் குறைத்ததவால் - இன்று
முன்னேற்றம் குறைந்ததுவே.

இந்தநிலை நீடித்தால் - இனி
எந்நாளும் நம்மிளைஞர்
முந்துநிலை பெறுவாரோ? - வாழ்வில்
முழுமைநிலை உறுவாரோ?

இருபதுசதம் கேட்கவிலை; - நமை
இருபதுக்குள் ஒன்றாகச்
செருகிவிடக் கேட்கின்றோம்; - இதைச்
செய்தால்என்? அலட்சியமேன்?

வேளாண்மைத் தொழிலுக்கு - அரசு
மின்சாரம் இலவசமாய்க்
கேளாமல் முன்வந்து - கருணைக்
கொடையாக அளித்துளது.

மானத்தைக் காக்கின்ற - நம்
மாணுயர்ந்த நெசவாளர்
வானத்தை மறைத்துறங்க - ஒரு
வாழ்வில்லம் கேட்கின்றோம்!

வீடுள்ளார் இலவசமாய் - மின்
விளக்கொன்றைக் கேட்கின்றோம்;
பாடுபடும் உழைப்போர்க்குள் - அரசு
பாரபட்சம் காட்டுவதேன்?

என்னதாம்நம் கோரிக்கை - என்று
எண்ணாத நம்மரசு
தன்னாலே நமைத்தேடும் - ஒரு
சரித்திரத்தை நாம்படைப்போம்.

சிங்கமென வாழ்ந்தவர்நாம்; - இன்று
சீர்கெட்டுப் போகலாமா?
செங்குந்தம் பெற்றெடுத்த - இளஞ்
சிங்கங்காள் எழுந்திடுவீர்!

சங்கெடுத்து முழக்கிடுவோம்; - குந்தர்
சமூகத்தின் உயர்வுக்கென
இங்கினிமேல் தந்நலத்தைத் - துறந்து
எழுச்சியுடன் புறப்படுவோம்.

நம்தலைவர் ஆனந்தர்; - அவர்
நமைக்கூட்டிச் சொல்லட்டும்;
செம்மாந்து புறப்படுவோம்; - வெற்றித்
திருக்கனியைப் பறித்திடுவோம்.

கோரிக்கை வெற்றிபெற - இக்
கும்பகோணம் மாநாடு
பேருக்கென இல்லாமல் - நல்ல
பெரும்விளைவை ஊட்டுமாக!

---


With best compliments from:



டாக்டர் K. இராமசாமி, M.B.B.S., F.C.I.P., F.C.C.P., F.A.I.M.S.

ராஜ் பொது மருத்துவமனை

&

முதல் உதவி பயிற்சி மையம்

(FIRST AID TRAINING CENTRE)

திருக்கோவிலூர்.

மாநாடு சீரோடும் சிறப்போடும் நடைபெற
எங்களது நல்வாழ்த்துக்கள்!



தொடக்கம்: 1979

## அதியமான்
## மெட்ரிகுலேஷன் ஸ்கூல்
### (ஹாஸ்டல் இணைக்கப்பட்டது)
### கம்பைநல்லூர் - 635 202

அரூர் வட்டம் : : தருமபுரி மாவட்டம்.

**K. PALANISAMY,** B.A.,
Correspondent.

வாழ்த்துக்கள்





## P.T. அருணாசலம்

பொருளாளர்

செங்குந்தர் சங்கம் — முள்ளிப்பட்டு
**ஆரணி.**

# இளைஞர்களின் எழுச்சிப் பணிகள்

சிங்கார. பிரகாசம்,
தஞ்சை மாவட்ட இளைஞரணி அமைப்பாளர்,
செம்பனார்கோயில் - 609 309.

**முன்னுரை:**

இன்றைய சூழ்நிலையில் எந்த ஒரு செயலையும் வெற்றிகரமாக செய்து முடிக்க இளைஞர்கள் தேவைப்படுகின்றனர். உதாரணமாக; கோயில் திருவிழாக்களானாலும்; திருமணம் போன்ற நற்சடங்குகளானாலும்; ஊர்ப்பொது நிகழ்ச்சிகளானாலும் இளைஞர் களின் ஒத்துழைப்பு மிகமிகத் தேவைப்படுகின்றது.

**இளைஞர் அணி:**

அதனால்தான் அரசியல், அரசியல் சார்பற்ற கட்சிகளும்; சமுதாய சங்கங்களும்; மத அமைப்புகளும் இளைஞர்களின் தன்னலமற்ற தொண்டுகளையும் - ஊக்க உணர்வுகளையும் திறமைகளையும் - பயன்படுத்திக் கொள்ள இளைஞர் அணி என்னும் ஓர் அமைப்பு உருவாக பேராதரவு நல்கியுள்ளன. இந்த ஆதரவினை ஏற்றுக் கொண்டு இன்று எங்கெங்கும் எந்த அமைப்பிலும் இளைஞர் அணி எனும் ஒரு அமைப்பு தோன்றியுள்ளது.

**நம் இளைஞரணி:**

அது போல நம் மாநிலம் தழுவிய செங்குந்தர் அமைப்பிலும் இன்று இளைஞரணி உருவாகியுள்ளது. மாவட்டந்தோறும் இளைஞர் அணி அமைப்பாளர்கள் தேர்வு செய்யப் பெற்று அறிவிக்கப்பட்டுள்ளனர். இதன் அடிப்படையில் நம் செங்குந்தர் வசிக்கும் கிராமங்கள்; நகரங்கள் தோறும் இளைஞர் அணிகள் உருவாகி வருகின்றன.

**தலைவர் ஆர்வம்:**

இந்தவகையில் நம் செங்குந்தர் அமைப்பு தோன்றிய அறுபதாண்டுகளுக்கு மேலான சங்க வரலாற்றில் இப்படியொரு அமைப்பு உருவாவது வரவேற்கத்தக்க ஒரு முன்னேற்றப் படி. எனவே தான் நம் தலைவர்கள் பாராட்டுகின்றனர். குறிப்பாக நம் மாநிலத்தலைவர் - ஈரோடு பெற்ற எழுச்சிமிகு செங்குந்த ஏந்தல் - நெசவாளர் நேசன் - ஜெ.எஸ். அவர்கள் மாநிலச் செயற்குழு கூட்டங்கள் நடைபெறும் இடங்களில் எல்லாம் இளைஞர் அணி அமைப்பாளர்களை அழைத்து அவர்களிடம் சிறந்த ஆக்கமிகு கருத்துக்களை கேட்டும் - அரிய தம் கருத்துக்களை அவர்கட்கு வழங்கியும் கலந்துரையாடி நம் சங்கம் மேன்மேலும் வளரவும், வளர்ச்சிப் பணிகளில் நாட்டம் செலுத்தவும் விரும்புகின்றார்.

நம் மாபெரும் தலைவரின் இந்த அருமையான கடைக்கண் பார்வையை பயன்படுத்தி நம் இளைஞர் சமுதாயம் ஆக்கப்பணிகள் பலவற்றை நிறைவேற்றப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இளைஞர்களாகிய நாம் நம் சமுதாய முன்னேற்றத்திற்கு என்னென்ன பணி களை மேற்கொள்ளலாம், பெரியோர்கள் இயற்றும் தொண்டுகளுக்கு உதவலாம் என்றெல்லாம் நாம் சிந்திக்க வேண்டும்.



# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

89, அரண்மனைக்காரன் தெரு,
சென்னை - 600 001.

## புரவலர்கள்

1. அருள்மொழி அரசு டாக்டர் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்,
சிங்கண்ண செட்டித் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-600 015

2. திரு. ஏ.வி.ஆர்.எம்.வி. சங்கர நாராயண செங்குந்தர்,
125, திலகர்புரம்,
அம்பாசமுத்திரம் 627 401.

3. திரு. ஆர்.என். சந்தான ராஜகோபால செங்குந்தர்,
9-10 அக்கரை நடராஜ முதலியார் தெரு,
மன்னார்குடி 614 001.

4. திரு. சி.கே. குமாரசாமி செங்குந்தர் M.A.,
5, ரமேஷ் நகர் (வேலன் நகர்),
வளசரவாக்கம், சென்னை 600 087.

5. திரு. டி எஸ். சுப்பிரமணிய செங்குந்தர்,
வேலவர் பளையகாட் கம்பெனி,
கச்சாலீஸ்வரர் அக்ரஹாரம்,
சென்னை 600 001.

6. திரு. சி. கனக ரெத்தினம் செங்குந்தர்,
இலங்கை.

## தலைவர்

1. திரு. ஜெ. சுத்தானந்த செங்குந்தர், B.Sc.,
145, திருநகர் காலனி,
ஈரோடு 638 003.

## துணைத் தலைவர்கள்

2. திரு. சி. காந்திதாஸ் செங்குந்தர், M.A.B.L.,
652, கே. கே. நகர்,
மதுரை 625 020.

3. திரு. எம்.எம். தணிகைமலை செங்குந்தர்,
13, தேசிகர் தெரு,
வடபழனி, சென்னை 600 026.

**இளைஞர் பணிகள்:**

நம் இளைஞர் அணியினர் தத்தம் ஊர்களிலும், தெருக்களிலும் நடைபெறும் திருமணம் போன்ற நற்காரியங்களிலும்; இறப்பு போன்ற துக்கக்காரியங்களிலும்; முன்னின்று பெரியோர்களின் சுமைகளை குறைக்கலாம்; கோயில் திருவிழாக்களில் பங்கேற்று சுவாமி புறப்பாடு போன்ற நிகழ்ச்சிகளின் போது உடனின்று உதவி செய்து அமைதியை ஏற்படுத்தலாம். படித்த இளைஞர்கள், படிக்காத இளைஞர்களுக்கும் முதியோர்களுக்கும் வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் எழுத்தறிவிக்கும் இறைவன் பணியை மேற்கொண்டு தனிப் பயிற்சி வகுப்புகள் நடத்தலாம்; தொழில் சம்பந்தமான கருத்தரங்குகள் நடத்தி தொழில் முன்னேற்றத்திற்குப் பாடுபடலாம்; வேலையற்ற இளைஞர்களுக்கு வேலைக்கு வழிகாட்டலாம். ஊர்ப் பொது நன்மை கருதி பிறசமுதாயத்தாரோடு இணைந்து செயல் படலாம்; ஊர்ப் பஞ்சாயத்துக்களில் ஈடுபாடு கொண்டு ஏற்ற வகையில் பெரியோர்களுக்கு இணங்கி செயல்படலாம்.

**நோக்கங்கள்:**

இன்று படித்த இளைஞர்களிடையே வேலையின்மை காரணமாக ஒரு விரக்தி மனப் பான்மை வளர்ந்து - அது நாட்டையே சீர்குலைக்கும் நிலைக்கு வந்துள்ளது. எனவே இன்றைய இளைஞர்களின் நோக்கம் ஆக்கச் சக்தியை நோக்கி அமைய வேண்டும்; அழிவுச் சக்திக்கு இம்மியும் இடம் கொடுக்கக்கூடாது. எந்தச் சந்தர்ப்பத்திலும் எதற்காகவும் இளைஞர்கள் வன்முறையில் இறங்கி நாட்டின் பொதுச் சொத்துக்களுக்கோ - தனிப் பட்டவர் உடமைகளுக்கோ - சேதம் விளைவித்தலும் விளைவிக்க தூண்டுதலும் என்பன மன்னிக்க முடியாத மாபெரும் குற்றங்களாகும்.

நம்மவர் கைகளில் நம் "செங்குந்த மித்திரன்" தவழ வேண்டும். நம்மவர் மாநாடுகளில் இளைஞர்கள் கலந்து கொண்டு பேரவை சிறக்கவும், மாநாடு பொலிவுறவும் இயன்ற கடமைகளை அமைதியுடன் ஆற்ற வேண்டும்.

**முடிவுரை:**

வளமான மகசூலைக்காண விழையும் வேளாண் பெருமக்கள் நாற்றங்கால்களில் கவனம் செலுத்தி நல்ல வளமுள்ள நாற்றுக்களை உருவாக்குவர். அதுபோல் நம் சமுதாய வேளாண் பெருமக்களாகிய பெரியோர்கள் இன்றைய இளைஞர்களாகிய நாற்றுக்களை வளமுற - செம்மையாக - நோய் நொடி புகாதவாறு - வளர்க்கக் கடமைப் பட்டவர்களாவர்.

இளைஞர்களும் பெரியோர்களின் நம்பிக்கைக்கு உரியவர்களாக தம்மை உயர்த்திக் கொள்ள வேண்டும். எதிர்காலப் பெரியோர்களாகிய இன்றைய இளைஞர்கள் இவற்றை எல்லாம் எண்ணிப் பார்த்து வாழ்வில் அவற்றைக் கடைப்பிடிப்பார்களாக!

---

கடமையும் உரிமையும் கொழுகொம்பு போன்றது கடமையின்றி உரிமையில்லை; உரிமை யோடு ஒட்டியிருப்பதுதான் கடமை. கடமை கடைகால், உரிமை அதன்மீது எழுப்புகின்ற கட்டடம்.

— ராஜாஜி.

4. திரு. ச.கு.பா. பழநிவேல்
செங்குந்தர்,
41, தனியூர் வாணியத் தெரு,
கூறைநாடு, மயிலாடுதுறை 609 002.

5. திரு. என். திருவேங்கடசாமி
செங்குந்தர்,
43, 11-வது தெரு,
டாடாபேட், கோயம்புத்தூர் 641 012.

## பொதுச் செயலர்

தொலைபேசி: **405391**

6. டாக்டர். தி.ரா. செல்வராாசன் M.A.M.Lit., Ph.D.,
"முருகு"
2, பவணந்தியார் தெரு, [redacted] காமராசர்புரம்,
சென்னை - 600 073.

## துணைப் பொதுச்செயலர்கள்

7. திரு. சரவண பழநிவேல்
செங்குந்தர்,
9/2-வது குறுக்குத் தெரு,
ராகவரெட்டியார் காலனி,
சென்னை - 600 095.

8. திரு. எம்.பி. பாண்டுரங்கன்
செங்குந்தர், B.Com
13/1 தெற்குமாட வீதி,
மயிலாப்பூர், சென்னை 600 004.

9. திரு. ஆ. ராஜவேல் சேங்குந்தர்,
77 வடக்கு ரத வீதி,
பெண்ணாடம் 606 105.

10. திரு. மு. சிவசண்முக சேங்குந்தர்,
21-சி, அன்சாரித் தெரு,
உடுமலைப்பேட்டை 642 126.

## பொருளாளர்

11. திரு. எம்.எஸ். ரங்கையா செங்குந்தர் B.A.,
12, மெக்னிக்கால்ஸ் ரோடு,
சேத்துப்பட்டு, சென்னை 600 031.

## மண்டல செயலாளர்கள்

12. திரு. எஸ்.பி. சம்பந்த
செங்குந்தர்,
காமராஜ் நகர் காலனி,
சேலம் 636 014.

13. திரு. கே.எஸ். கல்யாணசுந்தர
செங்குந்தர்,
15-டீ, வள்ளலார் தெரு,
நரசிம்ம நகர், திருவத்திபுரம்,
செய்யாறு தாலுக்கா 604 407.

14. திரு. புலவர் ப. தங்கவேல்
செங்குந்தர்,
31 சேலம் நெடுஞ்சாலை,
கள்ளக்குறிச்சி 606 202.

15. திரு. ஏ. நடராஜ செங்குந்தர்,
நீலமலைக்கோட்டை,
(வழி) ஒட்டன் சத்திரம்,
திண்டுக்கல் 624 619.

## சங்க அமைப்புச் செயலாளர்

16. திரு. து. பழநியாண்டி செங்குந்தர்,
செங்குந்தர்புரம்,
ஜெயங்கொண்டம் 621 802.

தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்க
முதல் தலைவரும் மன்னை நகர
மன்ற முன்னாள் தலைவருமாகிய



அமரர். பெரி. ராம. நடராஜ செங்குந்தர்

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க
அமைச்சரும் தமிழ்நாடு தேர்வு ஆணைக்குழு
முன்னாள் தலைவருமாகிய



அமரர். வீ. இரத்தின செங்குந்தர், பி.ஏ.பி.எல்
கூறை நாடு

## ரு. 1000/– அளித்த அன்பர்கள்



ரு. A. பாலசுப்ரமணியன் B.Com.F.C.A

ஆடிட்டர், சென்னை

## ரூபாய் 500/– அளித்த அன்பர்கள்



திரு. P.A.R. வெங்கடேசன்

திருமதி விஜய குமாரி

வாரியங்காவல்



திரு. சரவண பழனிவேலு செங்குந்தர்

சென்னை

மன்னை தொண்டர்



திரு. எம். பன்னீர்செல்வம்

ஞ்சை மாவட்ட புரவலர்



ரு. ராம. கந்தசாமி செங்குந்தர்

## ஒத்துழைப்பு நல்கிய உறவினர்



திரு. டி. நாகப்பன்



திரு. ஆராவமுதன்



திரு. செல்வசந்திரன்



# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்
## மாவட்ட தலைவர், செயலர்

### 1. சென்னை மாவட்டம்

தலைவர்

திரு. **தி.எஸ்.டி. பொன்னுசாமி செங்குந்தர்,**
தலைவர்,
76 கூத்தாடும் பிள்ளையார் கோயில் தெரு,
சைதாப்பேட்டை, சென்னை 600 015.

செயலர்

திரு. **பி.கே. சாமிநாத செங்குந்தர் B.Com.,**
செயலர்,
6, 2-வது குறுக்குத் தெரு, ஜெத் நகர்,
ராஜா அண்ணாமலைபுரம்,
சென்னை 600 028.

### 2. செங்கை அண்ணா மாவட்டம்

திரு. **ஜி.எஸ். துரைசாமி செங்குந்தர்,**
தலைவர்,
4/65ஏ பொன்னியம்மன் கோயில் தெரு,
அம்மையார்க்குப்பம்.
திருத்தணி 631 501.

திரு. **ஏ. சம்பந்த செங்குந்தர்,**
செயலர்,
48டி மேட்டுத் தெரு,
காஞ்சிபுரம் 631 501.

### 3. வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டம்

திரு. **கே.எம். கோவிந்தராஜன் செங்குந்தர்,**
தலைவர்,
24 பிள்ளையார் கோயில் தெரு,
புதுப்பேட்டை, குடியாத்தம்.

திரு. **எஸ்.ஆர். நடராஜன் M.A., M.Com.,**
செயலர்,
45 சீதாராம முதலித்தெரு,
வேலூர் 632 001.

### 4. திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம்

திரு. **ஆர்.என். சாமி செங்குந்தர்,**
தலைவர்,
ஆர்.என். சாமி ஜவுளி ஸ்டோர்ஸ்,
ஆரணி 632 301.

திரு. **ஏ. குப்புசாமி செங்குந்தர்,**
செயலர்,
94 பெரிய பஜார் தெரு,
திருவண்ணாமலை 606 601.

## 5. தென்னாற்காடு மாவட்டம் (வடக்கு)

திரு. சி. பழநிவேலு செங்குந்தர்,
தலைவர்,
738 நேருஜி ரோடு,
விழுப்புரம் 605 602.

திரு. ப. குமரகுருபரன் செங்குந்தர் M.A.,
செயலர்,
8-A, பிரியா இல்லம்,
பூந்தோட்டம், கீழ வன்னியர் வீதி,
விழுப்புரம் 605 602.

## 6. தென்னாற்காடு மாவட்டம் (தெற்கு)

திரு. வை. ஆனந்தன் செங்குந்தர்,
தலைவர்,
ஆனந்தா ஜுவல்லரி,
8 லாரன்ஸ் ரோடு,
கடலூர் 607 002.

திரு. ஆ. ராஜவேலு செங்குந்தர்,
செயலர்,
77 வடக்கு ரதவீதி,
பெண்ணாடம் 606 105.

## 7. தஞ்சை மாவட்டம்

திரு. ஆர்.என். சந்தானராஜகோபால
செங்குந்தர், தலைவர்,
9-10 அக்கரை நடராஜமுதலியார்
தெரு,
மன்னார்குடி 614 001.

திரு. ச.கு.பா. பழநிவேல் செங்குந்தர்,
பொதுச்செயலர்,
41 தனியூர் வாணியத் தெரு,
கூறைநாடு,
மயிலாடுதுறை 609 002.

## 8. திருச்சி மாவட்டம்

திரு. எம்.ஆர். பழநியாண்டி செங்குந்தர்,
தலைவர்,
4 எல்லைக்கல் தெரு,
உடையார்பாளையம் 621 804.

திரு. டாக்டர் மு. கருணாநிதி செங்குந்தர்,
M.B.B.S.D.C.H., செயலர்,
5/53 வெள்ளிவிழாச் சாலை,
ஜெயங்கொண்டம் 621 802.

## 9. மதுரை மாவட்டம்

திரு. சி. காந்திதாஸ் செங்குந்தர்,
தலைவர்,
62 கே. கே. நகர்,
மதுரை 625 020.

திரு. எம். மாணிக்க செங்குந்தர்,
செயலர்,
19 சுயராஜ்யபுரம் கிழக்கு மெயின்ரோடு
செல்லூர், மதுரை 625 002.

## 10. முகவை மாவட்டம்

திரு. இ. தனசீல செங்குந்தர்,
தலைவர்,
4/61 லாலா லஜபதிராய் தெரு,
பரமக்குடி 623 707.

திரு. மு. முனியசாமி செங்குந்தர் M.A.B.Ed.,
செயலர்,
105 நடுத்தெரு,
மண்டலமாணிக்கம் 623 605.

## 11. காமராஜர் மாவட்டம்

திரு. அ. செல்லையாமுதலி செங்குந்தர்,
தலைவர்,
109 செங்குந்தர் தெரு,
இராஜபாளையம் 626 117.

திரு. அ. சுப்பிரமணியம் செங்குந்தர்,
செயலர்,
109 செங்குந்தர் தெரு,
இராஜபாளையம் 626 117.

## 12. நெல்லை மாவட்டம்

திரு. எஸ்.வி.ஆர்எம்.ஏ. நடராஜ செங்குந்தர்,
தலைவர்,
100 வடக்குத் தெரு,
அம்பாசமுத்திரம் 627 401.

திரு. சி. அருணாசல செங்குந்தர்,
செயலர்,
67 அகஸ்தியர் சன்னதி தெரு,
கல்லிடைக்குறிச்சி 627 416.

## 13. குமரி மாவட்டம்

திரு. வே. பழநியாண்டி செங்குந்தர்,
தலைவர்,
முதலியார் புதுத்தெரு, கோட்டாறு,
நாகர்கோவில் 629 002.

திரு. என். கிருட்டிணசாமி செங்குந்தர்,
செயலர்,
கோட்டாறு,
நாகர்கோவில் 629 002.

## 14. திண்டுக்கல் மாவட்டம்

திரு. சி. குப்புசாமி செங்குந்தர்,
தலைவர்,
27 மெயின் ரோடு,
திண்டுக்கல் 624 001.

திரு. ஏ. நடராஜ செங்குந்தர்,
செயலர்,
நீலமலைக்கோட்டை,
திண்டுக்கல் 624 619.

## 15. சேலம் மாவட்டம்

திரு. பி. இராமசாமி செங்குந்தர் B.A.B.L.,
தலைவர்,
79 முதல் அக்ரஹாரம்,
சேலம் 636 001.

திரு. எஸ்.பி. சம்பந்தம் செங்குந்தர்,
செயலர்,
காமராஜ நகர் காலனி,
சேலம் 636 014.

## 16. பெரியார் மாவட்டம்

திரு. ஆர்.ஏ.என். முத்துசாமி செங்குந்தர்,
தலைவர்,
18 பவர் ஹவுஸ் ரோடு,
ஈரோடு 638 001.

திரு. எம்.எஸ். பழநியப்பன் செங்குந்தர்,
செயலர்,
6 வெங்கடாஜலம் தெரு,
ஈரோடு 638 001.

## 17. கோவை மாவட்டம்

திரு. என். திருவேங்கடசாமி செங்குந்தர்,
தலைவர்,
43-11-வது வீதி,
டாடாபேட்,
கோயம்புத்தூர் 641 012.

திரு. எம். சிவசண்முக செங்குந்தர்,
செயலர்,
21சி அன்சாரி தெரு,
உடுமலைப்பேட்டை 612 126.

## 18. புதுவை மாவட்டம்

திரு. ந. கோவிந்தசாமி செங்குந்தர்,
தலைவர்,
ஆனந்தா திருமண மண்டபம்,
சர்தார் வல்லபாய் படேல் ரோடு,
புதுச்சேரி 605 001.

திரு. சிங்கார ஆடியபாதம் செங்குந்தர்,
செயலர்,
8 விநாயகர் கோயில் தெரு,
பெத்துசெட்டிப் பேட்டை,
புதுச்சேரி 605 008.

## 19. சிதம்பரனார் மாவட்டம்

திரு. கே. நாராயண செங்குந்தர்,
தலைவர்,
31/3 அம்மன் கோயில் தெரு,
எட்டையபுரம் 627 902.

திரு. ப. துரைராஜ் செங்குந்தர்,
செயலர்,
33 ஏ ரத்தினபுரம் தெரு,
தூத்துக்குடி 625 001.

## 20. தருமபுரி மாவட்டம்

திரு. கே.எஸ். உத்தண்டி செங்குந்தர்,
தலைவர்,
42B பெண்ணாகரம் சாலை,
குமரசாமிபேட்டை,
தர்மபுரி 636 703.

திரு. பி. சச்சிதானந்த செங்குந்தர்,
பொதுச்செயலர்,
திருமகள் அச்சகம்,
பைபாஸ் ரோடு,
தர்மபுரி 636 701.

## 21. தேவர்திருமகன் மாவட்டம்

திரு. எம். சங்கரபாண்டியன் செங்குந்தர்,
தலைவர்,
எம்.எஸ். பாண்டியன் ஜவுளி ஸ்டோர்ஸ்
மெயின்ரோடு, திருபுவனம் 623 611.

திரு. கே.ஆர். மலையரசன் செங்குந்தர்,
செயலர்,
21 நித்ய கலியாணிபுரம்,
தேவகோட்டை.

## 22. ஆந்திரா செங்குந்தர் சங்கம்

திரு. பா.கா. ஆறுமுக செங்குந்தர்,
தலைவர்,
15/2 புதுத்தெரு, புதுப்பேட்டை,
நகரி 517 590.
ஆந்திர மாநிலம்.

திரு. கோ.சி. கணேசன் செங்குந்தர், B.A.B
செயலர்,
123 பவழக்காரத் தெரு,
சென்னை 600 001.

## 23. கருநாடக செங்குந்தர் சங்கம்

Write in English

திரு. ஆர்.எம். ரெங்கசாமி செங்குந்தர்,
தலைவர்,
306ஏ ஓல்ட் பவர் ஹவுஸ் ரோடு,
சிவாஜி நகர்,
பெங்களூர் 560 051.

திரு. என்.கே. சிகாமணி செங்குந்தர்,
செயலர்,
சுவாதி புக் பைண்டிங்,
இலவங்கம்,
பெங்களூர் 560 064.

மாநில சங்க புரவலர்கள் :



திரு R.N. சந்தான ராஜகோபால
செங்குந்தர் மன்னார்குடி



திரு A.V.Rm.V. சங்கரநாராயண
செங்குந்தர் அம்பாசமுத்திரம்



திரு. C.K. குமாரசாமி
செங்குந்தர் M.A. சென்னை



திரு. வேலவர் : T.S. சுப்பிரமணிய
செங்குந்தர் சென்னை

## மாநாட்டுக்கு வருகை தந்து சிறப்பித்த அன்பர்கள்



திரு A. தேவராஜ்
செங்குந்தர், M.L.A., செய்யாறு



காஞ்சி. பன்னீர்செல்வம், M.L.A.,
உத்திரமேரூர்



திரு M. பாலசுப்பிரமணியம், MA.
BGL. M.L.A., பாண்டிச்சேரி



திரு. இராம. இராமநாதன், M.L.A.,
கும்பகோணம்.

# தலைமை சங்க ஆட்சிக் குழு



திரு ஜெ. சுத்தானந்தன் B.Sc. ஈரோடு
தலைவர்



திரு. காந்திதாஸ் MA.BL. மதுரை
துணைத்தலைவர்



திரு. M.M. தணிகை மலை
துணை தலைவர்



திரு ச.கு.பா. பழநிவேல், கூறைநாடு
துணை தலைவர்



திரு. N. திருவேங்கடசாமி, கோவை
துணை தலைவர்



டாக்டர் திரு. T.R. செல்வராசன்.
சென்னை பொதுசெயலாளர்



திரு. சரவணபழநிவேல் B.Com.
சென்னை துணைபொதுச்செயலாளர



திரு M.B. பாண்டுரங்கன் B.Com,.
சென்னை துணைபொதுச்செயலாளர்

தென்னிந்திய செங்குந்தர் 16-ஆவது மாநாட்டிற்கு எங்கள் இனிய வாழ்த்துக்கள்!

---

**குந்தப்படைச் சிறப்பு**

பிறந்த வொன் பதின்மர் குந்தப் பெருமை யாம் பேசமாட்டோம்
பறந்தன கழுகும் பாறும் பயிரய காளி யஞ்ச
மறந்தகு மவுணர ராட்ட மடங்கின மகிழ்ச்சி யால்வாய்
திறந்தன வலகை யீட்டஞ் செய்ய வாய்ச் சிறுவரோடே

— ஈட்டி எழுபது—5

---




**V. THIRUGNANA SAMBANDAM,**

**Prop: K.R.V. TRANSPORTS,**

*57, Sannathi Street, Jayankondacholapuram* - 621 802.

# தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்

**கிளைச்சங்க தலைவர், செயலர் முகவரிகள்**

30—6—1991

| கிளை எண். | அலுவலக முகவரி | தலைவர் முகவரி | செயலர் முகவரி |
|---|---|---|---|
| 1. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>30 செங்குந்தர் தெரு,<br>குடவாசல் 612 601. | புலவர் சு. சாமிநாதன்,<br>23-எ வடக்கு வீதி,<br>குடவாசல் 612 601. | வா. மருதவாணன்,<br>30 செங்குந்தர் தெரு,<br>குடவாசல் 612 601. |
| 2. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>27 தாடாளன் தெற்கு வீதி,<br>சீர்காழி 609 110. | எஸ். பாலகுமரன் B.Com.,<br>16 புழுகாப்பேட்டை புதுத் தெரு,<br>சீர்காழி 609 110. | என். திருநாவுக்கரசு M.A.M.Ed.<br>27 தாடாளன் தெற்கு வீதி,<br>சீர்காழி 609 110. |
| 3 | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>3 கோயில் ஆராயத் தெரு,<br>கூறைநாடு 609 002. | வீ. கணபதி,<br>7 காமராஜர் காலனி,<br>கூறைநாடு 609 002. | பால. ரவி,<br>6 ஏ ஆராயத் தெரு,<br>கூறைநாடு 609 002. |
| 4. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>செங்குந்தர் வீதி,<br>குத்தாலம் 609 801. | ஜி. சாமிநாதன்,<br>செங்குந்தர் தெரு,<br>குத்தாலம் 609 801. | ஜி. கணேசன்,<br>செங்குந்தர் தெரு,<br>ஆர். சட்டநாதன் கடை வீதி,<br>குத்தாலம் 609 801. |
| 5. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>பெரிய சாலியத் தெரு,<br>கதிராமங்கலம் 612 106. | பா. ஆறுமுகம்,<br>பெரிய சாலியத் தெரு,<br>கதிராமங்கலம் 612 106. | கு. கணேசமூர்த்தி,<br>பெரிய சாலியத் தெரு,<br>கதிராமங்கலம் 612 106. |
| 6. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>செங்குந்தர் தெற்கு வீதி,<br>சுந்தர பெருமாள் கோயில் 614 208. | இரா. ஜெயராமன்,<br>6/85 செங்குந்தர் தெற்கு தெரு,<br>சு.பெ.கோயில் 614 208. | பி. முருகையன்,<br>செட்டித் தெரு,<br>சுந்தர பெருமாள் கோயில் 614 208. |
| 7. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>நடு புதுத்தெரு,<br>திருநாகேஸ்வரம் 612 204. | பி.எஸ். சுந்தரேசன்,<br>நடு புதுத்தெரு,<br>திருநாகேஸ்வரம் 612 204. | அ. கோவிந்தசாமி,<br>கீழ புதுத்தெரு,<br>திருநாகேஸ்வரம் 612 204. |

| | | |
|---|---|---|
| 8. செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>குமரன் தெரு,<br>செம்பனார் கோயில் 609 309. | புலவர் செக. தியாகராஜன், B.Lit.,B.Ed.,<br>குமரன் தெரு,<br>செம்பனார்கோயில் 609 309. | க. நமச்சிவாயம், B.Sc.,<br>குமரன் தெரு,<br>செம்பனார் கோயில் 609 309. |
| 9. ஸ்ரீ கலைமகள் செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>3/66 மேலத்தெரு,<br>மேலப்பாதி 609 304. | அ. அருணாசலம்,<br>3/66 மேலத்தெரு,<br>மேலப்பாதி 609 304. | தா. பாஸ்கரன்,<br>கீழத்தெரு,<br>மேலப்பாதி 609 304. |
| 10. தியாகி இராமலிங்கனார் செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>3/59 நெடுந்தெரு, நாங்கூர் 609106. | க. செண்டாடுவான்,<br>நடுத்தெரு,<br>நாங்கூர் 609 106. | சீ. ஆறுமுகம்,<br>3/59 நெடுந்தெரு,<br>நாங்கூர் 609 106. |
| 11. செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>நேரு வீதி,<br>ஆக்கூர் 609 301. | சு. சுந்தரேசன்,<br>தனபாக்கிய இல்லம்,<br>ஆக்கூர் 609 301. | கோ. ராமு,<br>நேரு வீதி,<br>ஆக்கூர் 609 301. |
| 12. செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>44 மேல செங்குந்தர் வீதி,<br>அம்மாபேட்டை 614 401. | க. அம்பலவாணன்,<br>42 மேல செங்குந்தர் வீதி,<br>அம்மாபேட்டை 614 401. | கி. செல்வராஜ்,<br>4 மேல செங்குந்தர் வீதி,<br>அம்மாபேட்டை 614 401. |
| 13. செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>1 வரதர் கீழ வீதி,<br>வலங்கைமான் 612 804. | என். ஆறுமுகம்,<br>1 வரதர் கீழத்தெரு,<br>வலங்கைமான் 612 804. | ஆர். கலியமூர்த்தி,<br>13 வரதர் சன்னதி தெரு,<br>வலங்கைமான் 612 804. |
| 14. பால விநாயகர் செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>46 செங்குந்தர் வீதி,<br>உள்ளிக்கடை 614 202. | வாசு. கலியமூர்த்தி,<br>46 செங்குந்தர் தெரு,<br>உள்ளிக்கடை 614 202. | என். பக்கிரிசாமி,<br>செங்குந்தர் தெரு,<br>உள்ளிக்கடை 614 202. |
| 15. செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>4/37 குமரன் கீழவீதி,<br>மஞ்சக்கொல்லை 611 106. | ச. கதிரைவேல்,<br>4/65 குமரன் கீழவீதி,<br>மஞ்சக்கொல்லை 611 106. | வை. மாணிக்கம்,<br>3/37 சிவன் தெற்கு தெரு,<br>மஞ்சக்கொல்லை 611 106. |
| 16. செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>1/43 முருகன் சன்னதி தெரு,<br>திருமருகல் 609 702. | சீ. நாகராஜன்,<br>1/43 முருகன் சன்னதிதெரு,<br>திருமருகல் 609 702. | சா. தெட்சிணாமூர்த்தி,<br>1/46 முருகன் சன்னதி தெரு,<br>திருமருகல் 609 702. |

| கிளை எண். | அலுவலக முகவரி | தலைவர் முகவரி | செயலர் முகவரி |
|---|---|---|---|
| 17. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>4/47 கீழ முதலியார் தெரு,<br>முடி. திருச்சம்பள்ளி 609 309. | மு. மாரிமுத்து,<br>4/31 கீழ முதலியார் தெரு,<br>முடி. திருச்சம்பள்ளி 609 309. | வெ. கிருபாகரன்,<br>4/47 கீழ முதலியார் தெரு,<br>முடி. திருச்சம்பள்ளி 609 309. |
| 18. | நகர செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>2 மேல செங்குந்தர் பெரிய தெரு,<br>மன்னார்குடி 614 001. | பெ. இராஜகோபாலன்,<br>2 மேல பெரிய செங்குந்தர் தெரு,<br>மன்னார்குடி 614 001. | எம். பன்னீர்செல்வம்,<br>16 காசுகார செட்டித் தெரு,<br>மன்னார்குடி 614 001. |
| 19. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>மடப்புரம்,<br>திருவாரூர் 610 002. | வே. கிருஷ்ணமூர்த்தி,<br>8 எல்லைக்கல் தெரு,<br>மடப்புரம்,<br>திருவாரூர் 610 002. | டி.எஸ்.கே. தில்லைவிநாயகம்,<br>31 சித்தி விநாயகர் கோ. தெரு,<br>மடப்புரம்,<br>திருவாரூர் 610 002. |
| 20. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>16 கடைவீதி,<br>பாபநாசம் 614 205. | கே. ரெத்தினம்,<br>சண்முகவிலாஸ் ஜவுளி,<br>பாபநாசம் 614 205. | புலவர் ஆ. மகாலிங்கம்,<br>5 அப்பர் இல்லம்,<br>வங்காரம்பேட்டை,<br>பாபநாசம் 614 205. |
| 21. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>5/30 மேலத்தெரு,<br>பொன்செய் 609 304. | வி. அண்ணாமலை,<br>மெயின் ரோடு,<br>பொன்செய் 609 304. | ஆர். ஆறுமுகம்,<br>5/60 மேலத்தெரு,<br>பொன்செய் 609 304. |
| 22. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>7 லிங்கத் தட்டித்தெரு,<br>சுவாமிமலை 612 302. | சு. ஆறுமுகம்,<br>7 லிங்கத் தட்டித்தெரு,<br>சுவாமிமலை 612 302. | எஸ்.கே.என். சீனிவாசன்,<br>மேட்டுத் தெரு,<br>சுவாமிமலை 612 302. |
| 23. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>ஜெயங்கொண்ட விநாயகர் ஆலயம்,<br>மாரியம்மன்கோயில் 613 501. | ப. கோவிந்தராஜன்,<br>4/29 பட்டு நூல்காரத்தெரு,<br>மாரியம்மன்கோயில் 613 501. | மா. நடராஜன்,<br>செங்குந்தர் வீதி,<br>மாரியம்மன்கோயில் 613 501. |
| 24. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>செங்குந்தர் தெரு,<br>நெடுந்தெரு 614 210. | வை. கோவிந்தராஜன்,<br>1/29 செங்குந்தர் தெரு,<br>நெடுந்தெரு 614 210. | ஒ.க.உ. சோமு,<br>செங்குந்தர் தெரு,<br>நெடுந்தெரு 614 210. |

| | | |
|---|---|---|
| 25. செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>பட்டீஸ்வரம் சோழன் மாளிகை,<br>துர்க்கை சன்னதி,<br>பட்டீஸ்வரம் 612 703. | வே. சண்முகம்,<br>ரெத்தினம்பிள்ளைத் தெரு,<br>சோழன் மாளிகை,<br>பட்டீஸ்வரம் 612 703. | சுவாமி ராமலிங்கம்,<br>2/60 துர்க்கை சன்னதி,<br>பட்டீஸ்வரம் 612 703. |
| 26. செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>27 குடவாசல் சாலை,<br>மாப்பிள்ளைக்குப்பம் 610 105. | ஆர். சண்முகசுந்தரம்,<br>27 குடவாசல் சாலை,<br>மாப்பிள்ளைக்குப்பம் 610 105. | டி. பாலகிருஷ்ணன்,<br>10 வடக்குத் தெரு,<br>மாப்பிள்ளைக்குப்பம் 610 105. |
| 27. செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>ஆத்தூர் 609 202.<br>மணல்மேடு வழி | எஸ். சம்மந்தம்,<br>ஆத்தூர் 609 202.<br>மணல்மேடு வழி | கே. வெங்கடேசன்,<br>ஆத்தூர் 609 202.<br>மணல்மேடு வழி |
| 28. செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>மேலத்தெரு,<br>ஆவராணிபுதுச்சேரி 611 108. | டி.கே. தெட்சிணாமூர்த்தி,<br>மேலத்தெரு,<br>ஆவராணிபுதுச்சேரி 611 108. | வி. பிச்சைக்கண்ணு,<br>மேலத்தெரு,<br>ஆவராணிபுதுச்சேரி 611 108. |
| 29. செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>இலுப்பூர் (அஞ்சல்),<br>தேவூர் வழி 611 109. | என். ரத்தினவேல்,<br>இலுப்பூர் (அஞ்சல்),<br>தேவூர் வழி 611 109. | ஏ. சரவணன்,<br>இலுப்பூர் (அஞ்சல்),<br>தேவூர் வழி 611 109. |
| 30. செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>செங்குந்தர் தெரு,<br>கபிஸ்தலம் 614 709. | எம். கலியபெருமாள்,<br>மெயின் ரோடு,<br>கபிஸ்தலம் 614 709. | முத்து தெய்வ சிகாமணி,<br>M.A., M.Ed.,<br>செங்குந்தர் தெரு,<br>கபிஸ்தலம் 614 709. |
| 31. செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>2/64 தெற்கு வீதி,<br>தேவூர் 611 109. | கே.வி. கணபதி,<br>வாஞ்சிநாதன் இல்லம்,<br>தெற்குவீதி, தேவூர் 611 109. | க. இராஜசேகரன்,<br>2/64 தெற்கு வீதி,<br>தேவூர் 611 109. |
| 32. ஒட்டக்கூத்தர் செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>வடக்கு வீதி, மணக்குடி 614 709. | கோ. கணேசன்,<br>கீழ வீதி,<br>மணக்குடி 614 709. | ஆர். விஸ்வநாதன்,<br>வடக்கு வீதி,<br>மணக்குடி 614 709. |

| கிளை எண். | அலுவலக முகவரி | தலைவர் முகவரி | செயலர் முகவரி |
|---|---|---|---|
| 33. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>தெற்கு தெரு,<br>மணக்கால் அய்யம்பேட்டை 610 104. | நா. சுப்பிரமணியன்,<br>தெற்கு தெரு,<br>மணக்கால் அய்யம்பேட்டை 610 104. | சு. குமரசாமி,<br>குமரக்கோயில் தெரு,<br>மணக்கால் அய்யம்பேட்டை 610 104. |
| 34. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>266 பாரதியார் வீதி,<br>காரைக்கால் 609 602. | எஸ். ராஜ<sup></sup>சண்முகவடிவேல்,<br>6 வீராசாமிநாயக்கர் தெரு,<br>காரைக்கால் 609 602. | வை. கைலாசம்,<br>266 பாரதியார் வீதி,<br>காரைக்கால் 609 602. |
| 35. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>செங்குந்தர் தெரு,<br>புத்தகரம் 609 701. | இரா. நடராஜன்,<br>செங்குந்தர் தெரு,<br>புத்தகரம் 609 701. | எஸ். முருகையன்,<br>செங்குந்தர் தெரு,<br>புத்தகரம் 609 701. |
| 36. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>முதலியார் தெரு,<br>கோவிந்தபுரம் 612 101. | என். முருகையன்,<br>முதலியார் தெரு,<br>கோவிந்தபுரம் 612 101. | பி. பாலசுப்பிரமணியன்,<br>முதலியார் தெரு,<br>கோவிந்தபுரம் 612 101. |
| 37. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>இலுப்பைப்பட்டு,<br>மணல்மேடு 609 202. | பி. கோவிந்தராஜன்,<br>ஜவுளி ஸ்டோர்ஸ்,<br>மெயின்ரோடு,<br>மணல்மேடு 609 202. | சி. அப்பாசாமி,<br>இலுப்பைப்பட்டு,<br>மணல்மேடு 609 202. |
| 38. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>5/60 உடையாருப்புத் தெரு,<br>கீழையூர் 609 304. | சோ. இராமச்சந்திரன், B Sc., B.Ed.,<br>5/60 உடையாருப்புத்தெரு,<br>கீழையூர் 609 304. | ஆர். சந்தானம்,<br>உடையாருப்புத் தெரு,<br>கீழையூர் 609 304. |
| 39. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>செங்குந்தர் ஆற்றங்கரைத்தெரு,<br>திருச்சோற்றுத்துறை. | எம். சுப்பிரமணியன்,<br>செங்குந்தர் ஆற்றங்கரைத் தெரு,<br>திருச்சோற்றுத்துறை. | ஆர். தர்மராசன்,<br>செங்குந்தர் ஆற்றங்கரைத் தெரு,<br>திருச்சோற்றுத்துறை. |
| 40. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>4/19 மெயின்ரோடு,<br>விளக்குடி 614 715. | இ. மன்மதன்,<br>மெயின் ரோடு,<br>விளக்குடி 614 715. | சு. நாராயணசாமி,<br>விளக்குடி 614 715. |

| | | | |
|---|---|---|---|
| 41. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>2/12 தேவாங்கர் கிழவீதி,<br>துகிலி 609 804.<br>திருவிடைமருதூர் தாலுக்கா | வி. சீனிவாசன்,<br>2/12 தேவாங்கர் கிழவீதி,<br>துகிலி 609 804.<br>திருவிடைமருதூர் தாலுக்கா | |
| 42. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>74 மேல வீதி,<br>திருபுவனம் 612 103. | ஏ. சாமிநாதன்,<br>74 மேல வீதி,<br>திருபுவனம் 612 103. | ஆ. ஜெயராமன்,<br>139 தெற்கு வீதி,<br>திருபுவனம் 612 103. |
| 43. | நகர செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>39 பழைய அரண்மனைத்தெரு,<br>கும்பகோணம் 612 001. | அ. கந்தசாமி,<br>சித்ரா மரம்அறுவை சாலை<br>34 சடச்சாயி மடத்தெரு,<br>கும்பகோணம் 612 001. | எஸ். சோலைமுத்து, M.A., M.Ed.,<br>39 பழைய அரண்மனைத்தெரு,<br>கும்பகோணம் 612 001. |
| 44. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>30 செங்குந்தர்தெரு,<br>திருப்பாலத்துறை 614 215. | டி. பழநியாண்டி,<br>6 செங்குந்தர்தெரு,<br>திருப்பாலத்துறை 614 215. | எம். கணபதி, B.A.,<br>30 செங்குந்தர் தெரு,<br>திருப்பாலத்துறை 614 215. |
| 45. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>செங்குந்தர் தெரு,<br>ராஜாக்களிருப்பூர் 610 105. | சி. பாலசுப்பிரமணியன்,<br>செங்குந்தர் தெரு,<br>ராஜாக்களிருப்பூர் 610 105. | ஆர். ராமசாமி,<br>செங்குந்தர் தெரு,<br>ராஜாக்களிருப்பூர் 610 105. |
| 46. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>கீழத் தெரு,<br>காட்டூர் 610 104. | எம். பாலசுப்பிரமணியன்,<br>மில் தெரு,<br>காட்டூர் 610 104. | மா. கார்த்திகேயன்,<br>2/50 கீழத்தெரு,<br>காட்டூர் 610 104. |
| 47. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>4/104 தண்டபாணிகோயில்தெரு,<br>பொருள்வைத்தச்சேரி 611 108. | ஆர். செல்லப்பன்,<br>4/104 தண்டபாணிகோயில் தெரு,<br>பொருள்வைத்தச்சேரி 611 108. | தி. சாமிநாதன்,<br>நடுத்தெரு,<br>பொருள்வைத்தச்சேரி 611 108. |
| 48. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>2/52 தெற்குவீதி,<br>சிக்கல் 611 108. | எஸ்.எம். சிங்காரவேலன்,<br>தெற்குவீதி,<br>சிக்கல் 611 108. | பி. சுப்பிரமணியன்,<br>தெற்குவீதி,<br>சிக்கல் 611 108. |
| 49. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>செங்குந்தர் தெரு,<br>தில்லையாடி 609 310. | ஏ.என். கோவிந்தராஜன்,<br>செங்குந்தர் தெரு,<br>தில்லையாடி 609 310. | வி. கலியபெருமாள்,<br>செங்குந்தர் தெரு,<br>தில்லையாடி 609 310. |

| கிளை எண். | அலுவலக முகவரி | தலைவர் முகவரி | செயலர் முகவரி |
| --- | --- | --- | --- |
| 50. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>அபிராமி தெற்குவீதி,<br>திருப்பட்டினம் 609 606. | சோம. தெட்சிணாமூர்த்தி,<br>அபிராமி தெற்குவீதி,<br>திருப்பட்டினம் 609 606. | சி. ராஜவேல், M.A., B.Ed.,<br>நாகாபரணபிள்ளையார்<br>கோயில் தெரு,<br>திருப்பட்டினம் 609 606. |
| 51. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>17 மெயின்ரோடு,<br>விழுதியூர் 609 705. | வி. வேலாயுதம்,<br>17 மெயின்ரோடு,<br>விழுதியூர் 609 705. | வி. பக்கிரிசாமி,<br>12 முதலியார்தெரு,<br>விழுதியூர் 609 705. |
| 52. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>2/76 செங்குந்தர் தெரு,<br>பாமணி 614 711. | கோ. சிங்காரம்,<br>செங்குந்தர் தெரு,<br>பாமணி 614 711. | எஸ். நாகராஜன்,<br>செங்குந்தர் தெரு,<br>பாமணி 614 711. |
| 53. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>திருவிடைமருதூர்,<br>அருந்தவம்புலம் அஞ்சல்,<br>திருத்துறை தாலுக்கா 614 711. | இ. மணிஎழிலன்,<br>திருவிடைமருதூர்,<br>அருந்தவம்புலம் அஞ்சல்,<br>திருத்துறை தாலுக்கா 614 711. | சுப்பையன்,<br>பிள்ளையார்கோயில்தெரு,<br>திருவிடைமருதூர்,<br>அருந்தவம்புலம் அஞ்சல்,<br>திருத்துறை தாலுக்கா 614 711. |
| 54. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>1/39 செங்குந்தர் வீதி,<br>கொக்காலடி 614 711. | கே. வெங்கடாசலம்,<br>செங்குந்தர் தெரு,<br>கொக்காலடி 614 711. | கே. தெட்சிணாமூர்த்தி,<br>செங்குந்தர் தெரு,<br>கொக்காலடி 614 711. |
| 55. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>32 வடக்கு வீதி,<br>சங்கமங்கலம் 611 108. | எம். காத்தமுத்து,<br>32 வடக்கு வீதி,<br>சங்கமங்கலம் 611 108. | |
| 56. | செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,<br>6/21 செங்குந்தர் தெரு,<br>திருப்பூண்டி 611 110. | பி. ஞானசேகரன்,<br>4/8 செங்குந்தர் தெரு,<br>திருப்பூண்டி 611 110. | எம்.பி. பாலசுப்ரமணியம்,<br>6/21 செங்குந்தர் தெரு,<br>திருப்பூண்டி 611 110. |

## திருப்பூர் குமரன் கோட்டம்

**வட்டங்கள்:**

1. மன்னார்குடி, 2. நீடாமங்கலம், 3. குடவாசல்,
4. நன்னிலம்.

**கிளைச்சங்கங்கள்: 15**

1. (18) மன்னார்குடி, 2. (1) குடவாசல், 3. (66) அகரத்திருநல்லூர் 4. (46) காட்டூர், 5. (33) மணக்கால் அய்யம்பேட்டை, 6. (26) மாப்பிள்ளைக்குப்பம், 7. (45) இராஜாக்களிருப்பூர், 8. (63) நல்லிச்சேரி, 9. (35) புத்தகரம், 10. (62) கணபதிபுரம், 11. (16) திருமருகல், 12. (71) சேஷமூலை, 13. (76) அச்சுதமங்கலம், 14. (77) தென்னஞ்சார், 15. (78) வாழ்மங்கலம்.

## கவிச்சக்கரவர்த்தி ஒட்டக் கூத்தர் கோட்டம்

**வட்டங்கள்:**

1. திருவாரூர், 2. திருத்துறைப்பூண்டி, 3. வேதாரண்யம்,
4. நாகப்பட்டினம், 5. ஒரத்தநாடு, 6. பட்டுக்கோட்டை,
7. பேராவூரணி.

**கிளைச்சங்கங்கள்: 21**

1. (19) திருவாரூர், 2. (74) அம்மையப்பன், 3. (68) வலிவலம், 4. (29) இலுப்பூர், 5. (31) தேவூர், 6. (52) பாமணி, 7. (54) கொக்காலடி, 8. (67) தலைக்காடு, 9. (40) விளக்குடி, 10. (53) திருத்துறை-திருவிடைமருதூர், 11. (75) செருவாமணி, 12. (32) மணக்குடி, 13. (59) நாகப்பட்டினம், 14. (15) மஞ்சக்கொல்லை, 15 (47) பொருள்வைத்தச்சேரி, 16. (48) சிக்கல், 17. (55) சங்கமங்கலம், 18. (28) ஆவராணிபுதுச்சேரி, 19. (64) நிர்த்தனமங்கலம், 20. (56) திருப்பூண்டி, 21. (57) விக்னபுரம் புதுச்சேரி.



# தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்

**கோட்டங்கள், வட்டங்கள், கிளைச்சங்கங்கள்.**

தஞ்சை மாவட்டத்தில் 15—10—91ல் உள்ள கிளைச்சங்கங்களின் எண்ணிக்கை 78.

(...) நகவளைவில் உள்ள எண் கிளைச்சங்க பதிவு எண் ஆகும்.



### தில்லையாடி வள்ளியம்மைக் கோட்டம்

**வட்டங்கள்:**

1. மயிலாடுதுறை, 2. தரங்கம்பாடி, 3. சீர்காழி,
4. திருவிடைமருதூர், 5. காரைக்கால்.

**கிளைச்சங்கங்கள்: 23**

1. (3) கூறைநாடு, 2. (4) குத்தாலம், 3. (37) இலுப்பைப்பட்டு மணல்மேடு, 4. (27) ஆத்தூர், 5. (8) செம்பனார்கோயில், 6. (11) ஆக்கூர், 7. (49) தில்லையாடி, 8. (60) கருவிழந்தநாதபுரம், 9. (21) புஞ்சை சித்தவரம், 10. (17) முடி திருச்சம்பள்ளி, 11. (38) கீழையூர், 12. (9) மேலப்பாதி, 13. (2) சீர்காழி, 14. (61) திருமயிலாடி, 15. (10) நாங்கூர், 16. (65) மேல்நாங்கூர், 17. (5) கதிராமங்கலம், 18. (36) கோவிந்தபுரம், 19. (42) திருபுவனம், 20. (41) துகிலி, 21. (34) காரைக்கால், 22. (50) திருமலைராயன் பட்டினம், 23. (51) விழுதியூர்.

### ஞானியார் அடிகள் கோட்டம்

**வட்டங்கள்:**

1. கும்பகோணம், 2. வலங்கைமான், 3. பாபநாசம்,
4. திருவையாறு, 5. தஞ்சாவூர்.

**கிளைச்சங்கங்கள்: 19**

1. (43) கும்பகோணம், 2. (22) திருவலஞ்சுழி சுவாமிமலை, 3. (25) பட்டீஸ்வரம் சோழன் மாளிகை, 4. (58) அய்யாவடி வில்லி வரம்பல், 5. (72) தேப்பெருமாநல்லூர், 6. (73) கும்ப-திருவிடைமருதூர் 7. (6) சுந்தரபெருமாள்கோயில், 8. (7) திருநாகேஸ்வரம், 9. (70) தாராசுரம், 10. (69) அம்மாசத்திரம், 11. (13) வலங்கைமான் 12. (12) அம்மாபேட்டை, 13. (20) பாபநாசம், 14. (44) திருப்பாலத்துறை, 15. (24) நெடுந்தெரு, 16. (30) கபிஸ்தலம், 17. (14) உள்ளிக்கடை, 18. (39) திருச்சோற்றுத்துறை, 19. (23) மாரியம்மன்கோயில்.

# தலைமை சங்க ஆட்சிக் குழு



திரு. ஆ. ராசவேல், பெண்ணாடம்
துணைபொது செயலாளர்



திரு. மு. சிவசண்முகம், உடுமலைபேட்டை
துணை பொதுச் செயலாளர்



திரு M.S. ரெங்கையா B.A., சென்னை
பொருளாளர்



திரு. S.P. சம்பந்தம், சேலம்
மண்டல செயலாளர்



திரு. K.S. கல்யாணசுந்தரம், செய்யாறு
மண்டல செயலாளர்



திரு. A. நடராசன், நீலமலைக்கோட்டை
மண்டல செயலாளர்



திரு து. பழனியாண்டி, செங்குந்தபுரம்
சங்க அமைப்புச் செயலர்



திரு. T.E. ஆறுமுகசெங்குந்தர்
செயலர் செங்குந்தர் கல்வி மற்றும் செங்குந்தர்
தர்மபரிபாலன அறக்கட்டளை, ஜெயங்கொண்டம்

# மாவட்ட தலைவர்கள்



திரு. S.D. பொன்னுசாமி செங்குந்தர்,
சென்னை பெருநகர்



திரு. G.S. துரைசாமி
செங்குந்தர் ,செங்கை எம்.ஜி.ஆர்



திரு. K.M. கோவிந்தராஜ் செங்குந்தர்,
வடஆற்காடு அம்பேத்கார்



திரு. R.N. சாமி
திருவண்ணாமலை சம்புவராயர்



திரு. C. பழனி வேல்,
தென்னாற்காடு வடக்கு



திரு. வை. ஆனந்தன் செங்குந்தர்,
தென்னாற்காடு தெற்கு



திரு. M.R. பழனியாண்டி
செங்குந்தர், திருச்சி



திரு. இ. தனசீலன் செங்குந்தர், முகவை



தஞ்சை ஜில்லா

# செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்,

கூறைநாடு, மயிலாடுதுறை - 609 002.

தொடக்கம்: 5—6—1944. பதிவு எண். 3/1977

## மாவட்ட புரவலர்கள்

1. திரு. சித.ராம. கந்தசாமி செங்குந்தர்,
   கீழ வீதி,
   சிக்கல் 611 108.

2. திரு. டி.எஸ். கார்த்திகேய செங்குந்தர்,
   31 சித்தி விநாயகர் கோயில் தெரு,
   மடப்புரம், திருவாரூர் 610 002.

3. திரு. எம்.எஸ். ரெங்கையா செங்குந்தர் B.A.,
   12 மெக்னிக்கால்ஸ் சாலை,
   சேத்துப்பட்டு,
   சென்னை 600 031.

4. திரு. ராம. திருநாவுக்கரசு செங்குந்தர் B.A.,
   பி. 52 மெயின் ரோடு,
   ஸ்ரீ நகர் காலனி,
   கும்பகோணம் 612 001.

5. திருமதி. முத்துலெட்சுமி ராமலிங்கம்,
   நேரு வீதி, ஆக்கூர் 609 301.

## ஆட்சிக் குழுவினர்

### தலைவர்

திரு. ஆர்.என். சந்தானராஜகோபால செங்குந்தர்,
9-10 அக்கரை நடராஜ முதலியார் தெரு,
மன்னார்குடி 614 001. Phone: 467 P.P.

### துணைத் தலைவர்கள்

1. திரு. பி.எஸ். சுந்தரேச செங்குந்தர்,
   நடுபுதுத்தெரு,
   திருநாகேஸ்வரம் 612 204.

2. திரு. என். நடராஜ செங்குந்தர்,
   முருகன் அரிசி ஆலை,
   ஆவராணிபுதுச்சேரி, சிக்கல் 611 108.

3. திரு. ஆர். திருநாவுக்கரசு செங்குந்தர்,
   லெட்சுமி கார்டன்ஸ்,
   மெயின்ரோடு, கும்பகோணம் 612 001.

4. திரு. செ. முருகேச செங்குந்தர்,
   நடுத்தெரு,
   நாங்கூர். 609 106.

# செங்கை M.G.R. மாவட்ட

# செங்குந்த மகாஜன சங்கம்,

48-D, மேட்டுத்தெரு, காஞ்சிபுரம் - 631 501.

4, 5–4—84ல் காஞ்சிபுரத்தில் செங்கை மாவட்ட செங்குந்தர்கள் சார்பில் 14-ஆவது மாநில மாநாடு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைவர் பத்மஸ்ரீ நாச்சிமுத்து செங்குந்தர் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. மாநாடு நடந்து முடிந்த ஆர்வத்தில் செங்கை மாவட்ட செங்குந்த மகாஜன சங்கம் 2—6—1985ல் காஞ்சிபுரத்தில் அப்போதைய துணைத் தலைவரும் நமது தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத் தலைவருமான உத்யோக ரத்னா. திரு. J. சுத்தானந்தம் அவர்களால் துவங்கி வைக்கப்பட்டது. சங்கத்தில் இன்றுவரை 580 ஆயுள் உறுப்பினர்கள் உள்ளனர். செங்கை M.G.R. செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைவர். திரு. G.S. துரைசாமி செங்குந்தர், முன்னாள் திருத்தணி அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் அறங்காவலர் குழுத் தலலவர், பொதுச் செயலர்கள், திரு. A. சம்பந்தம் அவர்கள், பட்டு ஜவுளி வியாபாரம், துணைப் பொதுச் செயலாளர், திரு. M. சண்முகம், M.A., B.T. பச்சையப்பன் மேல் நிலைப் பள்ளி தலைமை ஆசிரியர். பொருளாளர், திரு. A.K.G. சம்பந்தம், பட்டு ஜவுளி வியாபாரம் ஆகிய முக்கிய நிர்வாகஸ்தர்களுடன் நல்ல முறையில் சங்கம் இயங்கி வருகிறது.

மூன்று மாதங்களுக்கு ஒரு முறையாக வருடத்தில் நான்கு செயற்குழு கூட்டங்கள் நடந்து வருகிறது. தலைமைச் சங்கத்தின் கட்டளைகளுக்கு உட்பட்டு மாவட்டத்தில் செயல்களை ஆற்றி வருகிறது.

மாவட்ட சங்கம் தொடங்கி 1986-ல் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அவர்கள் தலைமையிலும் 1987-ல் சென்னை அனைத்து இந்திய கைத்தறி துணி மார்க்கட்டிங் சங்க நிர்வாக அதிகாரி திரு. A. ராஜாமணி அவர்கள் தலைமையிலும் 1988-ல் சென்னை பல்கலைக் கழக ஓய்வு பெற்ற திரு. C.K. குமாரசாமி அவர்கள் முன்னிலையில் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத் தலைவர் உத்யோக ரத்னா திரு. J. சுத்தானந்தம் அவர்கள் தலைமையிலும் மாவட்டத்திலுள்ள செங்குந்தர் சமூக மாணவ, மாணவிகளுக்கு +2, S.S L.C. ஆகிய வகுப்பில் 1-ஆவது, 2-ஆவது, 3-ஆவது, தகுதி பெற்றவர்களுக்கு ரொக்கப் பரிசும், பாராட்டு பத்திரமும் வழங்கியுள்ளது. 14—7—91ல் நடைபெற்ற சிறப்பு செயற்குழு கூட்டத்தில் இந்த ஆண்டு செப்டம்பர் மாதத்தில் பரிசளிப்பு விழா நடத்த தீர்மானிக்கப் பட்டது.

மாவட்டத்தில் கிளைச்சங்கங்கள் மதுராந்தகம் வட்டத்தில் 12 காஞ்சிபுரம் வட்டத்தில் 3, செங்கல்பட்டு வட்டத்தில் 2, திருத்தணிகை வட்டத்தில் 2, திருவள்ளூர் வட்டத்தில் 2 மற்றும் பள்ளிப்பட்டு வட்டத்தில் 12 ஆக 33 உள்ளது.

3—12—1988ல் சென்னையில் நடைபெற்ற சிறப்பு மாநாட்டில் எங்கள் மாவட்டம் எல்லோரும் வியக்கும் வகையில் மிகச்சிறப்பான அளவில் பங்கேற்றது. 12, 13–5—90-ல் சென்னையில் நடைபெற்ற 15-ஆவது மாநில மாநாட்டில் எங்கள் மாவட்டம் சிறப்பான முறையில் பங்கேற்றது. 27, 28–7—91-ல் கும்பகோணத்தில் நடைபெற உள்ள 16-ஆவது மாநாட்டிலும் சிறப்புடன் பங்குபெற இருக்கிறது. இவ்வாறாக சங்கம் நல்ல முறையில் இயங்கி வருகிறது.

# தஞ்சை மாவட்ட ஆட்சிக் குழு



திரு. R.N. சந்தான ராஜகோபால செங்குந்தர்
தலைவர், மன்னார்குடி



திரு. R. திருநாவுக்கரசு செங்குந்தர்
துணைத் தலைவர் பாபநாசம்



திரு. S முருகேச செங்குந்தர்
துணைத்தலைவர்,நாங்கூர்



திரு. P.S. சுந்தரேச செங்குந்தர்
திருநாகேஸ்வரம்
துணைத்தலைவர்



திரு. தெ சம்பந்த செங்குந்தர்
சீர்காழி
பொருளாளர்



திரு. ச.கு.பா. பழநிவேல் செங்குந்தர்
கூறைநாடு
பொது செயலாளர்



திரு. க. திருஞானசம்பந்தம்
செம்பனார்கோயில்
செயலர்

## தஞ்சை மாவட்ட ஆட்சிக் குழு



திரு. நா வினாயகமுர்த்தி
செங்குந்தர் BA BT குடவாசல்
செயலர்



திரு. பி.எஸ். பி. சண்முக செங்குந்தர்
திருநாகேஸ்வரம்
செயலர்



திரு. கோ. சிங்கார செங்குந்தர்
பாமனி
செயலர்



திரு. வீ. கணபதி செங்குந்தர்
கூறைநாடு
துணை செயலர்

## தொண்டர்கள்



திரு. க. பால சுப்பிரமணியம்
கூறைநாடு



திரு. மேஜர் N. ஆறுமுக செங்குந்தர்
வலங்கைமான்
தொண்டர் படை தளபதி



திரு. வ. தண்டபாணி செங்குந்தர்



திரு. சிங்காரப்பிரகாச செங்குந்தர்
செம்பனார் கோயில்



# வடார்க்காடு அம்பேத்கார் மாவட்ட செங்குந்த மகாஜன சங்கம்

24, பிள்ளையார் கோவில் தெரு,
புதுப்பேட்டை : குடியாத்தம் - 632 601.

---

ஓங்குக ஒற்றுமை ! வெல்க செங்குந்தம் !

நம் இனத்தவர்கள் மிகுதியாக வாழும் மாவட்டங்களில் வடார்க்காடு மாவட்டமும் ஒன்று என்பதை அனைவரும் அறிவர். அம்மாவட்டம் அண்மையில் இரண்டாகப் பிரிக்கப் பட்டு ஒரு பகுதி **திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம்** என்றும் மற்றொரு பகுதி **வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டம்** என்றும் பெயர் சூட்டப்பட்டு இயங்கி வருகிறது.

இந்நிலையில் வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டத்தின் செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைவராக, குடியேற்றம் முன்னாள் நகரமன்றத் தலைவரும் திருவள்ளுவர் மேனிலைப் பள்ளியின் தாளாளருமாகிய திரு. கே.எம். கோவிந்தராசனை ஒருமனதாகத் தேர்ந்தெடுத்தனர். அவரும் — மற்ற பொறுப்பாளர்களும் இணைந்து மாவட்ட அளவில் செங்குந்தர் இன எழுச்சியையும் ஒற்றுமையையும் மிகச் சிறப்பாக செயலாற்றி வருகிறார்கள் என்பது செங்குந்த இன வரலாற்றில் குறிப்பிடத்தக்க அத்தியாயமாகும்.

**மாநில சிறப்புச் செயற்குழு கூட்டம்:**

வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டத்தின் மாநில சிறப்புச் செயற்குழு கூட்டம் குடியேற்றத்தில் நடத்தியது சிறப்புக்குரியதாகும். மாநிலத் தலைவர் உத்தியோகரத்னா — நெசவாளர் நேசன் உயர்திரு சுத்தானந்தன், மாநிலச் செயலர் திரு. செல்வராசன் மற்றும் அனைத்து வட்ட மாவட்டங்களில் உள்ள செயற்குழு உறுப்பினர்களும் கலந்து கொண்டனர். மேலும் சிறப்பு விருந்தினராக தொழிலதிபர் திரு. M. எதிராச செங்குந்தர் அவர்கள் ஆரம்பத்தில் இருந்து முடிவு வரை இருந்து சிறப்பித்தார்.

பிற்பகலில் பல்லாயிரக்கணக்கில் கலந்து கொண்ட நம் இனப்பேரணி இந்நகரின் ஒரு பகுதியாக இருக்கும் காமாட்சியம்மன் பேட்டையில் இருந்து துவங்கி மாலை 7-00 மணி அளவில் திருவள்ளுவர் மேனிலைப் பள்ளித் திடலை அடைந்தது. பேரணி நகரத்தில் பேரெழுச்சியைத் தந்ததோடு நகரையே ஸ்தம்பிக்கச் செய்தது.

மாலை 7-00 மணிக்குமேல் தலைவர் அவர்கள் தலைமையில் பலர் எழுச்சியுரை ஆற்ற கலைநிகழ்ச்சி — ஒட்டக்கூத்தர் நாடகம் முதலியன இடம் பெற்றது குறிப்பிடத்தக்கது. குறிப்பாகச் சொல்லப்போனால் இந்நிகழ்ச்சி மாவட்ட மாநாடுபோல் அமைந்திருந்ததாக சங்கத் தலைவர் அவர்களே மனம் திறந்து பாராட்டினார்.

**உண்ணாநோன்பு போராட்டம்:**

தலைமைக்குத் தலைவணங்குவோம் — கட்டுப்படுவோம் என்ற கொள்கை வழி உண்ணாநோன்பு போராட்டத்தை இம்மாவட்டம் மிகச்சிறப்பாக நடத்திக் காட்டியது.

**மாநில மாநாட்டில் பங்கு:**

குடந்தையில் நடைபெற்ற மாநில மாநாட்டில் இம்மாவட்ட மக்களைப் பெருமளவில் கலக்கச்செய்ய துண்டு விநியோகங்களும், வால் போஸ்ட்டர்களும் மாவட்டத்தின் சார்பில் அச்சடித்து — ஒவ்வொரு கிளைச் சங்கத்திற்கும் — ஊருக்கும் கொடுத்தனுப்பி முடிந்த வரை சுற்றுப் பயணமும் செய்து மக்களைத் திரட்டியது — எழுச்சியை ஊட்டியது.

**மூன்று மாதத்திற்கொரு செயற்குழு கூட்டம்:**

வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டம் பிரிந்த உடன் இம்மாவட்டத்தின் சார்பில் தவறாமல் மூன்று மாதத்திற்கு ஒரு முறை செயற்குழு கூட்டத்தை நடத்தி வருகிறது. அக்கூட்டங்களில் உறுப்பினர்கள் சேர்க்கை - ஊர் ஒற்றுமை - கல்வி அறக்கட்டளைகள் - சமுதாய முன்னேற்றத்திற்கான வழிமுறைகள் ஆராயப்படுவதோடு ஆக்க பூர்வமான செயல்களும் செய்துவர ஏற்பாடு செய்யப்படுகிறது. மேலும் மாவட்டத்தின் சார்பில் ஏழை மாணவர்களுக்கு கல்வி உதவித் தொகை வழங்க பல்வகையிலும் முயற்சி செய்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

**கட்டுப்படுவோம் ! கடமை ஆற்றுவோம் !**

மாநிலச் சங்கம் இடும் எக்கட்டளையையும் இம்மாவட்டம் மனநிறைவுடன் செய்து வருகிறது என்பதோடு இனியும் இதைக்காட்டிலும் சிறப்பாகச் செயல்படுவது என்று வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டம் உறுதி கூறுகிறது.


With best compliments from :

Phone : NTS 272



**THE MADRAS STORES**

Maligai, Oilman Stores, Electrical Goods, Canned, Foods, Stationery and Patent Medicines, Presentation articles.

*No. 9/4, Main Bazaar, Block-19, Township,*

**NEYVELI - 607 803 (S. A. Dt.)**

**ராஜா ஐஸ் பேக்டரி**

பாப்பாரப்பட்டி

கிளைகள்: தருமபுரி, ஓசூர்

உரிமையாளர்: **S. ராமசாமி**

எங்களது



வாழ்த்துக்கள்!



# தருமபுரி மாவட்ட செங்குந்த மகாஜன சங்கம்

தருமபுரி மாவட்டத்தில் நம்மவர் வாழும் எல்லா சிற்றூர்களும் ஏழூர் என்று சொல்லும் வழக்கம் நெடுங்காலமாக இருந்து வருகின்றது. சேலத்தில் பொன்விழா மாநாடு நடைபெறுவதற்கு முன்பு இருந்தே அனைத்து சங்கங்களும் சிறப்புற தனித் தனியாக செயல்பட்டு கொண்டு வந்தது. பொன்விழா மாநாட்டிற்காக, நமது மாவட்டத்தில் வாழும் நம்மவர்கள் அனைவரையும் ஒன்று திரட்டும் முயற்சியில் தியாகி M.S. அய்யம்பெருமாள், புரவலர், த. குட்டியப்பன் அவர்களுடன் சமுதாய தொண்டர்களும் ஈடுபட்டு நம்மவர்கள் வாழும் அனைத்து ஊர்களிலும் கிளைச்சங்கங்களை ஏற்படுத்தி சங்கம் நெறியாக செயல்பட வழிவகை செய்தார்கள்.

தலைவர் J. சுத்தானந்தம் அவர்கள் மாவட்ட நிர்வாகிகளை தேர்வு செய்தார். அதன்படி புதிய தலைவராக S.V. கோபால், செயலாளராக D.S. முருகேசன், பொருளாளராக க. சிவப்பிரகாசம் அவர்களும் பொறுப்பேற்றார்கள்.

1988-ல் நடைபெற்ற இந்த கூட்டத்தில்தான் மிகவும் பின்தங்கிய மாவட்டமான தர்மபுரியில் நம்மவரிடம் எழுச்சியும், விழிப்புணர்வும் ஏற்படுத்த பெரும்பான்மையோரின் வேண்டுகோளை ஏற்று தருமபுரி மாவட்ட செங்குந்தர் இளைஞர் மாநாடு நடைபெற தலைவர், செயலாளர் ஆகியோர் எல்லாவகையான ஒத்துழைப்பும், சேலம், சென்னை, வடஆற்காடு, பெரியார், திருச்சி, தஞ்சை மற்றும் எல்லா மாவட்ட சங்கங்களிருந்தும் நூற்றுக்கணக்கான பேருந்துகளை தருமபுரி இளைஞர் மாநாட்டிற்கு வருவதற்கு ஏற்பாடுகளை செய்தும் எங்களுக்கு பெரும் துணையாக உதவினார்கள்.

மிகவும் குறைந்த நாட்களில் (50 நாட்களில்) எழுச்சியாகவும், சிறப்பாகவும் பல்லாயிரக் கணக்கானோர் கலந்து கொண்ட இளைஞர் மாநாட்டிற்கு பின் நடைபெற்ற எல்லா மாநாட்டிற்கும் தர்மபுரி மாவட்டத்தின் சார்பில் பெரும் அளவில் கலந்து கொண்டு இருந்தாலும் சங்கத்தின் செயல்பாடு அப்படி குறிப்பிடும்படியாக இல்லாமல் மந்தமாகவே காணப்பட்டது. இந்த நிலையில் நம் இனத்தை MBC-யில் சேர்க்கச் சொல்லி உண்ணாவிரதப் போராட்டம் எல்லா கிளைச்சங்கங்களின் ஆதரவிலும் வெகு சிறப்பாக நடந்தது என்பது மிகையாகாது.

அடுத்து அரசியல் காழ்ப்புணர்ச்சி காரணமாக நமது மாநில தலைவர் அவர்களைகைது செய் ததை கண்டித்து கண்டன பேரணி நடத்தியதும் சங்கத்தின் நடவடிக்கையில் என்றும் முன் மாதிரியாக திகழ்ந்தது. இதன்பின் தர்மபுரி மாவட்ட சங்கத்தின் செயல்திரத்தை மேம்படுத்

தவும், புதிய நிர்வாகிகளை தேர்ந்தெடுக்கவும், மாநிலத் தலைவர், பொதுச் செயலாளர் தருமபுரிக்கு வந்திருந்து, கிளைச்சங்க நிர்வாகிகளின் வேண்டுகோளின்படி தலைவராக M. K. S. உத்தண்டி, துணைத்தலைவராக A. K. சாமிநாதன், P. பொன்னுசாமி, P. பாண்டுரங்கன், பொதுச் செயலாளராக P. சச்சிதானந்தம், செயலாளராக D. சம்பத், துணைச்செயலாளராக V. சந்திரன், S. பழனிசாமி, பொருளாளராக V M. கோபால் சங்க அமைப்பு செயலாளராக D.S. முருகேசன், சட்ட ஆலோசகராக, K. இலஷ்மிநாராயணன், B Sc.,LLB., புரவலராக திரு. M.S. அய்யம்பெருமாள், த. குட்டியப்பன், P. முனுசாமி, S.V. கோபால் ஆகியோரை மாவட்ட நிர்வாகிகளாகவும் தேர்ந்தெடுத்து சங்கம் சிறப்புற செயல்பட்டு வருகின்றது. தருமபுரி மாவட்ட செங்குந்த மகாஜன சங்கத்தின் எதிர்கால திட்டமாக, ஏழை மாணவர்களுக்கு உதவித்தொகை வழங்குதல் நுழைவுத்தேர்வுக்கு பயிற்சி வகுப்பு நடத்துதல், ஏழை மாணவர்களுக்கு இலவச திருமணம் நடத்துதல், மாவட்ட சங்கத்திற்காக கட்டிடம் கட்டுவதற்கு பொருளாதார வசதியை பெருக்கும் திட்டத்தில் இப்பொழுது சங்கம், முழுமூச்சுடன் செயல்பட எண்ணியுள்ளது. இதுபோன்ற சிறப்பான திட்டங்களுடன் தருமபுரி மாவட்ட செங்குந்த மகாஜன சங்கம். நம்மவரின் ஒத்துழைப்புடன் செயல்பட்டுக் கொண்டு வருகின்றது.

—x—


செங்குந்த மகாசன சங்கம் ஒற்றுமையுடன் செயல்பட எங்களுடைய
நல் வாழ்த்துக்கள்!

கடலூரில் 22Ct தங்க நகைகள் வாங்க விற்க நம்பிக்கை
நாணயம் கைராசி உள்ள ஒரே நிறுவனம்

**ஸ்ரீ இரத்தினு ஜுவல்லரி**

P. No. 753

நெ. 4, லாரன்ஸ் ரோடு, **கடலூர் - 2.**

**R.J.** சீல் உத்திரவாதம்

நீங்கள் உங்களுக்கு என்று வீட்டு மனை வாங்கவும், உங்கள் வீடு, நிலங்கள், மனைகளை விற்கவும் கடலூரில் நம்பிக்கைக்கு பாத்திரமாக செயல்படும் ஒரே நிறுவனம்

**ஸ்ரீ இரத்தினு ரியல் எஸ்டேட்**
12, வண்டிப்பாளையம் ரோடு,
கடலூர் - 2.

**கிளை :**

**ஸ்ரீ இரத்தினு ரியல் எஸ்டேட்**
சென்ட்ரல் லாட்ஜ்,
M. G. ரோடு, விழுப்புரம்.

உரிமை : **சக்தி R. சம்பத்குமார்**

தென்னார்க்காடு மாவட்ட

# செங்குந்த மகாஜன சங்கம்

## (தெற்கு)

77, வடக்கு ரத வீதி, பெண்ணாடம் - 602105.

---

**சங்கம் தொடக்கம்:- 10—4—1983.**

**தெ.ஆ. மாவட்டம் (தெற்கு) கிளைச் சங்கங்கள்:** 51 (ஐம்பத்து ஒன்று)

**பதவி வகித்த தலைவர்கள்:**

(1) திரு. ஆர். சோமசுந்தரம் எம்.ஏ.பி.எல்., (2) திரு. எம்.எஸ். பச்சமுத்து எம்.ஏ.பிஎல்., (3) திரு. வி. ஆனந்தன் கடலூர்.

**பதவி வகித்த பொதுச் செயலாளர்கள்:**

(1) திரு. கே. பொன்னம்பலம் (2) திரு. ஆ. ராஜவேலு பெண்ணாடம்.

**செயல்பாடுகள்:**

(1) மாநில மாநாடுகளுக்கு நிர்ணயிக்கும் நிதி சேர்த்துக் கொடுத்து, அதிக பெருமக்கள் மகாநாட்டில் கலந்து கொண்டு உள்ளார்கள்.

(2) வள்ளல் சபாபதி ஆங்கிலப் பள்ளி கட்டிடத்திற்கு முதலாவதாக நன்கொடை சேர்த்துக் கொடுத்துள்ளது.

(3) பலமுறை ஒரே நாளில் பல சங்கங்களை துவக்கி சாதனை ஏற்படுத்தி உள்ளது.

(4) ஆண்டுதோறும் பள்ளியில் ப்ளஸ்+2, பத்தாம் வகுப்பு மாணவர்களுக்கு ஊக்கப்பரிசு வழங்கி வருகிறது.

(5) தெ.ஆ. மாவட்ட சங்கத்தை இரண்டாகப் பிரித்து செயல்பாடுகளை எளிதாக்க வழி செய்யப்பட்டுள்ளது.

(6) மாநில சங்கம் அறிவித்த உண்ணாவிரதப் போராட்டம் சிறப்பாக நடைபெற்றது.

(7) தலைவர் மீது பொய் வழக்கு காரணமாக கைது செய்யப்பட்ட போது அரசை எதிர்த்து போஸ்ட்டர்களும் பெரிய கண்டன பேரணியும், கண்டனக் கூட்டமும், மாநிலத்திலேயே முதலாவதாக செய்த மாவட்டம் ஆகும்.

**மக்கள் தொகை:**

தெ.ஆ. மாவட்டம் தெற்கில் மட்டும் சுமார் 40,000 (நாற்பது ஆயிரம், செங்குந்தர்கள் உள்ளார்கள்.

தென்னிந்திய செங்குந்தர் 16ஆவது மாநில சமூக, கைத்தறி, மகளிர், இளைஞர் மாநாடு சிறப்பாக அமைய எங்களது ஒத்துழைப்பையும், பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்படிக்கு,

23—3—91

**ஆ. ராஜவேலு,**
பொதுச்செயலாளர்.

தென்னாற்காடு மாவட்ட
செங்குந்த மகாஜன சங்கம், (தெற்கு).



வாழ்க செங்குந்தம்!

வளர்க செங்குந்தர்!

# திண்டுக்கல் செங்குந்த மகாஜன சங்கம்

1985-ஆம் ஆண்டுவரை மதுரை மாவட்டத்துடன் சேர்ந்து இருந்தது. 15—09—1985-ஆம் ஆண்டு திண்டுக்கல், "அண்ணா மாவட்டமாக" மலர்ந்தது. அதன் பிறகு 16–11—1986-ஆம் ஆண்டு பல சான்றோர்களின் உதவியாலும் நீலமலைக் கோட்டை உயர்திரு. நடராஜ செங்குந்தர் அவர்களின் பெருமுயற்சியால் "திண்டுக்கல் செங்குந்த மகாஜன சங்கம்" நிறுவப்பட்டது.

மிக குறுகிய காலகட்டத்தில் சங்கம் ஆரம்பிக்கப்பட்டாலும் மிகச்சிறப்பாக செயல்பட துவங்கி கடந்த 22–09—1988-ஆம் ஆண்டு ஒரு மாபெரும் சிறப்புமிக்க "மாவட்ட மாநாட்டை", "கொடைக்கானல்—பூம்பாறையில் நடத்தி தனது முதல் முத்திரையைப் பதித்தது. இம் மாநாட்டைக் கண்டு மாநிலத் தலைவரே வியக்கும் வண்ணம் அமைத்த பெருமை எங்களது சங்கத்திற்கு உண்டு.

இதுவரை சுமார் 27 கிளைச் சங்கங்களை அமைத்துள்ளோம். மேலும் பல கிளைச் சங்கங்களை அமைக்க உள்ளோம். கிளைச் சங்கங்களில் கோஷ்டி பூசல் இருப்பதால் அதனை சீராக அமைக்க இயலாமல் போய்விடுகின்றன. எந்த ஒரு சங்கமும் தனிப்பட்ட மனிதரால் அமைவது கிடையாது. பல சமூக சான்றோர்கள் ஒருங்கே அமைந்து ஒற்றுமையுடன் விளங்கினால்தான் சங்கம் சிறந்து விளங்கும்.

எங்களது சங்கத்தின் மூலம் படிக்க வசதியற்ற இளைஞர்களுக்கு ஊக்கத் தொகை வழங்கி அவர்களின் வாழ்வில் ஒளிவீசவும், மேற்படிப்புக்காகவும், வேலை வாய்ப்புகளை கொடுக்கவும் எங்களால் முடிந்தளவு முயற்சி செய்து உதவி வருகின்றோம்.

கிளைச் சங்கங்கள் நெருங்கிய தொடர்பில்லாமல் இருப்பதால் முழுமையாக செயல்பட முடியவில்லை. விரைவில் அதற்கு தக்கவொரு நடவடிக்கை எடுத்து நமது சமூகம் மேன்மேலும் வளர்ந்து நம் சமூக மக்களிடையே மிகவும் பயனுள்ளதாக நமது சங்கம் அமைய பாடுபடுவேன் என்பதனை இதன் மூலம் தெரிவித்துக் கொள்கிறேன்.

நன்றி!

செயலாளர்
ஏ. நடராஜ முதலியார்,
நீலமலைக் கோட்டை.

தலைவர்
சி. குப்புசாமி (எஸ். கே. சி.)
திண்டுக்கல்.

# ரூ.1000 நன்கொடை அளித்த அன்பர்கள்:-



திருவாரூர். திரு. K. தில்லை விநாயக செங்குந்தர்
- தையல்நாயகி



கும்பகோணம். துணைத்தலைவர்.
திரு. N. சண்முக செங்குந்தர் - செண்பகவல்லி



மஞ்சக்கொல்லை. திரு. தி. சாமிநாத செங்குந்தர்
- மீனாட்சி அம்மாள்



மன்னார்குடி. அமரர் திரு. R.N.S. சாரதாம்பாள்

# ரூ.1000 நன்கொடை அளித்த அன்பர்கள்:-




சென்னை திரு. T.S. சுப்பிரமணிய செங்குந்தர்
- லட்சுமி அம்மாள்



ஜெயங்கொண்டம் செங்குந்தர் திருமண மண்டபம்



திருவாரூர். Dr. சரோஜினி சேதுராமன் - திரு. சேதுராமன்



மஞ்சக்கொல்லை. Rm. P.R. சிங்காரவேல் செங்குந்தர்
- பொன்னம்மாள்



# தென்னாற்காடு மாவட்ட செங்குந்த மகாஜன சங்கம் (வடக்கு)

738, நேருஜி ரோடு மாடியில், விழுப்புரம் - 605 602.

## மாவட்ட அறிக்கை

**தொடக்க நாள்:** 18—3—90.

**கிளைச் சங்கங்களின் எண்ணிக்கை:** 46

**மக்கள் தொகை:** 21,300 பேர் (தோராயமாக).

## செயல்பாடு

(1) 1990-ஆம் ஆண்டு மார்ச்சு திங்கள் 18-ம் நாள் ஒருங்கிணைந்த தென்னாற்காடு மாவட்டம் வடக்கு, தெற்கு என்று இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. அதுமுதல் தென்னாற்காடு மாவட்டம் விழுப்புரத்தை அலுவலமாகக் கொண்டு செவ்வனே செயல் பட்டு வருகிறது.

(2) 5—4—90-ல் விழுப்புரம் அலுவலகத்தில் நடைபெற்ற செயற்குழு கூட்டத்தில், தொழில் முனைவோர் திருமிகு. எத்திராஜ் அவர்களை புரவலராகக் கொண்டு மாவட்ட சங்கத்திற்கு நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

(3) 24—4—90-ல் 15-வது செங்குந்தர் மாநில மாநாடு எழுச்சிப் பேரணி விளக்கச் சுற்றுப்பயணம் மாநில தலைவர் திரு. சுத்தானந்தம் அவர்களால் மாவட்டம் முழுவதும் மேற்கொள்ளப்பட்டது. அன்றைய தினத்தில் டி. புதுப்பாளையம் என்ற ஊரில் இளைஞர் அணி துவக்க விழாவும், கெடார் என்ற ஊரில் செங்குந்த மகாஜன சங்க துவக்க விழாவும் மிக சிறப்பாக நடைபெற்றது.

(4) மே, 12, 13 தேதிய 15-வது மாநில மாநாட்டுக்கு மாவட்டத்தின் சார்பாக பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட செங்குந்த குல பெரியோர்களும், இளைஞர்களும், நூற்றுக்கும் மேலான வாகனங்களில் வந்து சிறப்பித்தனர். தென்னாற்காடு மாவட்டத் திற்கு தனியே திருமண மண்டபம் ஒதுக்கீடு செய்திருந்தது குறிப்பிடத்தக்கதாகும்.

(5) 28—7—90-ம் தேதி எங்களது மாவட்டம் தென்னாற்காடு மாவட்டம் (தெற்கு) இணைந்து கடலூரில் தொழில் முனைவோர் திரு. கே. கே. இராமசாமி, பி.ஈ., எப்.ஐ.ஈ., டி.எஸ்.எஸ்., திரு. என். திருவேங்கடசாமி, திரு. ஆர்.எம். கந்தசாமி ஆகியோரின் தொழில் அனுபவங்களுடன், அரசு துறையைச் சேர்ந்த அதிகாரிகளும், வங்கி பிரதிநிதிகளும் கலந்து கொண்டு நடத்திய தொழில் முனைவோர் கருத்தரங்கு நெசவாளர் நெஞ்சத்தின் ஆர்வத்தை ஊட்டியது.



# திருவண்ணாமலை சம்புவராயர் (வடார்க்காடு) மாவட்ட செங்குந்தர் சங்கம்

21—1—1984 அன்று திருப்பத்தூர் திரு. கே.ஏ.எஸ். பத்மநாப முதலியார் அவர்கள் தலைமையில் வடார்க்காடு மாவட்ட செங்குந்தர் சங்கம் குடியேற்றம் வேதாந்த தமிழ் வாசக சாலை திருமண மண்டபத்தில் தொடங்கப்பட்டது. தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் மாநில அமைப்பாளர் மயிலாடுதுறை திரு. ச.கு.பா. பழநிவேல் அவர்கள் தொடக்க விழாவிற்கு வருகை தந்து மாவட்ட சங்கப் பெயர்ப்பலகையைத் திறந்து வைத்து அமைப்புப் பற்றி விளக்கிப் பேசினார். மாநில சங்கப் புரவலர் டி. சேது ராமன் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். டாக்டர் சி. பாலசுப்பிரமணியம், டாக்டர் தி.ரா. செல்வராாசன் ஆகியோர் சிறப்புரையாற்றினர்.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் விதிமுறைகளைப் பின்பற்றி இம்மாவட்ட சங்கம் கிளைச்சங்கங்களை நிறுவி சமுதாய மேம்பாட்டுக்குரிய ஆக்கப் பணிகளைச் செய்து வருகின்றது. மாநில சங்கத்தின் முன்னாள் தலைவர் பத்மஸ்ரீ நாச்சிமுத்து, பி.ஏ. பி.எல்., அவர்களின் வேண்டுகோளின்படி செங்குந்தர் மக்கள் தொகைக் கணக்கெடுப்புப் பணியை இனிது முடித்துத் தலைமைச் சங்கத்துக்கு அனுப்பப்பட்டது.

தமிழக அரசு ஆணைப்படி அம்பாசங்கர் ஐ.ஏ.எஸ்., அவர்கள் தலைமையில் அமைக்கப் பட்ட குழுவினர் பிற்படுத்தப்பட்ட மக்களைச் சந்திக்க இம்மாவட்டத் தலைநகருக்கு வருகைதந்த போது செங்குந்த மரபினரை மிகவும் பிற்படுத்தப்பட்டவர் பட்டியலில் சேர்க்க வேண்டுமென மாவட்ட சங்கத்தின் சார்பில் கோரிக்கை மனு கொடுக்கப்பட்டது.

எஸ்.எஸ்.எல்.சி மற்றும் +2 தேர்வில் இம்மாவட்டத்தில் உயர்ந்த மதிப்பெண் பெற்ற முதல் மூன்று மாணவ மாணவியர்க்குத் தனித்தனியே ஊக்கப் பரிசு வழங்கப்பட்டது.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் முன்னாள் தலைவர் பெரியவர் கா.அ. சண்முக முதலியார் அவர்களின் நூற்றாண்டு விழாவைத் திருப்பத்தூரில் இம் மாவட்ட சங்கத்தின் சார்பில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

30—9—1989 முதல் வடார்க்காடு மாவட்டம் இரண்டாகப் பிரிக்கப்பட்டபோது திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்ட செங்குந்தர் சங்கமும் தனியே பிரிக்கப்பட்டு செயல்படத் தொடங்கியது. ஆரணி ஆர்.என். சாமி ஜவுளி அதிபர் திரு. ஆர். நாராயணசாமி அவர்கள் தலைமையில் பொறுப்பாளர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## ரூ.1000 நன்கொடை அளித்த அன்பர்கள்:-





திரு. A.P. சண்முகசாமி செங்குந்தர்
திருமதி சுசீலாதேவி
கடலூர்



டாக்டர் திரு P.B. சதாசிவன் M.B.B.S. தம்பதிகள் – சென்னை



திரு. S.D. பொன்னுசாமி செங்குந்தர்
சைதாப்பேட்டை



திரு. அருப்புகோட்டை வெள்ளை கோட்டை செங்குந்தர்
உறவின்முறை நிறுவனர் அமரர் க. சண்முக வேலனார்

இம் மாவட்டத்தில் ஆறு வட்டங்கள் உள்ளன.

1. ஆரணி 2. செய்யாறு 3. வந்தவாசி 4. செங்கம் 5. போரூர்
6. திருவண்ணாமலை.

| | | |
|---|---|---|
| கிளைச் சங்கங்களின் எண்ணிக்கை | 52 | |
| ஆயுள் உறுப்பினர் எண்ணிக்கை | 572 | |
| செங்குந்த மித்திரன் ஆயுள் சந்தா | 341 | |
| அடிப்படை உறுப்பினர் | 1612 | (20—5—91 வரை) |

மாவட்டத் தலைவர் மற்றும் பொறுப்பாளர்கள் மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்து புதிய கிளைச்சங்கங்களை அமைத்து அடிப்படை உறுப்பினர்களைச் சேர்க்க ஆர்வமூட்டி வருகின்றனர்.

மண்டல் குழு அறிக்கையை நடைமுறைப்படுத்தவும் செங்குந்த மரபினரை மிகவும் பிற்பட்டோர் பட்டியலில் சேர்க்கவும் மத்திய மாநில அரசினை வற்புறுத்தி 5—11—90 அன்று தலைமைச் சங்கத்தின் அறிக்கைப்படி திருவண்ணாமலையில் இம்மாவட்டத்தின் சார்பில் எழுச்சிப் பேரணியும் ஒரு நாள் அடையாள உண்ணாவிரதமும் மேற்கொண்டு மாவட்ட ஆட்சித்தலைவரிடம் கோரிக்கை மனு கொடுக்கப்பட்டது.

**நிர்வாகப் பொறுப்பாளர்கள் முகவரி:**

கௌரவத் தலைவர் - புரவலர் - குல கரு

**அருள்மொழி அரசு திருமுருக கிருபானந்த வாரியார்**

107 சிங்கன்ன செட்டித்தெரு, சிந்தாதரிப்பேட்டை சென்னை — 2.

தலைவர்

**ஆர். நாராயணசாமி, (ஆர். என். சாமி)**

8, பிள்ளையார்கோயில் தெரு, சைதாப்பேட்டை, ஆரணி 632 301.

பொதுச்செயலாளர்

**ஏ. குப்புசாமி**

95, பெரியகடை வீதி, திருவண்ணாமலை 606 601.


# தங்கம் மருத்துவமனை

(அரசு அங்கீகாரம் பெற்ற குடும்பக்கட்டுப்பாட்டு நிலையம்)

Dr. R. குழந்தைவேல், M.B.B.S.,M.D.

1. E.C.G. எடுக்கப்படும்.
2. தீவிர சிகிச்சை பகுதி 24 மணி நேரமும் செயல்படும்.
3. அறுவை சிகிச்சை வசதி உண்டு.
4. மகப்பேறு குழந்தைகள் நலப்பகுதி.
5. 24 மணி நேரமும் லேப் எஸ்க்ரே வசதி உண்டு.
6. அல்ட்ரா சவுண்ட் ஸ்கேன் வசதி உண்டு.

Dr. Mrs. மல்லிகா, M.B.B.S.

மகப்பேறு மருத்துவர்

உள்ளுறை மருத்துவ அதிகாரி

29-G, டாக்டர் சங்கரன் ரோடு, நாமக்கல்.

போன்: 2795 வீடு: 2695

போலியோ சொட்டு மருந்தும் தடுப்பு ஊசியும் போடப்படும்.

# ரூ. 1000/– அளித்த அன்பர்கள்



வா.வா. முருமகச மசங்குநதர                திருமதி ராசமமாள்

தலைவர், ஜெயங்கொண்டம், செங்குந்தர் திருமண மண்டப குழு



திரு E.S. தியாகராச செங்குந்தர் தம்பதிகள் Ex. M.L.A.

பொதட்டூர் பேட்டை



திரு. திருமயிலை M.B. பாண்டுரங்கம் .Bcom.

திருமதி கமலாட்சி



திரு. M.M. தனிகைமலை

திருமதி மீனாட்சி தனிகைமலை வடபழனி , சென்னை

# புதுச்சேரி ஒன்றிய நிலவரை செங்குந்தர் பெருமக்கள் சங்கம்

165, தியாகு முதலியார் வீதி, புதுச்சேரி - 605 001.



| | | |
|---|---|---|
| தலைவர் | : | நா. கோவிந்தசாமி. |
| துணைத் தலைவர்கள் | : | வேல். சொக்கநாதன், செ. கோதண்டபாணி. |
| பொருளாளர் | : | க. முத்துக்கருப்பன். |
| பொதுச்செயலாளர் | : | சிங்கார. ஆடியபாதம். |
| இணைச் செயலாளர் | : | புவிவேந்தன். |
| துணைச்செயலாளர்கள் | : | ப. இராசாக்கண்ணு, மு. சுப்பிரமணியன். |
| அலுவலகச் செயலாளர் | : | ஆ. அரிமாப்பாமகன். |

**அருஞ்செயல்கள்:** ஏழை மாணவர்களைப் படிக்க வைத்தலும், ஊக்கப்பரிசு அளித்தலும்.

நம் சங்கம் 22—06—1984 அன்று தொடங்கி ஆற்றிய பணிகளையும், இனி ஆற்ற விருக்கும் கடமைகளையும் தங்கள் முன் வைப்பதில் மகிழ்வடைகிறது. தங்கள் ஒத்துழைப்பையும், உதவியையும் நல்க வேண்டுகிறோம்.

**ஆற்றிய பணிகள்**

1. நமது குலப் பெருமக்களின் உள் உணர்வுகளை ஒன்று சேர்த்து ஒருமைப்பாட்டிற்கு வழி வகை செய்யப்பட்டது.
2. நமது சங்கத்திற்கென்று தனி அலுவலகம் திறக்கப்பட்டுச் செயல்பட்டு வருகின்றது.
3. நமது சங்கம் சட்டப்படி பதிவு செய்யப்பட்டது.
4. தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் செயற்குழு மற்றும் பொதுக்குழு கூட்டங்களைத் தமிழகத்திலேயே இதுவரை நடந்திராத அளவில் மிகச் சிறப்பாக ஆனந்தா திருமண நிலையத்தில் நடத்தியது.
5. நமது குல மாணிக்கம் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி மாண்புமிகு டி.என். சிங்காரவேலு B.A.,B.L., அவர்களுக்கும் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத் தலைவர் பத்மஸ்ரீ எம். பி. நாச்சிமுத்து B.A.,B.L., அவர்களுக்கும் புதுவை மாநில சட்டப்பேரவை உறுப்பினர் திரு. ஆர். வைத்தியநாதன் B.A,,B.L., அவர்களுக்கும் இரிசிவந்தியம் தொகுதி சட்டப்பேரவை உறுப்பினர் திரு. எஸ். சிவராஜ் அவர்களுக்கும், திருப்பத்தூர் தொகுதி சட்டப்பேரவை உறுப்பினர் திரு. எஸ்.பி. மணவாளன் அவர்களுக்கும் பாராட்டு விழா நடத்தப்பட்டது.

வெல்க செங்குந்தம்!

வாழ்க வளமுடன்!

சேவலின் கூவல் செவியிலே கேட்குது
செங்குந்த சிங்கமே செயலுக்கு புறப்படு!



16ஆவது மாநில மாநாடு சிறப்பாக நடைபெறவும் அதை ஒட்டி வெளிவரும் மாநாட்டு மலர் சிறக்கவும் வாழ்த்துகிறோம்.



இங்ஙனம்

**செங்குந்த மகாஜன சங்கம்**

86-D, டைப் 3 குவாட்டர்ஸ் வட்டம் 6

**நெய்வேலி - 607 803.**

(தென்னாற்காடு மாவட்டம்.)

6. புதுவையைச் சேர்ந்த நமது குல மாணவர்கள் மேல்நிலை, உயர்நிலைப் பள்ளித் தேர்வுகளில் அதிக மதிப்பெண்கள் பெற்றமையைப் பாராட்டி ஊக்கப்பரிசுகள் வழங்கப் படுகின்றது.

7. நமது குலத்தொழிலுக்குக் 'கைத்தறி வாரியம்' ஒன்றை அமைக்கப் புதுவை அரசை வற்புறுத்தித் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

8. நமது சமுதாயத்திலுள்ள அனைவரையும் சங்கத்தின் ஆயுள் உறுப்பினராகச் சேர்த்து வருகின்றது.

9. நமது சமூகத்தின் பெயரால் கல்வி நிலையம் அமைக்க தீவிர நடவடிக்கை மேற் கொள்ளப்பட்டு வருகின்றது.

**ஆற்றவிருக்கும் பணிகள்**

1. புதுவை மாநிலத்தில் சீரும் சிறப்புமாக விளங்கும் வண்ணம் கல்வி நிலையம் ஒன்றைத் தொடங்கி நடத்துதல்.
2. நமது குல ஏழை எளிய மாணவ மாணவிகளைக் கல்வித்தரத்தில் உயர்த்தப் பாடுபடுதல்.
3. நமது சமூகத்தின் ஏழை எளியவர்களுக்கு இலவசத் திருமணம் நடத்த ஏற்பாடு செய்தல்.
4. புதுவை மாநில செங்குந்தர்களின் கணக்கெடுப்பு நடத்துதல்.
5. சங்க உறுப்பினர்களுக்கு உரிமைச்சீட்டு வழங்குதல்.

சங்கத்தின் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் உரிய அறிவுரைகளையும் ஆலோசனை களையும் வழங்க வேண்டுகிறோம்.

இவண்,

**நா. கோவிந்தசாமி செங்குந்தர்,**
தலைவர்.

**சிங்கார. ஆடியபாத செங்குந்தர்,**
பொதுச்செயலர்.


சான்றோரும் குலப்பெரியோரும் பங்கேற்கும் மாநில மாநாடு
சிறப்புற அமைய வாழ்த்துக்கள்!

# N. D. குப்புசாமி செங்குந்தர்

கைத்தறி ஜவுளி உற்பத்தியாளர்கள்
செங்குந்தபுரம்
ஜெயங்கொண்டம் - 621 802.



# தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம்

**தொடக்கம்:**

தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம் 1944-ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 5-ஆம் நாள் கூறைநாட்டில் நடைபெற்ற செங்குந்தர் வாலிபர் சங்கத்தின் 6-ஆவது ஆண்டு விழாவில் ஆரூர் வள்ளல் தி.நா. சபாபதி செங்குந்தர் அவர்கள் தலைமையில் கூறைநாடு திரு. வீ. ரெத்தின செங்குந்தர் பி.ஏ., பி.எல்., அவர்கள் முன்னிலையில் தலைச்சங்க அமைச்சர் திரு. சி. நடராச செங்குந்தர் பி.ஏ., பி.எல்., அவர்களால் தொடங்கி வைக்கப் பெற்று, மன்னைப் பெருமகனார் திரு. பெரி. ராம. நடராச செங்குந்தர் தலைவராகவும், கூறைநாடு திரு. ச.கு.பா. பழநிவேல் செயலாளராகவும் அமையப் பெற்று செயல்படத் தொடங்கியது.

**மாநாடுகள்:**

17—3—45-இல் ஈரோடு திரு. எஸ். மீனாட்சிசுந்தர செங்குந்தர் பி.ஏ., எல்.டி., அவர்கள் தலைமையில் முதலாவது மாநாடு கூறைநாட்டில் நடைபெற்றது. அம் மாநாட்டில் தென்னாப்பிரிக்கா டிரான்ஸ்வால் செங்குந்தர் சங்கம் அனுப்பிய நன்கொடை தொகையில் செலவு போக மிஞ்சிய ரூபாய் 877-66 பைசாவை சங்கத்தின் மூலதனமாகக் கொண்டு செயலாற்றத் தொடங்கியது.

9—9—1947-இல் சிக்கல் சிங்காரவேலர் திருக்கல்யாண மண்டபத்தில் கைத்தறிக் காவலர் எம்.பி. நாச்சிமுத்து செங்குந்தர் பி.ஏ., பி.எல்., அவர்கள் தலைமையில் இரண்டாவது மாநாடு நடைபெற்றது. அம்மாநாட்டில் ஆக்கூர் தியாகி சு. இராமலிங்க செங்குந்தர் அவர்கள் மாவட்டத் தலைவராகப் பொறுப்பேற்றார்கள்.

1—7—1951இல் திருமருகலில் தலைச்சங்க அமைச்சர் சி. நடராசசெங்குந்தர் பி.ஏ.,பி.எல். அவர்கள் தலைமையில் 3-ஆவது மாநாடு நடைபெற்றது. அம்மாநாட்டில் திருமலைராயன் பட்டினம் திரு. சே. பழநிவேல் அவர்களைச் செயலராக நியமனம் செய்தனர். ஆனால் அவர் சிலநாட்களில் அயல்நாடு செல்ல விரும்பி ராஜினாமா செய்தார். பின்னர் குத்தாலம் வீ. சம்பந்தம் அவர்களைச் செயலாளராகவும், கூறைநாடு திரு. ச. கு. பா. பழநிவேல் அவர்களை பொதுச் செயலராகவும் நியமனம் செய்தனர்.

27—1—1957-இல் சுந்தரப்பெருமாள் கோயில் சௌந்தரராச பெருமாள் கோயில் திருமுன்னர் திருப்பத்தூர் திரு. கா.அ. சண்முக செங்குந்தர் அவர்கள் தலைமையில் 4-ஆவது மாநாடு சென்னை மாநில உள்துறை அமைச்சர் கனம் எஸ். எஸ். ராமசாமி படையாட்சி அவர்களால் தொடங்கி வைக்கப்பட்டது. புதுவை மாநில அமைச்சர் திருமலைராயன் பட்டினம் கனம் சோம. தெட்சிணாமூர்த்தி அவர்கள் சமூகக்கொடியை ஏற்றி வைத்தார்கள்.

**நமது வெள்ளி விழா:**

நமது சங்கம் தனது இருபத்தைந்தாம் ஆண்டு நிறைவை 17—12—1970-ஆம் நாள் திருவாரூரில் ஆரூரான் திருமண மண்டபத்தில் பத்மஸ்ரீ எம்.பி. நாச்சிமுத்து செங்குந்தர்

அவர்கள் தலைமையில் பொள்ளாச்சி தொழிலதிபர். நா. மகாலிங்கம் அவர்களால் தொடக்கி வைக்கப் பெற்று சீரும் சிறப்புமாக நடைபெற்றது. மாநிலத்தின் பல்வேறு பகுதியிலிருந்தும் செங்குந்தர் பெருமக்கள் வருகை தந்து சிறப்பித்தார்கள். அன்று செங்குந்தர்களின் சிறப்பு பெட்டகமாக நமது தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம் ஒரு வெள்ளிவிழா மலரை வெளியிட்டு சிறப்பு பெற்றது. அம்மலர் இன்று நமது செங்குந்த சமுதாயத்திற்கு ஒரு சிறந்த கலைக்களஞ்சியமாக விளங்குகின்றது.

**கல்வி நிதி:**

நமது குறிக்கோளாகிய கல்வி முன்னேற்றத்திற்கு உதவி புரியும் பொருட்டு 17—3—1945-இல் திருவாரூர் திரு. தி.நா. சபாபதி செங்குந்தர் அவர்களைத் தலைவராகவும், மஞ்சக்கொல்லை திரு. இராம. சம்பந்தமூர்த்தி அவர்களையும் கூறைநாடு திரு. ச.கு.பா. பழநிவேல் அவர்களையும் கூட்டுச் செயலர்களாக நியமனம் செய்து தஞ்சை ஜில்லா செங்குந்தர் கல்விநிதி என்ற நிறுவனம் அன்றே ஆரூர் வள்ளல் சபாபதி அவர்கள் அளித்த 2001 வெண் பொற்காசுகளை மூலதனமாகக் கொண்டு செயல்படத் தொடங்கியது.

நிதிக்குப் பெருந்தொகை சேர்க்க எண்ணி தலைவர்களும் தொண்டர்களும் திருவாரூர், மஞ்சக்கொல்லை, கூறைநாடு, சிக்கல், நாகூர்-முட்டம், சீர்காழி, கீழையூர், நாங்கூர், இலுப்பைப்பட்டு, சுந்தரப்பெருமாள் கோயில், குத்தாலம், மன்னார்குடி, மணக்குடி, மணக்கால் அய்யம்பேட்டை, புத்தகரம், ஆவராணியபுதுச்சேரி, இலுப்பூர், குடவாசல், ஆத்தூர், திருமயிலாடி, தலைஞாயிறு, கதிராமங்கலம், ஆழியூர், குறிஞ்சிபாடி, மாநாடு, மாப்பிள்ளைகுப்பம், அம்மையார் குப்பம், ஆகிய ஊர்களில் நிதிவசூல் செய்தார்கள். ரூ. 16771-59 பைசா கிடைத்தது. பெற்ற நிதியை வட்டிக்குக் கொடுத்து, கிடைத்த தொகையைக் கொண்டு 1945—46-ஆம் கல்வியாண்டில் முதன் முதலாக 11 மாணவர்களுக்கு 111-25 உதவித் தொகை வழங்கத் தொடங்கி கடந்த 46 ஆண்டுகளாக இன்றைய வரையில் 1504 மாணவர்கள் வரையில் சுமார் 20 லட்சம் ரூபாய்க்கு மேல் உதவி நிதி அளித்துள்ளோம்.

**உண்டியல் நிதி:**

நிதியின் வட்டி வருவாயிலிருந்து உதவி விரும்பி வருகிற அனைத்து தகுதியுள்ள மாணவர்களுக்கும் உதவி செய்ய இயலாத நிலையை உணர்ந்து செயற்குழு ஆரூர் வள்ளல் சபாபதி செங்குந்தர் அவர்களின் ஆலோசனைகளின்படி 22—8—1951-இல் நம்மாவட்டத்தில் உள்ள நம் குல வணிகர்களில் சிறிய பெட்டிக்கடை முதல் பெருவணிகர் வரை ஒவ்வொரு வருக்கும் ஒரு உண்டியல் கொடுத்து அவரவர் அன்பின்படி அன்றாடம் ஒரு தொகையை அதில் சேமிக்கச் செய்தும், தறிநெசவு கொடுக்கும் முதலாளிகள் பாவு ஒன்றுக்கு சிறு தொகை பிடித்தம் செய்து உண்டியல் சேமிக்கச் செய்தும், ஆண்டுதோறும் உண்டியல் நன்கொடை என்ற தலைப்பில் நடப்பாண்டு வரையில் வசூல் செய்து வருகிறோம். சென்ற ஆண்டில் 25114/- கிடைக்கப் பெற்றோம்.

**ஊக்கப் பரிசு:**

13—2—1966-இல் செம்பனார்கோவிலில் நடைபெற்ற செயற்குழு மாணவர்களை ஊக்குவிக்கும் பொருட்டு கூடுதல் மதிப்பெண் பெறும் மாணவர்களுக்கு ஊக்கப் பரிசளித்துப் பாராட்டுவதென்று தீர்மானித்து செயல்படத் தொடங்கியது. அண்மையில் 25-ஆவது பரிசளிப்பு விழா சீரும் சிறப்புமாக திருமருகலில் நடைபெற்றது. தொடக்க முதல் எஸ்.எஸ்.எல்.சி-யில் சென்ற ஆண்டுவரை 349 மாணவர்களும் 12-ஆம் வகுப்பு மேல்நிலை இறுதியாண்டில் 82 மாணவர்களும் நமது சங்கத்தினால் பரிசளிக்கப்பட்டு, பாராட்டுதலையும்

வாழ்த்துக்களையும் பெற்றுள்ளார்கள். இன்றுவரை இந்தத் திட்டத்தின்கீழ் நாம் சுமார் ரூ. 60000/- வரையில் பரிசுத் தொகை அளித்துள்ளோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

**நிதி நிலை:**

நமது சங்கம் 1. உண்டியல் நிதி 2. வட்டி வருமானம் 3. திருமண நன்கொடை 4. பழைய மாணவர்கள் அன்பளிப்பு (கற்பகத்தரு) 5. ஊக்கப்பரிசளிக்க நிறுவியுள்ள அறக்கட்டளையின் வட்டி ஆகியவற்றை வருமானமாகக் கொண்டு, 1. மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் 2. மாணவர்கட்கு கடன் உதவித் தொகை 3. ஊக்கப்பரிசுகள் 4. பொது பாராட்டு விழாக்கள் 5. அலுவலக நிர்வாகம் ஆகியவற்றை ஆண்டு தோறும் உத்தேசமான பட்ஜெட் பொதுக்குழுவில் அங்கீகாரம் பெற்று செயல்பட்டு வருகிறது. சென்ற 31—3—91 வரை முடிவடைந்த கணக்குப்படி நமது ஆஸ்தி அறக்கட்டளைகள் உள்பட 1,44,857-79 என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். நடப்பாண்டில் மேலும் பலர் அறக்கட்டளைகள் நிறுவ உள்ளனர் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

**சங்கப் பதிவு:**

நமது சங்கம் தொடக்கத்தில் தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன சங்கம் என்றும், தஞ்சை ஜில்லா செங்குந்தர் கல்விநிதி என்றும் இரண்டு நிறுவனங்களாக செயல்பட்டு வந்ததை ஒருங்கிணைத்து தஞ்சை ஜில்லா செங்குந்த மகாஜன கல்விச் சங்கம் என்ற ஒரே நிறுவனமாக அமைத்து 15—4—1977-இல் மயிலாடுதுறை மாவட்டப் பதிவாளர் அலுவலகத்தில் 1860-ஆம் ஆண்டு 11-ஆவது சட்டப்படி பதிவு எண். எஸ்.என். 3/1977 எனப்பதிவு செய்யப்பட்டுள்ளது. இச்செயல்பாட்டில் பெருமுயற்சி எடுத்துக் கொண்ட சிறப்பு ஆக்கூர் தியாகி இராமலிங்க செங்குந்தர் அவர்களைச் சாரும்.

**சங்க அமைப்பு:**

சென்ற 26—7—1981-ஆம் ஆண்டு முதல் மன்னார்குடி திரு. ஆர்.என். சந்தானராஜ கோபாலன் அவர்கள் தலைமையில் நமது சங்கம் செயல்பட்டு வருகிறது. சட்டப்படி 3 ஆண்டுகளுக்கு ஒரு முறை தேர்தல்களும், ஆண்டுதோறும் வரவு செலவு கணக்குகளும் அரசு அங்கீகாரம் பெற்ற தணிக்கையாளர்களால் தணிக்கை செய்யப்பட்டு பொதுக்குழுவில் அங்கீகாரம் பெறப்பட்டு வருகிறது.

**கிளைச்சங்கங்களும், கோட்ட அமைப்பும்:**

இன்றைய நிலையில் 77 ஊர்களில் செங்குந்த மகாஜன கல்விச் சங்கம் என்ற பெயரில் கிளைகள் செயல்பட்டு வருகின்றன. கிளைச்சங்கங்களின் செயல்பாடுகளை சிறப்புற செயல்பட நமது மாவட்டத்தை 1. தில்லையாடி வள்ளியம்மை கோட்டம் 2. ஞானியார் கோட்டம் 3. திருப்பூர் குமரன் கோட்டம் 4. ஒட்டக் கூத்தர் கோட்டம் என்று நான்கு கோட்டங்களாக அமைத்து சிறப்புற செயல்பட்டு வருகிறோம்.

**உறுப்பினர் தகுதி:**

ரூ. 25 செலுத்தி மாவட்ட சங்கத்தில் ஆயுள் உறுப்பினராக பதிவு செய்து கொண்டுள்ளவர்கள் நமது சங்கத்தின் பொதுக்குழு உறுப்பினர்களாக உரிமை பெற்றுள்ளார்கள். இதுவரையில் 1008 பேர் ஆயுள் உறுப்பினர்களாக உள்ளனர்.

# ரூ.1000 வழங்கிய அன்பர்கள்



திரு. சு.சபாபதி செங்குந்தர் தம்பதிகள்
சென்னை.



திரு. ப.கோவிந்தராஜ் செங்குந்தர் தம்பதிகள்
மாரியம்மன் கோவில்.




திரு. A.செல்லையா செங்குந்தர் தம்பதிகள்
ராஜபாளையம்.



டாக்டர். பிரேமநாதன் M.B.B.S., தம்பதிகள்

**பொது:**

நமது சங்கம் தொடக்க காலம் முதல் 4 மாநாடுகளை நடத்தி, அதன் பின்னர் ஆண்டு தோறும் பரிசளிப்பு விழாக்களை மாவட்டத்தின் பல்வேறு ஊர்களிலும் சிறப்பாக மாநாடு போன்று நடத்தி மாவட்டத்தில் உள்ள அனைத்து உறவினர்களும் பங்கு பெறச் செய்து நமது திட்டங்களை நிறைவு பெறச் செய்து வருகிறோம்.

**மாநில சங்கத்திற்கு நமது ஒத்துழைப்பு:**

மாநில சங்கம் விடுக்கும் அனைத்து செயல்பாடுகளுக்கும் உறுதுணையாக செயல்பட்டு வருகிறோம். சிறப்பாக சென்னையில் நடைபெற்ற பேரணியில் பெருந்திரளாக கலந்து கொண்டும், குடந்தையில் நடைபெற்ற உண்ணாவிரதத்தில் 1000-க்குமேல் கலந்து கொண்டும் சிறப்பித்துள்ளோம். தலைமைச் சங்க ஆயுள் உறுப்பினராக 198 பேரும், செங்குந்த மித்திரன் ஆயுள் உறுப்பினராக 128 பேர்களும், அடிப்படை உறுப்பினர் 3709 பேர்களும் சேர்ந்துள்ளனர் என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறோம்.

**கற்பகத்தரு:**

சென்ற ஆண்டில் நமது சங்கத்திலிருந்து உதவி பெற்று இன்று நல்ல நிலையில் வாழ்க்கை நடத்தும் பழைய மாணவச் செல்வங்களை அணுகி அவர்களிடமும் தொகையாக அவர்கள் பெற்ற தொகைக்கு மேல் பெற்று கற்பகத்தரு அறக்கட்டளை என்ற ஒரு அறக்கட்டளை நிறுவ ஏற்பாடு செய்தோம். நாம் எதிர் பார்த்த அளவில் நிதி பெற இயலவில்லை. இன்றைய நிலையில் 1000-க்கு மேற்பட்ட பழைய மாணவர்கள் சிறப்பாக வாழ்க்கை வசதி களை இறைவன் திருவருளால் பெற்றுள்ளார்கள். அவர்கள் பெற்ற தொகையை அன்பளிப்பாக திருப்பி கொடுத்தால் கூட ஒரு லட்சத்திற்கு நிதி வசூலாகுமென்று எதிர் பார்க்கிறோம். ஆனால் இன்றுவரை நன்றி மறவாத நல்லோர்களாக 85 மாணவர்கள் மட்டுமே நன்கொடை வழங்கியுள்ளனர். அதன் கூடுதல் தொகை ரூ. 7760/- என்பதை அன்போடு தெரிவித்துக் கொள்கிறோம். இன்றைய நிலையில் கிளைச்சங்கங்களும் அம் மாணவர்களுக்கு உதவி அளிக்க பரிந்துரை செய்த பேரன்பர்களும் எல்லாவற்றிற்கும் மேலாக இறைவன் திருவருளும் பழைய மாணவர்களில் உள்ளத்திலே புகுமாயின் நிச்சயமாக இதை ஆண்டு முடிவிற்குள் கற்பகத்தரு அறக்கட்டளை பெருந்தொகையை எய்தும் என்பதில் ஐயமில்லை.

**வள்ளல் சபாபதி ஆங்கிலப்பள்ளி:**

நமது சங்கம் சென்னை ஆரிங்டன் சாலையில் கட்டி முடித்துக் கொண்டிருக்கும் வள்ளல் சபாபதி ஆங்கிலப்பள்ளி கட்டடத்திற்கு ஓர் அறையை நிறைவு செய்வதற்காக ரூ. 25000/- கொடுக்க ஏற்றுக் கொண்டுள்ளது. நமது மாவட்ட பெருமக்கள் அன்பினால் இதுவரை 16900/- கொடுத்திருக்கிறோம். மேலும் பலர் உதவி செய்ய முன்வந்திருப்பதை அறிகிறோம். இந்த ஆண்டு முடிவிற்குள் வாக்களித்த தொகையை தலைமைச் சங்கத்திற்கு அளிப்பதற்கு உங்களுடைய பேரன்பையும், ஒத்துழைப்பையும் வேண்டுகிறோம்.

**மக்கள் கணக்கெடுப்பு:**

நமது மாவட்டச் சங்கம் 1950-ஆம் ஆண்டு முதல் பத்து ஆண்டுகளுக்கு ஒரு முறை நமது செங்குந்தர் மக்கட்தொகை, கல்வி, பொருளாதாரம், தொழில், வேலை வாய்ப்பு போன்ற புள்ளி விவரங்களைத் துல்லியமான முறையில் எடுத்து வருகிறோம். கடந்த 1990—ஆம் ஆண்டு எடுத்த கணக்குப்படி நமது மாவட்டத்தில் 127 ஊர்களில் (ஒரு குடும்பம் இருந்தாலும் விடுபடாமல்) மக்கள் கணக்கு எடுத்தோம் அதன்படி சுமார் 40000 மக்கள் இருப்பதாகத் தெரிய வருகிறது.



# திருச்சி மாவட்ட
# செங்குந்த மகாசன சங்கம்
## ஜெயங்கொண்டம்.

டாக்டர் மு. கருணாநிதி, M.B.B.S., D.C.M., F.C.I.P.,
*பொதுச்செயலர்,*
*திருச்சி மாவட்ட செங்குந்த மகாசன சங்கம்.*

சமுதாய உணர்விற்கும் ஒற்றுமைக்கும் எழுச்சிக்கும் எடுத்துக்காட்டாக விளங்கும் (1948-ல் திருவானைக்காவலில் விளந்தை அமரர் திரு. சிவசிதம்பர செங்குந்தர் அவர்களின் பெரும் முயற்சியால், 8-ஆவது மாநில மகாநாடு சிறப்புற நடந்த) திருச்சி மாவட்டத்தில், நமது உறவு மாணவர்களை ஊக்குவித்து உற்சாகப்படுத்தும் கல்வி பணியை 1968-ம் ஆண்டு முதலே திரு. ஏ.வி. இரத்தினம், எம்.ஏ., பி.எல்., அவர்களைத் தலைவராகவும் திரு. டி.இ. ஆறுமுகம் அவர்களைச் செயலாளராகவும் திரு. எஸ்.வி. குமரசாமி அவர்களை பொருளாளராகவும் கொண்டு அமைக்கப் பெற்றுள்ள ''அரியலூர் கோட்ட செங்குந்தர் கல்வி வளர்ச்சிக் கழகம்'' செம்மையுடன் செய்து வருகிறது. எனினும், சமுதாய மக்களிடையே இன உணர்வை ஏற்படுத்தி, ஒற்றுமை உணர்வை பெருகச் செய்யும் பெரும் நோக்கோடு, 20—5—1979-ல் இலையூர் கிராமத்தில் டாக்டர் திரு. மு. கருணாநிதி, எம்.பி.பி.எஸ்., அவர்களை அமைப்பாளராகவும், திரு. ப.வே. இராமலிங்கம், பி.எஸ்ஸி., பி.எல் அவர்களைத் தலைவராகவும், திரு. து பழனியாண்டி அவர்களைச் செயலாளராகவும் திரு. ப. செல்வராசு, பி.ஏ., அவர்களை பொருளாளராகவும் கொண்டு, ''திருச்சி மாவட்டச் செங்குந்த மகாசன சங்கம்'' தோன்றியது.

''விளையும் பயிர் முளையிலே'' என்பதற்கு உதாரணமாக துவங்கிய 6 மாதங்களிலேயே, மீன்சுருட்டியில் திருச்சிமாவட்டச் சங்கத்தின் வழிகாட்டியும், 50 ஆண்டுகளாக சமுதாயப் பணியில் அயராது உழைக்கும் பெருந்தகையும், தஞ்சை மாவட்டச் சங்கத்தின் பொதுச் செயலாளருமான திரு. ச.கு.பா. பழநிவேல் அவர்களுக்கு, ''சமுதாய பாதுகாவலர்'' என்னும் சிறப்பு பட்டம் அளித்தும் ''மணிவிழா மலர்'' சிறப்புற வெளியிட்டும் ''மணிவிழா — பாராட்டு விழாவை'' மிகப் பெருமளவில் நடத்தியதன் மூலம், மாநில அளவில் சமுதாய பெருமக்களின் கவனத்தை, (துயிலெழுந்த) திருச்சி மாவட்டம் கவர்ந்தது.

மீன்சுருட்டியில் கிடைத்த உற்சாக உணர்வு, ஓராண்டுக்குள்ளாகவே 27—7—80-ல் சமுதாயப் பணியில் என்றென்றும் முன்னணியில் நிற்கும், விளந்தையில், அவ்வூர் இளைஞர்கள் மற்றும் பெருமக்களின் (குறிப்பாக திரு. ஏ.வி. முருகேச செங்குந்தர் திரு. பி.சி. தர்மலிங்க செங்குந்தர், அமரர் திரு. சிவ. தியாகராஜன் ஆகியோர்) அயரா உழைப்பு — ஒப்பிட முடியாத ஒத்துழைப்பால் ''மாநில மாநாடா?'' என வியக்கத்தக்க வகையில் (40 ஆண்டு களாக உறங்கி கிடந்த செங்குந்தர் இனத்தை தட்டி எழுப்பிய) முதலாவது மாவட்ட மாநாடு நடத்த போதுமானதாக அமைந்தது. ''கைத்தறிக் காவலர்'' திரு. எம்.பி நாச்சிமுத்து பி.ஏ., பி.எல்., அவர்களும், ''நெசவாளர் நேசன்'' திரு ஜே. சுத்தானந்தம், பி.எஸ்ஸி,

# ரூ.1000 வழங்கிய அன்பர்கள்



திரு. கோபால்சாமி செங்குந்தர் தம்பதிகள் சென்னை



திரு. சே.மு.பிச்சைய செங்குந்தர் திருமதி. பெரியம்மாள்
கூறைநாடு



டாக்டர். லட்சுமி நாராயணன் டாக்டர். மகாலட்சுமி,
திருவாரூர்.



டாக்டர். நீலாம்பாள் திரு. P.ராமசாமி செங்குந்தர் B.A., B.L.,
சேலம்.

அவர்களும் "முத்தமிழ் அரசு" வாரியார் சுவாமிகளும் மேலும் மாநிலச் சங்க மற்றும் அனைத்து மாவட்டச் சங்கங்களின் பிரமுகர்களும் பிரபல திரைப்பட நடிகர் "நவரசத் திலகம்" திரு. முத்துராமன் அவர்களும் பங்கேற்று சிறப்பித்தது, பெருமைப் படத்தக்கது.

மாவட்டச் சங்கத்தின் நிறுவனர்கள் நால்வரும் எடுத்துக் கொண்ட, ஒப்பிட இயலாத—குறிப்பிடத்தக்க, பெரும் முயற்சியின் பலனாய், பல லட்சங்கள் மதிப்புள்ள அடிமனையை சில ஆயிரங்கள் செலவில், வாங்கி, ஜெயங்கொண்டம் நகரில், "செங்குந்தர் திருமண மண்டபம்" அமைய வித்திட்டனர். மேலும் "ரியல் எஸ்டேட்" தொழில் மூலம் கிடைத்த ரூ. 3 லட்சங்களைக் கொடுத்து "திருமண மண்டபம் கனவை" நனவாக்க அடித்தளம் இட்டனர்.

21—3—82-ல் நடைபெற்ற தேர்தல் மூலம் திரு. எம்.ஆர். பழனியாண்டி செங்குந்தர் அவர்கள் தலைவராகவும், டாக்டர் மு. கருணாநிதி எம்.பி.பி.எஸ்., அவர்கள் செயலாளராகவும், திரு. பி.எம். அண்ணாமலை அவர்கள் பொருளாளராகவும் பொறுப்பேற்று சமுதாயப்பணியில் தீவிரமாக ஈடுபட்டு, நமது உறவினர்களிடையே ஏற்படுத்திய சமுதாய உணர்வின் காரணமாக, திரு. ஏ. வி. முருகேச செங்குந்தர் அவர்களைத் தலைவராகவும், திரு. டி.இ. ஆறுமுகம் மற்றும் திரு. வி.ஏ. ரெத்தின செங்குந்தர் ஆகியோரை செயலாளர்களாகவும், திரு எஸ். வி. குமாரசாமி அவர்களைப் பொருளாளராகவும் கொண்ட 'செங்குந்தர் திருமண மண்டபக்குழுவின்" வசூல் மற்றும் அமைப்பு பணி எளிதாகவும், உற்சாகமூட்டுவதாகவும் அமைந்தது.

29—7—83-ல் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளால் அடிக்கல் நாட்டப்பட்ட திருமண மண்டபம் நிறைவுற்று, மிக விரைவில் குலத்தலைவர் திரு. ஜே. எஸ். அவர்கள் தலைமையில், வாரியார் சுவாமிகளால் மிக விரைவில் திறக்கப்பட இருக்கிறது.

எழுச்சிமிகு இளைஞர் பட்டாளத்தை சமுதாயப் பணியிலே செம்மையுற பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென குலப்பெரியவர்கள் விரும்பியதன் பலனாய் திரு. எம். ஏ. டி. சேகர் பி.ஏ., அவர்களைத் தலைவராகவும், திரு. பி. மாசிலாமணி பி.எஸ்ஸி., அவர்களைச் செயலாளராகவும், திரு. பி. எல். ஆர். முருகன் மற்றும் டி.எஸ். மணி ஆகியோரை பொருளாளராகவும் கொண்ட "மாநிலத்திலேயே முதல் மாவட்ட இளைஞரணி" அமைக்கப் பெற்று, நமது உறவினர்களின் உள்ளம் குளிரும் வண்ணம் செம்மையுற செயலாற்றி வருகிறது. உணர்ச்சிமிக்க மேடைப் பேச்சுக்கள்மூலம், இளைஞர்களிடையே எழுச்சியை ஏற்படுத்தி வரும் மாநிலச் சங்க அமைப்புச் செயலாளர் திரு. து. பழனியாண்டி அவர்களின் பணியால், புத்துணர்வு பெறுகிறது திருச்சி மாவட்டம். திருச்சி மாவட்ட நிகழ்ச்சி ஒவ்வொன்றுமே மகாநாடுதான் எனினும் 4—2—90-ல் கரூரில் நடைபெற்ற வட்டமகாநாடும் 5—11—90-ல் திருச்சியில் நடைபெற்ற உண்ணாவிரதமும் 24—12—90-ல் (பொய்வழக்குகள் காரணமாய் கைது செய்யப்பட்ட தலைவரை விடுதலை செய்யக் கோரி) ஜெயங்கொண்டத்தில் நடைபெற்ற சாலை மறியலும், மாவட்டச் சங்கத்திற்கு பெருமை சேர்ப்பனவாகும்.

சுமார் 1 லட்சம் உறவினர்களையும், 40 கிளைச் சங்கங்களையும் 25 இளைஞரணி அமைப்புகளையும் 2. ஜே.எஸ். நற்பணி மன்ற அமைப்புகளையும் 1 எம்.பி.என். நற்பணி மன்றத்தையும் கொண்டுள்ள திருச்சி மாவட்டம் அடிப்படை உறுப்பினர் சேர்ப்பில் தீவிரம் காட்டி வருகிறது. வழிக்காட்டும் எஸ்.கே.பி. யையும் உற்சாகப்படுத்தி தலைமையேற்று வழி நடத்திச் செல்லும் திரு. ஜே.எஸ். யையும் இருகண்களாக கொண்டு திருச்சி மாவட்ட சமுதாய அமைப்புகள், விறுநடை போடும் என்பதில் ஐயமில்லை.



மதுரை மாவட்ட

# செங்குந்தர் மகாசன சங்கம்

மதுரை.

**தோற்றமும், வளர்ச்சியும்:**

மீனாக்ஷி பட்டணம் என்று சொல்லப்படும் புண்ணிய ஸ்தலங்களில் ஒன்றான மதுரை மாநகரில், டவுன் பகுதிகளான செல்லூர், திருவாப்புடையார் கோவில், கோரிப்பாளையம், தல்லாகுளம், மதிச்சியம், முதலியார் காலனி, குயவர் பாளையம் பகுதிகளிலும், மதுரை டவுனைச் சுற்றியுள்ள 18 ஊர்களிலும் செங்குந்தர் வசித்து வருகிறார்கள்.

மதுரை மாவட்டத்தில் சுமார் 50,000 செங்குந்தர்கள் இருக்கிறார்கள். பெரும்பாலான செங்குந்தர்கள் கைத்தறி நெசவாளர்களாகவும், கூலி வேலை செய்பவர்களாகவும் ஒரு சிலர் கைத்தறி ஜவுளி உற்பத்தியாளர்களாகவும் மிகச் சிலர் விவசாயிகளாகவும் தொழில் செய்து வருகிறார்கள்.

மதுரையிலும், சுற்றியுள்ள கிராமங்களிலும் உள்ள செங்குந்தர் உறவின் முறைச் சங்கங்கள் அனுப்பித் தந்த பிரதிநிதிகளைக் கொண்டு 'மதுரை மாவட்ட செங்குந்தர் மகாஜன சங்கம்' 13—10—74-ல் துவக்கப்பட்டது.

பின்னர் மாவட்டச் சங்கத்திற்கு எல்லாப் பகுதிகளிலும் உறுப்பினர்கள், ஆயுள் உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டு, எல்லா பகுதிகளுக்கும் பிரதிநிதித்துவம் இருக்கும் வகையில் செயற்குழு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு, தேர்ந்து எடுக்கப்பட்ட செயற்குழு உறுப்பினர்களில் தலைவர், துணைத்தலைவர்கள், செயலாளர்கள், பொருளாளர் ஆகிய நிர்வாகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு, மாவட்டச் சங்கம் சமுதாய மேம்பாட்டிற்காக செயல்பட்டு வருகிறது.

மாவட்டத்திற்கு சட்ட திட்டங்கள் வகுக்கப்பட்டு 19—12—75-ல் முறைப்படி சங்கம் பதிவு செய்யப்பட்டது.

செல்லூர், செல்லூர்-அம்மையார்பட்டி உறவின் முறை, செல்லூர்-சாம்பவர் வடகரை உறவின் முறை, செல்லூர்-மண்டலமாணிக்கம் உறவின் முறை, செல்லூர்-பாலக்காடு உறவின் முறை, திருவாப்புடையார் கோவில், கோரிப்பாளையம், குயவர்பாளையம், மதிச்சியம், முதலியார் காலனி, சோழவந்தான், முள்ளிபள்ளம், கொடிமங்கலம், திருப்பரங் குன்றம், பசுமலை, சாமநத்தம், அனுப்பானடி, வண்டியூர், விரகனூர், சிந்தாமணி ஆகிய ஊர்களில் கிளைச் சங்கங்கள் நிறுவப்பட்டு செயல்பட்டு வருகின்றன.

மதுரை மாவட்டத்தில் செங்குந்தர்கள் வசிக்கும் பகுதிகளில் உள்ளவர்கள் ஒருவரை ஒருவர் அறிந்து கொண்டு பழகும் வாய்ப்பினையும், ஒருவருக்கொருவர் முடிந்த அளவில் உதவியாக இருந்து வரும் அமைப்பினையும் மாவட்ட சங்கம் ஏற்படுத்தி தந்துள்ளது.

நம்மவர்கள் வாழும் எல்லாப் பகுதிகளுக்கும் சென்று நம்மவர்களுடன் கலந்து உரையாடியும் கூட்டங்கள் நடத்தியும் 'இன உணர்வு' ஏற்படச் செய்திருக்கிறோம்.

பல ஒற்றுமை திருமணங்களுக்கு ஏற்பாடு செய்து செயல்படுத்தியுள்ளது. வேலை வாய்ப்பு, கல்லூரிகளிலும் இடம் பெறுதல், கல்வி உதவித் தொகை, கல்விச் சலுகைகள் பெறுவது போன்றவைகளில் மாவட்டச் சங்கம் உதவி புரிந்து வருகிறது.

தேர்வுகளில் அதிக மதிப்பெண்கள் பெறும் மாணவ, மாணவியருக்கு ஊக்கப்பரிசுகள் தந்து கல்வி வளர்ச்சிக்கு உதவியாக இருக்கிறது.

நம்மவர்களிடையே சில நேரங்களில் எழும் பிரச்சினைகள், விவகாரங்கள் ஆகியவற்றை சுமுகமாக தீர்த்து வைத்திருக்கிறோம். கஷ்டங்கள் நேரிடும்போது அவைகளை நிவர்த்தி செய்து உதவியிருக்கிறோம்.

மாவட்ட சங்கத்தின் கிளைகளான செல்லூர், பாலக்காடு செங்குந்த முதலியார் உறவின் முறை, திருப்பரங்குன்றம் செங்குந்தர் இளைஞர் சங்கம் ஆகியவை அவர்களது ஸ்தாபனங் களின் வளர்ச்சிக்காக நடத்திய நிகழ்ச்சிகளுக்கு மாவட்ட சங்கம் மிகுந்த ஒத்துழைப்பு தந்திருக்கிறது.

கைத்தறி துணிகளுக்கு ஆதரவு தரக்கோரி விளம்பரம் செய்திருக்கிறோம்.

கைத்தறி நெசவாளர்கள் பிரச்சினைகளை நிரந்தரமாக தீர்ப்பதற்கு மத்திய, மாநில அரசுகள் நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று தீர்மானங்கள் நிறைவேற்றி சம்மந்தப் பட்டவர்களுக்கு அனுப்பியிருக்கிறோம்.

கடந்த 9 ஆண்டுகளாக திரு. ப. சொக்கநாதன் ஆசிரியராக இருந்து 'செங்குந்த மணி' என்ற சமுதாய மாத இதழ் ஒன்று நடத்தி வருகிறார். அந்த மாத இதழுக்கு மாநில அளவில் நல்ல வரவேற்பு இருக்கிறது. மாவட்ட சங்கத்தின் முழு ஆதரவோடும், ஒத்துழைப் போடும் 'செங்குந்த மணி' வந்து கொண்டிருக்கிறது.

முதன் முதலாக மாவட்ட அளவில் மதுரை மாவட்ட சங்கம் மதுரையில் 15—6—80-ல் மிகச் சிறப்பாக மாவட்ட மாநாடு நடத்தி, மதுரை மாவட்ட செங்குந்தர்களிடையே எழுச்சியும், உணர்ச்சியும் ஏற்படச் செய்திருக்கிறோம். மாநாட்டில் மலர் ஒன்றும் வெளியிட்டுள்ளோம்.

மதுரை மாவட்ட செங்குந்தர் இளைஞர் அணி அமைப்பாளராக திரு. எம். சோமசுந்தரம் ஒன்றரை ஆண்டுகளுக்கு முன் தேர்ந்தெடுக்கப்பட்டு, மதுரை மாவட்டத்தில் பல பகுதிகளில் இளைஞர் அணி அமைப்பாளர்கள் நியமனம் செய்யப்பட்டு, இளைஞர் அணியினர் சிறப்பான முறையில் செயல்பட்டு வருகின்றனர். பல பகுதிகளில் மக்கள் தொகை கணக்கு எடுத்து முடித்திருக்கிறார்கள்.

செங்குந்தர் சமுதாயம் கல்வி, பொருளாதாரம், சமுதாயம் ஆகிய துறைகளில் முன்னேற முடிந்த அளவு செயல்பட்டு வருகிறோம்.

மாவட்ட சங்க வளர்ச்சிக்கு ஒத்துழைப்பு தரும் அனைவருக்கும் நன்றி கூறக் கடமை பட்டிருக்கிறோம்.

## ரூ.1000 நன்கொடை அளித்த அன்பர்கள்:-



திரு. நா. கோவிந்தசாமி செங்குந்தர்
புதுவை



திரு. முத்து கருப்ப செங்குந்தர்
புதுவை



திரு வேல் சொக்கநாத செங்குந்தர்
புதுவை



திரு N.S. இரத்தின சபாபதி செங்குந்தர்
மன்னார்குடி

## ரூ.1000 வழங்கிய அன்பர்கள்



திரு. A. தேவராஜ் செங்குந்தர் M.L.A.
செய்யார்



திரு P.C.D. சண்முக செங்குந்தர் B.Com.
சண்முகம் பஸ் சர்வீஸ்
விளந்தை ஆண்டிமடம

## ரூ. 500/– அளித்த அன்பர்கள்



திரு. G.S. துரைசாமி செங்குந்தர்
அம்மையார்குப்பம்



திரு. மு. சண்முகம் MA.MEd.
காஞ்சிபுரம்



திரு ஏ. சம்பந்தம்
காஞ்சிபுரம்

தென்னிந்திய செங்குந்தர் 16-ஆவது மாநில மாநாடு
சிறப்பாக நடைபெற வாழ்த்துகிறோம்!



**தேசுமுகிப்பேட்டை கைத்தறி நெசவாளர் கூட்டுறவு உற்பத்தி விற்பனைச் சங்கம் லிமிடெட், நெ. ஜி. 1265.**

தேசுமுகிப்பேட்டை : திருக்கழுக்குன்றம் (அஞ்சல்)

**செங்கற்பட்டு மாவட்டம்**



தென்னிந்திய செங்குந்தர் 16-ஆவது மாநில மாநாடு
சிறப்பாக நடைபெற வாழ்த்துகிறோம்!

தரத்தில் உயர்ந்தது! விலையில் குறைந்தது!

வாங்கி உபயோகிங்கள்

**V.M.P. மார்க் கைலிகள்**

**V.M. பழநியாண்டி முதலியார் & கோ**

உரிமை :

V.M. பழநியாண்டி முதலியார்,
V. மாரியம்மன் கோவில் வீதி, விழப்பள்ளம்,
குறிஞ்சிப்பாடி PO. தென்னாற்காடு மாவட்டம் - 607 302.

எங்களது நல்வாழ்த்துக்கள்!

## காஞ்சிக்கோயில் நெசவாளர் கூட்டுறவு உற்பத்தி விற்பனைச் சங்கம் லிட்., ஏ ஏ 94.

காஞ்சிக்கோயில் - 638 116, பெரியார் மாவட்டம்.




தரமிகு கைத்தறி துண்டுகள், படுக்கை விரிப்புகள்
தயாரிப்பாளர்கள்:

# காஞ்சி கோ டெக்ஸ்

**சி. குருசாமி,**
உபதலைவர்.

**வை. மாரிமுத்து,**
தலைவர்.

நிர்வாகக்குழு உறுப்பினர்கள்:

**கே.பி. முத்துசாமி, கே. கிருஷ்ணன், பி. ஆறுமுகம், கண்ணம்மாள், சரஸ்வதி.**

**எஸ். சிதம்பரம்,**
துணி நூல் கட்டுப்பாடு
அலுவலர்/செயலர்.



# பெரியார் மாவட்ட
# செங்குந்த மகாஜன சங்கம்

121, ஈஸ்வரன் கோயில் வீதி, ஈரோடு - 638 001.

செந்தமிழ் நாட்டின் சீரினமான செங்குந்தப் பேரினத்தின் முன்னேற்றம் கருதி, மாநிலச் சங்கத்தின் ஆசியோடு பத்மஸ்ரீ எம்.பி. நாச்சிமுத்து செங்குந்தர் அவர்களின் முன்னிலையில் மாநிலப் பொறுப்பாளர்களின் நல்லாதரவுடன் 15—4—1984-இல் ஈரோடு ராணா திருமண மண்டபத்தில் பெரியார் மாவட்டச் செங்குந்தர் மகாஜன சங்கம் தொடங்கப் பெற்றது.

பெரியார் மாவட்டச் செங்குந்தர் சங்கத்தின் தலைவராகக் கல்வித் தந்தை, ஈரோடு கலைக்கல்லூரியின் தலைவர் திருமிகு. ஆர்.ஏ.என். முத்துசாமி செங்குந்தர் அவர்கள், நியமனம் செய்யப் பெற்றார்.

செங்குந்தர் சங்கத்தின் வளர்ச்சியைக் கருதி, பெரியார் மாவட்டத்தில் உள்ள ஒவ்வொரு ஊருக்கும் பலமுறை மாவட்டத் தலைவர், பொதுச் செயலாளர், பொருளாளர் ஆகியோர் நேரில் சென்று, நம் இனமக்களிடையே உற்சாகத்தையும், ஒற்றுமையையும் ஏற்படுத்திய துடன், 7 வட்டச் சங்கங்களையும், 10 ஒன்றியச் சங்கங்களையும், 2 நகரச் சங்கங்களையும், 135 கிளைச் சங்கங்களையும் தொடங்கி வைத்தனர்.

16—8—85 மாவட்டச் சங்கத்தின் தீர்மானப்படி, இந்திய அரசின் 'உத்தியோக ரத்னா' விருது பெற்ற நமது மாநிலத் தலைவர் உயர்திரு. ஜே. சுத்தானந்தன் அவர்களுக்கும், ஜப்பான் போன்ற வெளிநாடுகளுக்குச் சென்று திரும்பிய ஈரோடு கலைக்கல்லூரியின் செயலர் & தாளாளர் திரு. ராணா கே.வி. இலட்சுமணன் அவர்களுக்கும் பொன்னாடை போர்த்தி, நினைவு பரிசுகளைச் சங்கம் வழங்கியது.

9—2—86-ஆம் நாளிட்ட மாவட்டச் சங்கத்தின் தீர்மானத்தின்படி, மாவட்டச் சங்கத்தின் சார்பில், நம்குல வழக்கப்படி, இலவச திருமணம் செய்யப்பெற்று, பரிசும் பாராட்டும் வழங்கப்பெற்று, திருமணமக்கள் நம் சங்க உறுப்பினர்களாகச் சேர்க்கப் பெற்றனர்.

2—3—86-ஆம் நாளில், பஞ்சாயத்து, ஊராட்சித் தேர்தல்களில் வெற்றிபெற்ற 196 தலைவர்கள், மற்றும் உறுப்பினர்களை வரவழைத்துப் பொன்னாடை போர்த்தி, நினைவு பரிசுகளைச் சங்கம் வழங்கியது.

20—3-88-இல் நலிவடைந்த நம் இனமக்களின் உடல் நலம் பேண, ஈரோட்டில் பணியாற்றும் நம் இனத்தைச் சேர்ந்த 65 மருத்துவர்களை ஒன்று சேர்த்து, ஓர் அமைப்பினை ஏற்படுத்தி இலவச மருத்துவ உதவிகள் செய்ய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. இதனால் நூற்றுக்கணக்கான நம் இன மக்கள் பயன்பெற்று வருகின்றனர்.

நம் மக்களின் நிலையை அரசுக்கு உணர்த்தவும், அமைதியாக ஓர் இனம் தமிழகத்தில் வாழ்ந்து வருவதைத் தமிழகம் உணரும் முறையிலும், மாநிலச் சங்கத்தின் தீர்மானத்தின் படியும், சென்னையில் 3—12—88-இல் நடைபெற்ற எழுச்சிப் பேரணிக்குப் பெரியார்

மாவட்டத்தின் சார்பில் சுமார் 106 பஸ்கள், லாரிகள், வேன்கள் ஏற்பாடு செய்யப்பட்டது. பேருந்துச் செலவுகள் மாவட்டச் சங்கத்தால் ஏற்றுக் கொள்ளப் பெற்றன.

மாவட்ட மாநாடு நடந்து முடிந்த வேளையில், நம் மாநிலச் சங்கத்தின் தீர்மானப்படி 5—11—90-ல் நம் மாவட்ட தலைநகரத்தில், நம் இனத்தை மிகவும் பிற்பட்டோர் பட்டியலில் சேர்க்கக்கோரி, ஒருநாள் அடையாள உண்ணாவிரதம் மாவட்டத் தலைவர் திரு. ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார் தலைமையில் நடைபெற்றது. ஈரோட்டில் மாவட்ட ஆட்சியர் அலுவலகம் முன்பு சுமார் 1 கிலோ மீட்டர் தூரத்திற்கு 3000 செங்குந்தர்கள் கலந்து கொள்ள உண்ணாவிரதப் போராட்டம் வெற்றி பெற்றது.

எதிர்காலத்தில் நம் இன மக்களின் நல்வாழ்விற்கும், முன்னேற்றத்திற்கும், மாநிலச் சங்கத்தின் அனைத்துக் கட்டளைகளுக்கும் முழுமையான ஒத்துழைப்பு தருவதில் பெரியார் மாவட்டம் மனம் தளராது என தெரிவித்துக் கொள்கிறோம்.

ஒழுங்கினைக் காப்போம்! உதவிகள் செய்வோம்!! உறவினை வளர்ப்போம்!!!

**ஆர். ஏ. என். முத்துசாமி செங்குந்தர்,**
தலைவர்.

**பி.கே. நஞ்சப்ப செங்குந்தர்,**
பொருளாளர்.

**எம். எஸ். பழனியப்பன்,**
பொதுச்செயலர்.


மாநாடு சிறப்பாக நடைபெற வாழ்த்துகிறோம்.!

தரமான கைத்தறித்துண்டு ரகங்கள் தயாரிப்பு விற்பனையாளர்



**முருகேசன் டெக்ஸ்டைல்ஸ்**

1-A அகிம்சாபுரம், 1-வது தெரு
செல்லூர் மதுரை

உரிமையாளர்: **மா. கன்னையா**

(NSK) மன்ற தலைவர்

புரவலர் மதுரை மாவட்ட செங்குந்த மகாசன சங்கம்

போன்: 48999

*With best compliments from:*

# SRI THYAGARAJAN ENTERPRISES



**Civil Engineers & Consultants**
**Planning - Designing - Estimating**



Builders of Repute Multi storeyed Buildings, Factories, Road Works etc.

---

*Dealings also in F.R.P. Doors, Windows and Vendilators*

---

55/1, 15th Avenue, Ring Road,
(Behind Udayam Theatre) Ashok Nagar, MADRAS - 600 083.

PHONE:
Off: 4822717  Resi: 429 880

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க 16-ஆவது மாநில மாநாடு சிறப்புடன் நடந்தேற வாழ்த்துக்கள்.

நிறுவியது: 1961 தொலைபேசி: **20798**



**தென்னகத்தின் மிகச்சிறந்த கதர் உற்பத்தி நிலையம்**

# ★ நேஷனல் காதி ஸ்டோர்ஸ் ★

**கதர் உற்பத்தியாளர்கள்**

42/3, புது மார்க்கெட், திருப்பூர் - 638 604.

---

**நாங்கள் சுத்த கதரில் வேஷ்டி, துண்டு, வெள்ளை சர்ட்டிங், கலர் சர்ட்டிங், கோட்டிங் மற்றும் சில்க் ரகங்களும் உற்பத்தி செய்கிறோம்.**

தேவைக்கு எழுதுங்கள்.

## உணவு உபசரிப்பு தொண்டர்கள்



திரு. சீ. ஆறுமுக செங்குந்தர்
நாங்கூர்



திரு. N.S. இராமலிங்கம் செங்குந்தர்
மன்னார்குடி



திரு. சுவாமி – இராமலிங்க செங்குந்தர்
பட்டீஸ்வரம்



திரு. V.K. நடேச செங்குந்தர்
செம்பனார் கோயில்



திரு. சுந்தரேச–கலிய பெருமாள்
செங்குந்தர்
பாபனாசம்



திரு. T.V. நடனசபாபதி செங்குந்தர்
கூறைநாடு



திரு. பொ. சென்டாடுவான் செங்குந்தர்
நாங்கூர்



திரு. T. சேகர் செங்குந்தர்
மன்னார்குடி



திரு. N. செல்வராஜ செங்குந்தர்
கும்பகோணம்

